போய்வருகிறேன். தாமசம்வேண்டாம். சீக்கிரமாகவிடையளி. போகட்டுமா? (சரசாங்கி மூர்ச்சையாகின்றாள்.) என் கண்முன்னாலேயேநீ மூர்ச்சித்து விழும்படியான கொடுஞ்சொற் சொல்லும்படி நேர்ந்ததே! என்ன ஈரமில்லா நெஞ்சினனாய்விட்டேன! இதுகாறும் இறவாமலிருந்த யான் சிறிதும் அன்பில்லாதவனே யானேன்!.........(மௌனம்) யான் விரைந்து செல்ல வேண்டுமே! பட்டகாலிலேயே படுமென்பதுபோல என் துக்கம் மேனமேலு மதிகப்படுகின்றதே! யான் எப்படி யுன்னைவிட்டுப் பிரிவேன்?

(பாடுதல்.)

இராகம் - தேசிகத்தோடி. தாளம் - ஆதி.

பல்லவி.

எப்படி யுனைப் பிரிவேன்
என்னுடைய நாயகி.

அநுபல்லவி.

இப்படியும் வரு மென்றே
எண்ணினே னலனே யின்றே (எப்படி)

சரணங்கள்.

முழுக் கொம்பின் றே னுடைந்து
முடவன் கையி லடைந்து
ஒழுக் கெடுத்தே மண் பட்டு
ஒழிந்ததைப்போல நான் விட்டு (எப்படி)

அமுதே நின் மொழி யென்றும்
அகலாதென் மன நின்றும
நம தெணம் நிறை வேற
நாள்வரு மட்டும் வீற (எப்படி)

உள்ளன்ப ருத மாதே
உயிர் சோர்ந் திருக்கும் போதே
கள்ளனைப் போல, ஏங்கி
கடிநகர் தனை நீங்கி (எப்படி)

யானெவ்விதமும் பிரிந்துபோக வேண்டியது தான். ஏ! வண்டுகளே! என் காதலிக்கு யான் வருவே னென்று தேறுதல் சொலவீரோ? என் செய்வேன்! என் செய்வேன்!! உன்மத்தம் பிடித்தவனானேனே! இது (கைவளை யொன்றையவள் கரத்தி லணிகின

ருன்) உனது மெல்லிய தளிர் போன்ற கரத்தில் ஞாபகமாக இருக்கட்டும். பவளக் கொம்பும் வெட்கும்படியான உன் கை விரலிலுள்ள மோதிரத்தை யான் அணிந்து கொள்கின்றேன்! (அவளை மோதிரமொன்றைக் கழற்றித் தானணிந்து கொள்கின்றான். உடனே அதைப்பார்த்து) இதுதான் என்னைக் காப்பாற்ற வேண்டும். மூர்ச்சித்துக் கிடக்கின்ற உன்னை விட்டு யானெப்படிச் செல்வேன! என்மன மெழுந்தாலும் என்கா லெழவில்லையே! என்னங்கம் பதறுகின்றதே! ஐயோ! ஈசா! (நாலடி நகர்ந்து வருகின்றான்.)

(சச்சந்தன் வருதல்.)

**சச்சந்தன்:**—அழகானந்தனு இங்கு நிற்கின்றவன்? என் கட்டளையை மீறி நடப்பவன் நீதானு? அரண்மனையில் நீ குழந்தைபோல் வளார்ந்துவநதவ னுனபடியால் உன்னைக் கொல்லாது ஓடிப்போகும்படி ஆச்ஞாபித்தேன்! (கனகாம்புஜம் மற்றொரு பக்கம் வர) இனி ஒரு நிமிடமாவது தாமதித்து இங்கு நிற்பாயே யானுல் எனது வாளுக கிரையாகி விட்டாய்! நில்லாமல் விரைந்து செல்வாய்! (அழகானந்தன் போக அரசன் திரும்பிக் கனகாம்புஜத்தைப் பார்த்து) எங்கே நம்புதல்வி?

**கனகாம்புஜம்:**—சற்று முன் இங்கிருந்தாளே! சரசே! எங்கிருக்கின்றாய்? (சுறறித் திரும்பிப் பார்தது) இதென்ன கோலம்?

**சச்சந்தன்:**—நமது குமாரத்தியா! இந்தவிடத்தில்! இந்நேரத்தில்! என்ன இந்த அநியாயம்!

**கனகாம்புஜம்**—மகாராஜா! நான் முன்னமே தங்களிடத்திற் கூறவில்லையோ? நம்பமாட்டே னென்றீர்களே! இப்பொழுது பார்த்தீர்களா? தங்கள் குமாரத்தியை மெய்ச்சி மெய்ச்சி யுச்சியிலே வைத்துக்கொணடீர்களே! பொய்த் தூக்க மல்லவோ தூங்குகின்றாள்!

**சச்சந்தன்**—சரிதான். நீ சொல்லிய வெல்லாம் நிஜமே. நீ அந்தப்புரத்திறகுச் செல். இதோ விரைந்து வருகின்றேன்.

(கனகாம்புஜம் போதல்.)

என பழமையாகிய குலத்தைக் கெடுக்கும் கோடாரிக் காம்பாய என வயிற்றிற் பெண்ணெனப் பிறந்த இந்தப் படு நீலியை இவ வாளினுல் இரு துண்டமாய் வெட்டி யெறிந்தா லென்ன? எனககும் என் சுற்றத்தார்க்கும் என்றும மீளாப பழிச் சொல் ஏற்றி வைத்த இவளோ எனக்குப் புதல்வி? இப்படிப்பட்ட அவமானத்தை யடைந்த பின்னரும், உயிரை வைத்திருக்கலாமோ? ஐயோ! இவளைக் கொல்லும்படியாக யான் துணிந்தும், புத்திரி வாஞ்சை என்னைச் சுற்றிக் கொண்டு என் கையை எழும்படி செய்யவில்லையே! என திரண்டு அருமைப் புத்திரர்களை யிழந்த துக்கத்துக்கு

மேலான கொடுந் துயர்க்காளாக்கி யுறங்குகின்றாயோ? உறக்கத்தி னின்றும் விழியாமலே ஈங்கு இறவாயோ?—ஐயோ! என் மனந் துடிக்கின்றதே!—யான் நின்னை நொந்து கொள்வதிற் பய னென்ன? என் தலை விதி யுன்னை யெனக்கு மகளாகப் பிறப்பித்தது! (யோசனை செய்து கொண்டு இரண்டடி நடக்கின்றான்) உன்னைக் கொல்லவும் மனமில்லை.—

(சிங்காரவல்லி வருதல்.)

சிங்காரவல்லீ! ஏனிங்கு வந்தனை?

சிங்காரவல்லி:—மகாராஜா! தங்களை ராணி யவர்கள் உடனே பார்க்க வேண்டு மென்று சொல்லி வரும்படி என்னை யனுப்பினார்கள்.

சச்சந்தன்.—கனகையா உன்னை யனுப்பினாள்? ஆயின் இதோ வந்துவிட்டேன்!

(சச்சந்தனும் சிங்காரவல்லியும் போதல்.)

சரசாங்கி:—(சற்றுக்களை* தீர்ந்து)பிராணநாதா!—(கண்ணைத் துடைத்து விழித்துப் பார்த்து)விளையாடுகின்றீரோ? இப்பொழுது தானோ என்னுடன் விளையாட வேண்டும்? பேதையாகிய என்னிடத்தில் உமது வல்லமையைக் காட்டுவது தகுதியோ? யானிவ்வளவு தூரம் இரங்கிக் கேட்டுக் கொள்ளுகின்றேனே! என்மேல் உமக்குச் சிறிதேனுங் கிருபை யில்லையோ? வாருமே!...இன்னும் என் மீது உமக்குக் கோபமோ? ஐயோ! உம்மை இந்த நந்தனவனத்தில் எந்த மூலையிற் றேடிப் பிடிப்பேன்! நாவும் உலருகின்றதே! பிராண நாதா! பிராண நாதா!! சந்தடியையே காணோமே! இவ்விடத்தில் பிராண நாத ரிருந்தால் இந்நேரம் வந்திருக்க மாட்டாரோ? யான் கனவோ காண்கின்றேன்? இல்லையே! நனவுடன்றா னிருக்கிறே னென்று தோன்றுகிறதே! பின்னே எங்கே என்னருகில் நின்ற பிராணநாதர்? என் கண்ணை ஏதும் மறைக்கின்றதா? (கண்ணைத் துடைக்கும் பொழுது கையிலிருந்த வளையைக் கண்டு) இஃதென்ன என் கையில் வளை யொன் றிருக்கிறதே! இதை யான் வரும்போ தணிந்திருக்க வில்லையே! யார் என் கரத்தி லணிந்திருக்கக் கூடும்? (கழற்றிக் கீழே வைக்கிறாள்) ஐயோ! படுநீலி சிற்றன்னை என்னைக் கொல்லுவதற்குச் செய்த சூழ்ச்சியோ? ஆம், அவள்தான் இங்கு வந்திருக்கக் கூடும். பின் யார் இங்கு வந்திருப்பார்கள்? இவளைக் கண்டதும் பிராணநாதர் போய்த்தானே யிருப்பார்? பிராணநாதா!

(பாடுதல்.)

இராகம் - எதுகுல காம்போதி. தாளம் - சாப்பு.

பல்லவி.

நாதா நீ எங்குற் றாயோ - என் பிராண

நாதா நீ எங்குற் றாயோ

**அநுபல்லவி.**

தாதார் மலர்ச் சோலையிற் றனியாய்ப் புலம்ப நீதி
தானோ வுமக்கிதனுற் றங்கிடுமோ ப்ரக் யாதி (நாதா)

**சரணங்கள்.**

என்னைப் பிரிந்திடநெஞ் சிரக்கமது கிஞ்சித்து
மிலலாமற் றனிவிட்டிங்கேதிலார்போல் வஞ்சித்து (நாதா)

மணியு மொளியும்போல மலரு மணமும் போல
மருவியிருந்த வென்றன் மனமுருகவே சால (நாதா)

ஆதார முனை யன்றி யவனியில் வே றுண்டோ
அடியாளிடத்திற் பிழை யமர்ந்ததும் எது கண்டோ (நாதா)

என்ன செய்யப் போகிறேன்? என்னுயிரை விட்டு விடலா மென்று பார்த்தாலும் அதுவும் உம்முடையதே யாகையினாலே, உமமுடைய உத்தரவின்றி யானெப்படி யதைத் துறப்பது? பாக்குவெட்டியி லகப்பட்ட பாக்கைப்போல் நிலை குலைகின்றேனே! உமமைப் பின் றொடர்ந்து வரலாமென் றிருந்த என்னையும் விட்டுப் போய் விட்டீரே!—நீர் சென்றதைப் பற்றி யாரைக் கேட்டு யான் தெரிந்து கொள்வேன். இப்பூங்காவனத்துள்ளவைகளைக கேட்பேனோ?

(பாடுதல்.)

"வாவு மிளமான்காள் மயில்காள் மடப்பிடிகாள்
கூவுங் கரிய குயில்காள்மென் புள்ளினங்காள்
ஆவியென மேவி யகலே மெனவகன்ற
காவலன்றான் போன வழியெனக்குக் காட்டீரே."

"நிரைவீ ழருவிந் நிமிர்பொன் சொரியும்
வரையே புனலே வழையே தழையே
விரையார் பொழிலே விரிவெண் ணிலவே
யுரையீ ருயிர்கா வலனுள் வழியே."

ஏ! முல்லைக் கொடிகளே! கணவனை நினைந்து இப்படியும் ஒரு பெண் ஏங்குவாளோ வென்று என்னை நகையாடி யிகழ்கின்றீர களே! இகழாமல் எனது வேண்டுகோளுக் கிரங்கி நீர் தலை யசைத்துச் சென்ற வழியைக் காட்டினீ ராலுல், என்றும் உம்மை மறவாத எனக்குப் பேருதவி புரிந்தவராக மாட்டீரோ? ஏ! வண்டுகளே! என் கணவனும் யானும் கொஞ்சிக் குலாவியபோது, உம

முடைய பாட்டைக் கேட்டுப் புகழ்ந்து புகழ்ந்து பேசினேனே! அதற்குக் கைம்மாருக வாவது அவர் சென்ற விடத்தைப் பறநது காட்டுவீராயின் உம்மைச் சிரத்திற் சூடிக் கொள்ளேனே! ஏ! அன்றிலே! நீயுங் கூறமாட்டாய். கணவனைப் பிரிந்து உயிர் வாழ்ந்து வருந்தி யிருந்தா லல்லவோ, எனக்குக் கூறுவாய்......உனனை யான் நோவதிற் பயனெது? ஏ! வன தேவதைகாள்! நீங்களாவது சொல்வீரோ? கால தாமதஞ் செய்வீராயின் ஒரு பெண்ணைக் கொன்ற பழி நும்மைச் சாரும். யான் உயிர் துறக்கப் பார்த்திருப பதும் பாதக மல்லவோ? ஏ! சந்திரா! என்னைப் பார்த்தால் சொல்லிவிடவேண்டி வருமென்கிற தாட்சணியத்திற்குப் பயந்து மேகமாகிய போர்வை போட்டுக்கொண்டு மறைந்து நிற்கிருயோ? யான் எவ்வளவு கதறிக்கதறி நாவுலர்ந்தும் நீங்கள் இரங்கமாட்டீர்கள். ஏ! மனமே! நீயும் மயங்கி எனக்குத் தீங்கிழைத்தாய்! இனி இந்த ஆபரணங்கள்தா மெனக் கென்னத்திற்கு! ஏ! ஆபரணங்களே! கணவன் பிரிந்து சென்ற பிறகு நீங்களேன் இவ்வுறுப்புக்களிற் றங்கி யிருக்கின்றீர்கள்? நீங்களும் பிரிந்து போகவேண்டியதுதான். (ஒவவோ ராபணமாயக் கழற்றிக் கீழே வைக்கிருள். மலர்மாலையையும் உதிர்த் தெறிகிருள். கையில் மோதிரத்தைக கழற்ற அது அங்கில்லாததைக கண்டு திகைத்து) இதுவும் சிற்றன்னை செய்த சூழ்ச்சியோ? ஐயோ! எனனன்னை கொடுத்த வயிர மோதிரமாயிற்றே! இதையும் யான் துறக்க விதி நேர்ந்ததோ? என துக்கம் அளவில்லாம லதிகப்படுகிறது. யானே என்னைத் தேறறிக கொள்ள வேண்டியதுதான். பின் யார் என்னைத் தேற்றப் போகிருர்களா? தோழி இந்துவதனை ஒருவேளை தேடி வரலாம். அவளும் இப்பொழுது அசட்டைதானே செய்வாள் (இந்துவதனை வர) இந்துவதனே! (என்று அலறி யவளருகிற் செல்கின்ருள்.)

இந்துவதனை — அம்மா! சண்களெல்லாம் என்ன கொவ்வைப்பழம் போலச்சிவநது தோன்றுகின்றனவே? ஏனம்மாநீங்க ளிப்படி யழவேண்டும்? அரண்மனைமுழுமையும் தேடிக்காணுமல் இங்குவநதிருக்கலாமோ வென்றல்லவோ பார்க்கவந்தேன். இரவில் நெடுநேரமாய்விட்டதே! ஏன் துககப்படுகிறீர்கள்?

சரசாங்கி.—உனனிடங் கூருமற் பின் யாரிடந்தான் கூறபபோகின்றேன. இப்பொழுது எனக்குச்சனியாக இருக்கினறது.

இந்துவதனை — அம்மா! யாரோவொருவர் தங்களுக்குக் கடிதங்கொடுக்கும்படியாகத் தலைவாயிலில்வந்துநிற்கிருர்! வாங்கிவரவா?

சரசாங்கி:—நீபோய் இப்பொழுது பார்க்கமுடியாதென்று சொல்லிவிடு.

இந்துவதனை:—கடிதத்தையாவது வாங்கிவரட்டுமா?

சரசாங்கி:—வாங்கி நீயே வைத்துக்கொள். என்னால் இப்பொழுது படித்துப்பார்க்க முடியாது. (இந்துவதனைபோதல்) கடிதம் யார் எனக்கு எழுதப்போகிறார்கள்? எழுதத்தகுந்தவர்கள் ஒருவரும் இல்லையே! இதுவும் சிற்றன்னை தந்திரந்தானோ? கொல்லத்தானேபோகிறாள். இவ்விதத் துன்பங்களையெல்லாம் அநுபவிப்பதைவிட இறப்பதே நலம். தலைக்கும் மிஞ்சினஆக்கினை என்ன இருக்கிறது?

(இந்துவதனைவருதல)

இந்துவதனை:—அம்மா! நாளைவந்து தங்களைப்பார்க்கவேண்டுமாம். கடிதத்தைமட்டும் வாங்கிப் பத்திரமாக வைத்திருக்கிறேன்.

சரசாங்கி:—பெண்ணே! எனக்கு அதிக களையாயிருக்கிறது, ஒன்றுந் தோன்றவில்லை.—

இந்துவதனை:—ஜலங் கொண்டுவரட்டுமா அம்மா?

சரசாங்கி:—வேண்டாம். சற்றுட்கார்ந்தாயே யானால் உன் மடியின்மீது சிறிது நேரம் நித்திரைசெய்கிறேன்.

(கூறிய வண்ணமே இந்துவதனை மடியில் நித்திரைபுரிகின்றாள்)

இந்துவதனை:—தாயைப் பார்க்கிலும் பத்துப்பங்கதிகமாக என்னைப்பாராட்டிச் சீராட்டிவரும் இம்மங்கைக்கு இவ்விதமாகத் துக்கப்படும்படியான காரணம் என்ன நேர்ந்திருக்கவேண்டும்? ஒருநாளும் கண்ணீர் விட்டதைப்பார்த்ததே இல்லையே! எதையாவது கண்டு பயந்தாளோ? தகப்பனார் தாம் வைதாரோ? சிற்றன்னை கோபித்துக் கொண்டாளோ? ...அரண்மனைக்குச் சென்றதும் திருஷ்டிகழிப்பேன். சாயங்காலவேளையில் என்னுடன் பந்தாடுவதையு மறந்து கிளியுடன் வார்த்தையாடுவதையுந் துறந்து இந்நந்தனவனத்திலே இந்நேரம்வரையும் இருந்தாளே! என்னகாரணம்? ஒருவேளை அழகானந்தரை நினைந்து இங்குவந்து தூக்கித்துக் கொண்டிருந்தாளோ? இருக்கலாம். 'என்னின்னுயிரினும் சிறந்தவ'னென்றெத்தனைமுறை கூறியிருக்கின்றாள். யானும மறநதேனே!

(கழற்றி வைத்திருந்த நகைகளைப்பார்த்து)

இதென்ன பளிச்சென்கிறதே! முத்து மாலைபோல் தோனறுகிறதே! அதென்ன மலர்மாலையோ? ஆம். பதிவிரதைகளுக்குப் புருடனைப்பிரிந்திருக்கும் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு யுகமென்கிறார்களே! புஷ்பமும் ஆபரணங்களு மணியமாட்டார்களெனகிறார்களே! இவளிடத்திலேதான் அந்தத்தன்மையை இன்று கண்டேன. உலகத்தில் சிலபெண்கள் கணவன் எப்போதுவெளியே யொழிவானோவென்று எதிர் பார்த்திருந்து தெருவில்வந்து மூலைகுலுங்கநகைக்கிறார்களே! (கனகாம்புஜமும் சிங்காரவல்லியும் வருதல்)

கனகாம்புஜம்:—இந்துவதனே! என்ன உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்?

இந்துவதனே:—இல்லே. தமது குமாரத்தியை எங்குந் தேடிக்காணுமல் இங்குவந்து பார்க்கக் களைத்திருந்தார்கள். களையாயிருக்கிறதென்று என்மடிமீது சயனித்துக் கொண்டார்கள்.

கனகாம்புஜம்.—களையா யிருக்கிறதென்று சொன்னல் உடனே அரண்மனைக் கல்லவோ அழைத்துவரவேண்டும்?

இந்துவதனே:—இல்லே.........

கனகாம்புஜம்.—எதிலும இப்படித்தானே! உனககுச் சிறிதேனும் புத்தியிருக்கிறதோ? (சிஙகாரவல்லியைப் பாாதது) சிங்காரவல்லி! நீ சென்று பனிநீர்ச் செம்பும் விசிறியும் எடுததுக்கொண்டு அதிசீக்கிரத்தில் ஓடிவா.

சிங்காரவல்லி.—இதோ வந்துவிட்டேன். அம்மணி!

(சிங்காரவல்லி போதல்.)

கனகாம்புஜம்—(இந்துவதனேயைப் பார்த்து) வன தேவதைகளேப் பறறிச் சிறிதும் யோசிக்கவில்லேயோ? சந்திரனும் மறைகின்ற சமயமாய் விட்டதே! நாழிகை இவ்வளவாகியும இங்கிருப்பது தகுதியோ?—(அவள் மறுமொழி கூறுவாளோவென்று சிறிது நிதானித்துப்பிறகு)பேசாமலிருப்பதே நன்மையென்று நினேத்துக் கொணடிருக்கின்ருய்?—(சிங்காரவல்லி விசிறியும் பனிநீருங் கைக்கொணடுவருதல்.)

சிஙகாரவல்லி! பனிநீரையும் விசிறியையும் இப்படிக் கொடு.

சிங்காரவல்லி:—யான விசிறுகின்றேனே!

கனகாம்புஜம்—வேண்டாம. கொடு. (அவள் கையினின்றும் வாங்கிப் பனிநீரைச்சரசாங்கியின் முகததிற றெளிததுச் சநதன விசிறியால் விசிறுகிருள்.)

சரசாங்கி—(மூாசசை தெளிந்து) இந்துவதனே! அரண்மனேக்குச் செலவேமா?

கனகாம்புஜம்—சரசா! எழுநதிரு. வருகிறேனென்று போன யான மறநதாறபோல அரண்மனேககுபபோய் விட்டேன். நீ அநதிக் காலததில வழக்கமபோல அரணமனேக்கு வந்திருப்பா யென்றல்லவோ நினேததிருநதேன். என் சொறபடி தவருது நடக்க வேண்டுமெனறு நினேததாலும நீயுக்தாயுக்தம் பார்க்கவேண்டுமல்லவோ? வா! போவோம். (யாவரும் போதல்.)

# இரண்டாங்களம்.

இடம்:—காஞ்சியில் இராஜவீதி. காலம்:—காலை.

நடர்:—மூதந்தன், பிரபுக்கள்.

**முதற்பிரபு:**—புதிய மாப்பிள்ளை! வாரும். (மண்ணுங் கட்டிப்) பலாகாரம் நன்றாயிருந்தது போலும். என்ன உத்தரிய மெல்லா மண்ணா யிருக்கின்றதே! என்ன விசேஷம்? அதி காலையிலேயே இவ்வழியாய் வருகின்றீரே!

**இரண்டாம்பிரபு:**—(தனக்குள்) மாப்பிள்ளை மண் தின்றார்! கேட்க வேண்டுமோ பிள்ளையின் திறம்? இது அணிற்பிள்ளை தென்னம பிள்ளையா? அன்று. மாப்பிள்ளை. தலை யுடையாமல் வந்து சேர்ந்தது அககாளுக்குச் சந்தோஷந்தான்.

**மூதந்தன்:**—ஐயா! நானெங்கே பலாகாரஞ் சாப்பிட்டேன்? அழகானந்தனோடு முட்டி யுத்த மல்லவோ செய்தேன்!

**முதற்பிரபு:**—முட்டி யுத்தமா செய்தீர்! பின்னே இங்கு எப்படி வந்து சேர்ந்தீர்! தெற்கே உங்களூருக் கல்லவோ ஏகி யிருக்க வேண்டுமே? (அடிபட்டுக்) கெட்டு அக்காள் வீட்டிற்கு வரலாமோ?

**இரண்டாம்பிரபு:**—(தனக்குள்) முட்டி யுத்தம்! பேர் யார கறறுக் கொடுத்தார்கள்? மட்டிப் பயலுக்கு முட்டி யுத்தமோ? முஷ்டி யுத்தஞ் செய்திருந்தால் பிழைத்து வருவது கஷ்டந்தானே!

**மூதந்தன்:**—இதற்குள்ளே இரண்டுபே ரல்லவா வந்து தடுத்து விட்டார்கள்!

**இரண்டாம்பிரபு:**—(தனக்குள்) புரட்டிப் புரட்டி யுதைத்தாலும் இவனுக்கு மீசையில் மண்பட வில்லையாம்!

**முதற்பிரபு:**—அப்படியா! அதனாலேதான் பிழைத்தீர். இல்லாவிட்டால வைவச்சுத பட்டினத்திற்கு யாத்திரை போயிருககமாட்டீரா?

**மூதந்தன்:**—ஆம் போயிருப்பேன். போயிருப்பேன்.

**முதற்பிரபு:**—ஆம் போயிருப்பேன்! சரிதான். அதிருக்கட்டும். எப்போதையா கல்யாணம?

**இரண்டாம்பிரபு:**—(தனக்குள்) கல்யாண மேது கல்லெடுப்புத்தான.

**மூதந்தன்:**—அந்தப் பயல் பயந்தல்லவோ ஓடிப்போய விட்டான்? இனி விவாதந்தான்.

(விவாகந்தான்என்பதைவிவாதந்தான்என்று வாய்தவறிச்சொல்கின்றான்.)

**முதற்பிரபு:**—விவாதந்தான். தடை யென்ன? விவாகத்தைப்பற்றி நினைக்கிறது விவேக சூனியந்தான, நீர் சொல்வதில் ஏதாவது அனுபிசகிருக்கின்றதா? நீர்சொனனது சொன்னபடியே நடக்கப்போகிறது

இரண்டாம்பிரபு:—எலி வளை யல்லவோ தேடிக்கொண்டிருக்கிறான் உமக்குப் பயந்து ஒளித்துக கொள்வதற்கு.*

முதந்தன்:—தடை யென்ன? சரசாங்கிதான் என் பெண்டாட்டி.

இரண்டாம்பிரபு:—ஒதியமரம் உத்திரத்திற்கானால் நீயும் அவள் புருஷன்தான்.

முதந்தன்:—இல்லை ஐயா! அவளுக்கு அழகுக்குத் தகுந்த புத்தியே யில்லை.

முதற்பிரபு:—ஆமாம் ஐயா! நீர் சொல்வதில் ஏதாவது பிசகிருக்கிறதென்று சொன்னேனா? ஆம். அவளுக்கு அழகுக்குத்தகுந்தபடி கெட்டபுத்தி இல்லவே இல்லை.

இரண்டாம்பிரபு.—ஐயோ! பாவம்! புத்தி உலக்கைக் கொழுந்தும் குந்தாணி வேருமாய்த்தெற்கு வடக்குகளிலன்றோ ஓடுகின்றது? உம்முடைய பத்திக்கு அவள்புத்தி ஈடாமா? சீ! அப்படிச் சொல்லலாசாது.

முதந்தன்:—இங்குவாருமையா? என்னவோ குந்தாணி உலக்கை என்கின்றீரே! அதென்ன ஐயா? அதென்ன.

இரண்டாம்பிரபு:—இது தெரியாதா உமக்கு? குந்தாணியைப்போல விசாலமான புத்தி உம்முடையபுத்தி. உலக்கையைப்போலக் கூர்மையானபுத்தி உம்முடையபுத்தி. இதுசொல்லியதற்கு ஏனையா கோபித்துககொள்கின்றீரே!

முதந்தன்:—ஹ ஹ ஹ! பார்த்தீரா? நீர் வெகுநல்லவர். ஹ! ஹ! அந்தப்பயலைக்கலயாணம் பண்ணப்போகிறாளாமே!

முதற்பிரபு —எந்தப்பயலை?

முதந்தன்:—ஓடிப்போனானே அழகானந்தன் அவனை.

முதற்பிரபு —அவனையா!—உம்மையல்லவா பண்ணிக்கொள்ளவேண்டும்?

இரண்டாம்பிரபு — தடையேயில்லை. அவள் இந்த முழுமக்கள்பெருமானைத தான் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும்!

முதந்தன் —முழுமக்கள் பெருமானென்றால் என்ன?

இரண்டாம்பிரபு—முட்டாள்களுக் கெல்லாம் முதற்றாம்பூலம் பெறுகிறவர். வேறென்ன?

முதந்தன்.—அப்படியா! முதல் தாம்பூலம்! நமக்கென்னகுறைச்சல்?

இரண்டாம்பிரபு.—உமக்குக்குறைச்சலே யில்லை. போம். போம்.

முதந்தன்:—எங்கேபோகச் சொல்கிறீர்? இங்குத் தானிருப்பேன்.

இரண்டாம்பிரபு —இரும் ஐயா இரும். உம்மையார் வேண்டாமென்று சொல்லுகின்றார்கள்? யான் "அரண்மனைக்குப்போம். பின்னே வரு

---

* இந்தவாக்கியத்தைக் கவனித்துநோக்க இருபொருள் பயக்கும்.

கிறேு"மென்றல்லவோசொல்ல வாரம்பித்தேன்?இதற்குள்ளே உம க்கு என்ன கோபம்?

முகுந்தன்.—நாழியாச்சு ஐயா நாழியாச்சு. நீர் நல்லவரையா. ஞாபக மூட்டினீரே! வீட்டுக்குப் போகவேண்டும் ஐயா! வாரும்.

இரண்டாம்பிரபு:—(தனக்குள்) ஊத்தை வாயில் அரண்மனையென்று என வரும்? நாயைத் தவிசேற்றி நடுவீட்டில் வைததாலும் அது அங்கி ருக்குமா? (முகுந்தனைபபார்தது) எந்தக் குட்டிச்சுவர் வீட்டுக் குப் போகப் போகிறீர்? மோட்சத்திறகுப் போகப் போகிறீரோ? அங்கு யாம் வரமாட்டோம்.

முதற்பிரபு:—அரண்மனை என்பதற்கு, வீடென்று வாய்தவறிச் சொல்லி விட்டார்!

முகுந்தன்:—வாரும் போவோம். போவோம் வாரும்.

முதற்பிரபு:—இதோவந்து விட்டேனையா.

முகுந்தன்:—நீ என்ன ஐயா?

இரண்டாம்பிரபு:—இதோ (தெத்திப் பேசுவதுபோல் நடித்து முகுந்தன மேற்காரியுமிழ்ந்து) வந்துவிட்டேன் ஐயா! (யாவரும் போதல்.)

---

## மூன்றுங்களம்.

இடம்:—காஞ்சியிற் சரசாங்கியின்கன்னிமாடம். காலம்:—காலை.

நடர்.—சரசாங்கி, இந்துவதனை.

சரசாங்கி:—இந்துவதனை! நேற்று யாரோகடிதங்கொண்டு வந்த தாகவும, வாங்கி வைத்திருப்பதாகவுங் கூறினுயே! எங்கேஅந்தக்கடிதம்?

இந்துவதனை:—அம்மா! இதோ இருக்கிறது.(கடிதத்தைச் சரசாங்கியிடங் கொடுக்க அவள் பிரிதது வாசிக்கிறுள்.)

சரசாங்கி:—"என்னுயிரினுஞ்சிறந்த தெள்ளமிழ்தே! இக்கடிதத்தைககண்டு நீ கவலைப்படுதலொழிக."—எனனைவிட்டுப்பிரிநதது மனறிநதேறு தலுங் கூறியிருக்கிறீரே! நன்றுயிருந்தது நும்மன்பு?

இந்துவதனை:—அம்மா! தாங்கள் மூர்ச்சை யாயிருக்கிறபோது பிரிந்திரு க்கவே மாட்டாரே! முழுமையும் படித்துப் பார்க்கலாமே! தாமும அவசரப்படலாமோ?

சரசாங்கி:—(மறுபடியும் வாசிக்கின்றுள்) "நீமூர்ச்சையாக் கிடநதபோது பிரிய மனமில்லாம லிருந்ததனுலும் இராஜ ஆக்ஞைப்படி நடகக வேண்டுமென்பதனுலும் உனக்குப் பிரக்ஞை வந்தவுடன் விடை

பெற்றுச் செலலலாமென்றெண்ணி நினது கரத்தில் ஓர் வளையைத தரிததது உன சிறுவிரலி லிருந்த மோதிரததை யானும் ஞாபகக்குறி யாக அணிந்து கொண்டேன். அதுதான உனக்குபபிரதிநிதி யாயி ருநது எனனைக் காப்பாறறுகிறது. உனனை விட்டகலக் கைகா லெ ழாம லிருக்குந்தருணததில் நின்தந்தை யங்குவந்த படியால் யான நின்னிடம் விடைபெறுமறபோக நோநதது. கோபித்துக் கொள்ள வேண்டாம். உன்னை யான்மனப் படததிலனறோ எழுதிவைததிருக்கி றேன்? இக்கடிதம கொண்டுவருபவா எனது பிராணசிநேகிதர். அவ ரிடம யாதும் ஒளிககாமற் கூறலாம். யானகுறிநததகரஞ் சென்று சேர்நததும் கடிதமெழுதுவேன. கண்ணே! நீதுக்கப்பட்டுக் கொ ண்டிருப்பது நனறன்று. அதிசீககிரததில் நின்னைக் காணபேன.

நினது காதலன

அழகானநதன்."

இந்துவதனை—அம்மா! காரணமில்லாமல் அவர் அப்படிப் போயிருக்கமா ட்டாரென்று நான சொல்ல வில்லையோ?—(ஏமவதிவர) அமமா! ஏமவதிவருகின்றுள.

சரசாங்கி.—ஏமவதி! இப்பொழு தெங்குவந்தனை?

ஏமவதி—இல்லை. யாரோஒருவர் தங்களைப் பார்க்கும்படி தலைவாயிலில வநது காத்துககொண்டிருக்கினறுர்.

சரசாங்கி—அபபடியா? நீபோய் அவரை இங்கு வரும்படி அனுப்பி விட் டு அங்கேயே யான் சொல்லி யனுப்புகிற வரையில் இரு.

ஏமவதி—அப்படியே செய்கினறேன் அம்மா.

(ஏமவதி போதல்.)

சரசாங்கி—இநதுவதனை! இந்தக்கடிததததில் தான்போகக்கருதியிருக்கிற இடததைப்பறறி எழுதினுரிலலையே!

இந்துவதனை—காரணமிலலாமலா எழுதாமலிருப்பாா? ஏதோஒருகாரண மிருக்கததான் வேண்டும்.

சரசாங்கி.—எனன காரணமிருக்கச்கூடும்? யோசித்துச்சொல் பாரக்க லாம. (சுகுணனவருதல) ஐயா! வாருங்கள். இநத ஆசனததில இருஙகள். நீங்கள்தாமோ நேறறுக்கடிதங் கொணடுவநதவா?

சுகுணன்.—ஆம்.

சரசாங்கி—அப்படியானுல் அவர் எத்திசை நோக்கிச் சென்றனர்? தங்க ளுக்குத தெரியுமே!

சுகுணன்—அம்மா! அவர் குறித்த விடம சேர்ந்ததும் கடித மெழுதித தெரிவிப்பதாக வாக்குத்தத்தஞ் செய்திருக்கிறுர். அவர் சத்தியவா னபடியால் கூறியதிற் சிறிதுந் தவறி நடக்கமாட்டாா.

சரசாங்கி:—யானும் அறிவேன். ஆயினும் அவரைப்பற்றித் தாங்கள் அடிக்கடி கடித முதலியவைகளாற் றெரிந்து கொள்வதை யுடனுக்குடனே எனக்குக் கூறுவீர்களெனத் தங்களை மிகவும் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சுதுணன்:—தங்கள் ஊழியனாகிய எனக்கு என்ன கட்டளையிட்டபோதிலும் சித்தமாய்ச் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறேனே!

சரசாங்கி:—நல்லது. அவர் தங்களைப் பார்க்கும்படி வந்தபோதும், தங்களிடம் விடைபெற்றுச் செல்லும்போதும்,எவ்விதமாக இருந்தார்?

சுதுணன்:—அம்மா! அவரை யான் காணும்போது அடையாளமே தெரியவில்லை. யான் கண்டதுமுதல் அவர் சென்றது வரையிலும் தாமரை பனியினால் வாடியதுபோல், அவரது முகம் பொலிவிழந்திருந்தது. கைவிரலி லணிந்திருந்த மோதிரத்தைக் கண்ணுறறுக் கண்ணுற்றுக்,"காதலி! உன்னை எப்பொழுது காண்பேன்?என் கண்ணே!உயிரே! அமிர்தே!" என்று முத்து முத்தாகக் கண்ணீர் பெருக்கியும், மோதிரத்தைப் பலதரமும் முத்தமிட்டும் விசனப்பட்டுக் கொண்டிருந்தார்.

சரசாங்கி.—இவ்விதமாகவோ என் பிராணநாதர் துக்கித்திருந்தார்? இதைக் கேட்டும் உயிர்நீத்திலேனே! யான் கொடும்பாவி!

(பாடுதல்.)

இராகம் - பிலகரி. தாளம் - ரூபகம்.

**பல்லவி.**

பாவியானேன் - யான்கொடும்
பாவியானேன்.

**அநுபல்லவி.**

ஆவிக் குகந்த நாத னீங்க
அலலும் பகலு மேகக மோஙகப் (பாவி)

**சரணங்கள்.**

தனியா யிங்குத் தயங்க வகன்று
சஞ்சரித் தெங்கும் மனமுஞ் சுழன்று
எனையா ளன்ப னிருக்க நீங்கரும்
இன்னுயிர் துறக் காத மாபெரும் (பாவி)

செய்வினை வலிசெ செயலோ அறியேன்
செல்லும் போதுற்ற தியக்கங் குறியேன்
மெய்ம்ம றந்திடும் வேளை பிரிந்த
விற்ப னனுடன் போகா திருந்த (பாவி)

மொயயளி கொண்ட முகார விந்தன்
மொழிதற் கரிய அழகா னந்தன்
செயப பாதச சேவையே செய்யச
சேரு நாளெது வோநான் ஐய (பாவி)

இந்துவதனை! யான் பெரும்பாவியாய் விட்டேன்.

**இந்துவதனை**:—(சுகுணனை நோக்கி) அவர் சீக்கிரமாக வரமாட்டாரோ? தாமறிவீரே!

**சுகுணன்**:—அதி சீக்கிரத்தில் திரும்புவதாக என்னிடங் கூறிச் சென்றனர். (சரசாங்கியைப் பார்த்து) அம்மா! நீங்கள் துக்கப்பட ஏது ஒன்று மில்லை. வருததப்படவேண்டாம்.

**சரசாங்கி**:—என் சிறு விரல் மோதிரஞ் செய்த பாக்கியமும் யான் பெற வில்லையே! எனனைவிட்டு நீங்கும்போது இரண்டு வார்த்தை கூடச சரியாகப் பேசவில்லையே! ஐயோ! எனது எண்ணங்களெல்லாம காற்றின்வாய்ப்பட்ட பூளைமலர் போலாயினவே! எப்பொழுது அவரதின்சொ லமுதத்தையுண்டு களிக்கபபோகிறேன்! (சததங் கேட்டுத்திடுக்கிட்டு)

ஏதோ! சந்தடி கேட்கிறதே!— (சிங்காரவல்லிவருதல்.)

சிங்காரவல்லி! என்னவிசேஷம்?

**சிங்காரவல்லி**:—ஒன்றுமில்லை, தமது சிறியதாயார் தம்மை உடனே அழைத்துவரும்படி எனக்கு ஆக்ஞாபித்தார்கள்.

**சரசாங்கி**.—அப்படியா இதோவந்து விட்டேன். (சுகுணனைப் பார்த்து) ஐயா! பிறகுநும்மைக் காண்பேன்.

**சுகுணன்**.—போய்வருகிறேன். அம்மணி!

(யாவரும் போதல்.)

---

## நான்காங்களம்.

இடம்:—தஞ்சையில் ஜெயவீரன்வீடு. காலம்:—நண்பகல.

**நடர்**:—ஜெயவீரன், துன்மதி, மதுரை சேல நெல்லைவாசிகள்.

**துன்மதி**:—ஜெயவீரரே! உமதுவீட்டில் நேற்றுப்புதிதாக ஒருவர்வந்திருக்கிருரே! அவர் யார்? உமக்குப்பந்துவா?—நேற்றுச் சேலவாசி

யோடு அவரைப்பற்றி உயர்வு நவிற்சியினும் உயர்வு நவிற்சியாகப் புகழ்ந்து புகழ்ந்து கூறினீரோ! அதைபபற்றி நமக்குக்கொஞ்சம் சந்தேகமிருக்கின்றது.

ஜெயவீரன்:—நண்பரே! பந்துவல்லர். ஆயினும் பந்துவை ககாட்டிலுஞ்சு றந்தநண்பர். அவர் தகப்பனூரும் யானும் ஒரேகுருவினிடத்து இளம் பருவத்தில்வில்வித்தை கற்று வந்தோம். அவரும் யானும் ஒதத தோழர்கள். அவர் என்னைப்பலமுறையுங்காத்துரக்ஷித்தவர். அவரது இளையகுமாரராகிய இவருக்கு மனம் வாக்குக்காயங்களில் யாதும் ஒனறுக் கொன்று முரண்படா. தொண்டைநாட் டரசன் புததிரி இவர்மீது காதல்கொண்டதற்காக, இவரை ஊரைவிட்டுப் போகு ம்படி அரசன் ஆக்ஞாபிக்க இங்கு என்னிடம் வந்திருககிறுா.

சேலவாசி:—அவரைப்பார்க்கும்போதே தாம் கூறியன வெல்லாம் உண் மையாயிருக்கவேண்டு மென்றே தோன்றுகிறது. நெல்லையாரே! நீரென்ன நினைக்கின்றீர்?

நெல்லைமதுரைவாசிகள்:—சந்தேகமேயில்லை!

“அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.”

என்று வீணுகவா தேவர் கூறினுர்?

துன்மதி:—ஜெயவீரரே! ராஜகுமாரத்தி இவரிடம் காதலுடையவ ளென்பதுமட்டும் சந்தேகமாகத்தான் தோன்றுகின்றது! (யாவரையும் பார்த்து) நீங்களெல்லாம் யோசிததுப்பாருங்கள்! மெய்ககாதல் கொண்டிருந்தால் இவரேன் தனியே வரவேண்டுமே?

மூவரும்:—நீர் சொல்வதையும் சற்று யோசிக்கவேண்டியதுதான.—

ஜெயவீரன்:—நீங்களேன் வாதம் பண்ணிக்கொண்டிருக்கிறீர்கள்? அவ ரும் வருநேர மாய்விட்டது. அவரிடம் நேராகப் பேசிப்பார்த் தால் அவரை நீங்களே எனனைவிட நூறுபங்காகப்புகழ்ந்து பேச ப்போகின்றீர்கள்! அவர் தொண்டைநாட்டுச் சேனுதிபதி குமார ரானபடியால் தகுந்த மரியாதையுடன் நாம் எதிர் கொள்ள வே ண்டுமென நினைக்கின்றேன்.

(அழகானந்தன் வருதல்.)

யாவரும்:—வாருங்கள்.—வீற்றிருங்கள்.

சேலவாசி:—இதுநல்ல வேளைதான். சிநேகர்களெல்லாம் ஒரேயிடததில் சந்தித்தோமே! (அழகானந்தனைப் பார்த்து) ஐயா தங்களை யான காசியாத்திரை போகும்போதும் பார்த்திருக்கிற ஞாபகமிருக்கிறது. நேற்றிரவு முதல் தங்களுடன் வார்த்தையாடவேண்டுமென்று மிக வும் ஆவல்கொண்டிருககிறேன்.

அழகானந்தன்:—காஞ்சிநகர் வழியாய்ப் போயிருந்தால் பார்த்தேயிருக்கலாம். நல்லவர்களோடு ஒரு நிமிஷகாலம் வார்த்தையாடினும் அவர்கள் அதை என்றுமே மறப்பதில்லை.

துன்மதி:—யானும் தங்கள் குணாதிசயங்களைப்பற்றி நமது நண்பரிடந்தெரிந்துகொண்டேன்.— (அழகானந்தன் முகத்தைப் பார்த்து) ஒரு வேளை நகரத்தைவிட்டுப் பிரிந்தவருத்தமோ என்னவோ முகம் வேறுபட்டிருப்பதாகத் தோன்றுகிறது!

சேலவாசி:—யாருக்குத்தானிராதையா! அழகு, அன்பு, குணம், கல்வி, வயது, குலம் முதலியவை ஒத்திருக்கப் பெற்றவளாய் கற்பினுக்கரசியாய் விளங்கும் பெண்ணைப்பிரிந்து வந்தால், முகம் வேறுபாடடையாதோ? மனம வேறுபடாதோ? அப்பெண்மணியைப் போன்றவர் எமது நடுநாட்டிலும் கூட இல்லையென்று நேற்றுச் சாயங்காலம் பலபல தேசத்து ஸ்திரிகளைப்பற்றி நாங்கள் வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருந்தபோது அவர் கூறினாரே! அப்பெண்மணி போன்ற ஒரு கண்மணியை நீர் பிரிந்திருந்தாலல்லவோ தெரியும்?

துன்மதி:—ஐயா சேலத்தாரே! போதும். போதும். நிறுத்தும். உலகத்தில் அவரவர் கண்டதை அவரவர்கள் விசேஷமாய்ப் பேசுவதுவழக்கந்தானே! இதிலெல்லாம் யான்மிகவும் தெரிந்தவன். எத்தனைபேரிடம் ஏமாந்திருக்கின்றேன்? பழகினவனுக்குத்தான் தெரியும். எவள்மிகவும் பயந்தவள்போல நடிக்கிறாளோ அவள்தானையா முழுத திருடி. ஏனையா! நீங்களெல்லாம் யோசித்துப் பாருங்கள்! யான சொல்வது பொய்யா? பத்துப்பொன் ஆசைப்படாத பதிவிரதை உலகத்திலேயே கிடையாதையா!

நெல்லைவாசி.—ஆம. ஆம்.

“பெண்ணெனப் படுவ கேண்மோ
பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை யுடைய வல்ல
வொராயிர மனத்த வாகும்
எண்ணிபபத் தங்கை யிட்டா
லிந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றுற்போல
மெலிந்துபின் னிற்கு மன்றே.”

எனத்தேவரும் கூறியிருக்கிறார் ஐயா!

மதுரைவாசி.—அதற்குச் சந்தேகமுண்டோ?

“அன்புநூ லாக வின்சொ
லலர்தொடுத் தமைந்த காத

வின்பஞ்செய் காமச் சாந்!
கைபுனைந் தேற்ற மாலை
நன்பகற் சூட்டி விள்ளா
தொழுகினு நங்கை.மார்க்குப்
பின்செலும் பிறர்க னுள்ளம்
பிணையனூர்க் கடிய தன்றே."

என்றும் கூறியிருக்கிறதையா! படுநீலிகள்! நம்பவே கூடாதையா!

ஜெயவீரன்:—உலகத்திலே பதிவிரதை ஒருத்திகூடக் கிடைககவே கிடையாளா? ஏன் ஐயா!

'பெண்டிரி லொருவர் கொழுநன்வழி நிற்பார்'

எனபது பெரியோர் கூறியதன்றோ?

துன்மதி:—அதுகூட இல்லை யென்று நிச்சயமாய்க் கூறுவேன் ஐயா!

அழகானந்தன்:—ஒருத்திகூட உலகிலில்லை யென்று நிச்சயமாய்க் கூறுவீரோ?

துன்மதி:—நான்தான் நிச்சயமாய்க் கூறுகிறேனே!

அழகானந்தன்:—நிச்சயமாய்க் கூறுவீரோ?

துன்மதி:—மறுபடியும் மறுபடியும் கேட்கிறீரே! நான்தான் முன்பே கூறிவிட்டேனே!

சேலவாசி:—ஒருவேளை இவர் பெண்சாதி ஒப்பற்ற பதிவிரதையா யிருப்பாள்போ லிருக்கிறது.

அழகானந்தன்:—நேற்றுச் சாயங்காலமே காதலின் நிலைமையைக் கூறினேனே! இவர் உலகத்திற் பதிவிரதை ஒருததி கூட இலலை என்பதை ரூபிக்கக் கூடுமா?

துன்மதி:—ஐயா நீர் கோபித்துக் கொள்ளுகிறீர! பதிவிரதைகளைபபறறிய பேசுவதை விட்டுவிடும். என்னதான நீர்வற்புறுத்திக் கூறினபோதிலும உமதுகாதலி எமது சோணாட்டு ஸ்திரீகளைவிட எதிலும் உயர்ந்தவளல்ல ளென்பது நிச்சயந்தான்.

அழகானந்தன்:—என்ன ஏதுவைக் கொண்டு நீரிப்படிக் கூறுகிறீர்?

துன்மதி:—காரணமில்லாமற் காரியம் நிகழுமா? நீர் சிறு விரலி லணிந்துகொண்டிருக்கின்றீரே மோதிரம் இது யான் பார்ததிருக்கின்ற வயிர மோதிரங்க ளெல்லாவற்றினுஞ் சிறந்ததுதான். இதுபோலவே உமது பெண்சாதியும் ரூபத்தில் மற்றைப்பெண்களைவிடச் சிறந்திருக்கலாம். ஆனால் பெண்களை ரூபத்தினாலே உயர்ததிக் கூறுகிற

தா? மனப் பரிசுத்தத்தாலல்லவோ அவர்கள் சிறப்படைய வேண்டும்? ரூபத்திற்கும் மனத்திற்கும் எவ்வளவோ வித்யாசமிருக்கின்றது. ரூபவதிகளிற் பலர் கற்பில்லாதவர்களாக விருக்கிறார்களென்று நுமக்குத தெரியாதோ? எது கண்ணைக் கவருகிறதோ அந்ரவஸ்துவின்மேல் பலர்க்கும் எண்ணந்தானே!

அழகானந்தன்:—நீர் சொல்வனவெல்லாம் எனதுகாதலியினிடம் இல்லை என்கிற நிச்சயத்தினு லல்லவோ இவ்வளவு தைரியமாய்க கூறினேன். அதுவும் பிசகோ? இம்மோதிரம் உமது புத்தியாலுயர்ந்ததாகத தோன்றியதுபோல அவளையும் உலகின மாதரிற் சிறந்தவளென்று காண்பீர். ஆதலால் அவளை நினைத்தலை யொழியேன். இதையும் ஒருவருககுங் கொடேன.

துன்மதி:—காலவேறுபாட்டால் மோதிரததை இழக்கும்படியும் நேரும. அவளையும் இழப்பீர்.

அழகானந்தன்:—இதை ஒருவேளை விற்கலாம். அவளைவிற்கவும் கூடுமோ?

துன்மதி:—விற்பதைப்பற்றி இங்கென்ன பேச்சு? இதைத் திருடன் கவர்ந்து செல்லானோ? அவளையும் அழகுள்ள ஓர் ஆண்மகன் தன்வசப்படுத்தானோ?

அழகானந்தன்:—எத்தகைய அழகமைந்த ஆண்மகனது மயக்கத்திற்கு முட்படாளெனறுறுதியாய்க் கூறுவேன்.

ஜெயவீரன்:—நீங்கள் இதைப்பறறி இனிவார்த்தையாட வேண்டாம.

அழகானந்தன்—உமதிஷ்டப்படியே!—முதல் முதற காணும்பொழுதே மிகவும பழகினவர்போல் வார்த்தை ஆடுகிறுரே!

துன்மதி—ஆம். உமது அழகியநேச மனையாட்டியையும் மயங்கும்படி பேச வல்லவனென் றறியீரோ? ஆனல் அவளிடததில் சற்றுபபேசும்படியான சந்தர்ப்பந்தான் வேண்டும்.

அழகானந்தன்—திரிமூர்த்திகளாலும் முடியாத காரியம் உம்மா லாகப்போகிறதோ?

துன்மதி:—உமது நம்பிக்கை முழுப் பொய் என்பதை இப்பொழுதே காண்பிககிறேன்! வேண்டுமோனல் எனது ஆஸ்தி முழுவதும பந்தயமாக வைக்கிறேன். நீர் உமது மோதிரத்தைப் பநதயமாக வைக்கிறீரா?—(அழகானந்தன் கோபித்துநோக்க) ஐயா! நீர் கோபித்துக்கொள்ள வேண்டாம். உலகத்திலுள்ள எந்தப் பெண்பிளளையையும் நம்பக் கூடாது என்பதை உமக்குப் புலப்படுத்தும்படி கூறினேனே யன்றி வேறன்று.

அழகானந்தன்:—ஐயா! நீர் மூடத்தனமாய் உரலிற் றலை யிட்டுக்கொண்டு பின்பு ஒன்றும் தோன்றாது விழிப்பீரெனத் தோன்றுகிறது!—

துன்மதி:—ஏன்?

அழகானந்தன்:—ஏனென்றால் கற்புநிலை தவறாப் பெண்களிடம் உமது வன்மை வீணாவதன்றி அதற்காகத் தகுந்த தண்டனையையு மடைவீர்.

ஜெயவீரன்:—ஐயா! நீங்கள் உங்கள் வாதத்தை விட்டு விடுங்கள். விளையாட்டுச்சண்டை வினையாய்ப்போய்விடப் போகின்றது! நீங்கள மனம் ஒருப்பட்ட சிநேகர்களாகவேண்டும்.

துன்மதி:—இருக்கட்டும் ஐயா! அவரிடங்கண்டிப்பாய் யான்சொல்லுவது நிஜமென்று எனது ஆஸ்திமுழுவதும், பந்தயமாக வைதத்தேனே! இனி ஏன் மயங்குகிறார்?

அழகானந்தன்:—யான் ஏன் மயங்கவேண்டும்? இப்பொழுது எந்த பெண்மணியைக் கெடுக்கக் கங்கணங் கட்டிக் கொண்டிருக்கிறீர்?

துன்மதி:—யாவரினுஞ் சிறந்தவளென்று புகழ்ந்து கூறுகின்றீரே, அநதப் பெண்மணியாகிய உமது கண்மணியைத்தான்! ஆனால கணப்பொழுதாவது பேசும்படியான சந்தர்ப்பம் வேண்டும். உமது கைம்மோதிரத்திற்கும் என்பதினாயிரம் பொன்னுக்கும் பந்தயம்!

அழகானந்தன்:—பொன்னுக்குப் பொன்னல்லவோ பந்தயமாக வைக்கவேணடும்? மோதிரத்தைப் பந்தயமாக வைக்கமாட்டேன்! அதைவிட்டுயான் பிரியேன்.

துன்மதி:—உமக்கு நம்பிக்கையில்லாத விஷயத்தில் நீர் ஏன் தலையிட்டுக கொள்ளுகிறீர்? நீர் ஜெயமடைந்தால், மோதிரம் பொன் எல்லாம் நும்மதுதானே? பயப்படுகிறார் பாரும்! ஐயா!

அழகானந்தன்:—சரிதான் ஐயா! யான் எப்படி உம்மை நம்புவது? நீர் என்னை வெற்றிகொண்டதற் கடையாளமாக அவள் கையிலணிந திருக்கும் வளையைக் கொண்டுவந்தீராயின்.—

துன்மதி:—தடை இல்லாமற் கொண்டுவருவேன்!

அழகானந்தன்:—தோற்றுப் போனீராயின்?—எனது மனைவியை அவமதித்துக்கூறியநும் நாவை இருதுண்டாக அறுததெறிவேன்! வெறறிகொண்டீராகில் மோதிரம் பொன்யாவும் உம்முடையனவே.

துன்மதி:—ஐயா! நீங்களெல்லாம் சாட்சி. யான்போய்வருகிறேன்.

(துன்மதிபோதல்.)

அழகானந்தன்:—இவர் யார் ஐயா? மகாகுணசாலியா யிருக்கின்றாரே! இவர் சோணாட்டில் எந்த மூலையிலுள்ளவர்?

ஜெயவீரன்:—இவர் கும்பகோணத்தார்!

அழகானந்தன்:—கும்ப கோணத்தாரோ? சரி. யான்போய்வருகிறேன்?

(அழகானந்தன்போதல்.)

ஜெயவீரன்:—நாமும் இவர்கள்பின்சென்று இவர்களைச் சமாதானப்படுத தவேண்டும். ஐயா!

சேலவாசி:—கும்ப கோணத்தான் கொலைகளவுக்கஞ்சானே!அவன்பிடித்த முயறகு மூனறேகானல்தானையா! இந்நேரம் பேசி இருந்ததினாற் றங் களுக்கு விளங்க வில்லையோ?

மதுரைநெல்லைவாசிகள்:—ஆம். ஆம்.

ஜெயவீரன்:—ஆயினும் போய் நம்மாலானவரையில் சமாதானப்படுத்தும் படி பார்க்கலாம்.

மதுரைநெல்லைவாசிகள்:—ஆம். ஆம். நாமும் போவோம்.

சேலவாசி:—யானும் வருகின்றேன்.

(யாவரும்போதல்.)

---

## ஐந்தாங்களம்.

இடம்:—காஞ்சியிற்கனகாம்புஜத்தினந்தப்புரம். காலம்:—காலை.

நடர்:—கனகாம்புஜம், சிங்காரவல்லி.

கனகாம்புஜம்:—சிங்காரவல்லி! நீசென்று ஏமவதியையும் இந்துவதனை யையும், இன்னும் சற்றுநேரத்திற்குள் வரும்படியாய்ச் சொல்லி விட்டு, விரைந்துவரவேண்டும். காரிய மிருக்கின்றது. எதோ வந் தாயா?

சிங்காரவல்லி:—இதோ வந்துவிட்டேன்! அம்மணி!

(சிங்காரவல்லிபோதல்.)

கனகாம்புஜம்:—தம்பி முகுந்தனுக்கு யான் எத்தனைவிதமாகப் புத்தி கூறி னபோதிலும், கேட்பதில்லையே! "சும்மாவிரு. யானெப்படியா வது காரியத்தைப்பூர்த்திசெய்து விடுகிறே"னென்று எத்தனைமுறை சொன்ன போதிலும் அவை எல்லாம் கேட்டும் கேளாததுபோல் நடக்கிறானே! சர்வ மூடனாயிருக்கிறானே! இவன் எப்படிப்பிழைக் கப்போகிறான்? நம்முடைய வயிற்றிலும் ஒருபிள்ளைபிறப்பதற்கும் ஏதுவில்லையே! என் எண்ணத்திற் கல்லைப் போடுகிறானே! இவன்

ஏன் அழகானந்தனைச் சண்டைக்கிழுக்கவேண்டும்?—ஆயினும் இவ னுற்முன் நமதுகாரியத்தைச் சித்திபெறச்செய்யவேண்டும்! தனனே த்தானே முட்டாளாக்கிக்கொள்ளுகிருனே! பேசாமல் கௌரவ மாக இருக்கப்படாதா?—என்னுலியன்ற வரையிலும் பார்க்கின றேன்!.“முயற்சியுடையா ரிகழ்ச்சியடையார்” என்று ஔவை யாருங் கூறியிருக்கின்ருரே! பார்ப்போம்.

(சிங்காரவல்லிவருதல்.)

**சிங்காரவல்லி:**—அம்மா! யாவரும் அதிசீக்கிரத்தில் இங்குவந்து சேரு வார்கள்.

**கனகாம்புஜம்:**—சரி. இன்னும் ஏதாவது விசேஷசமாசாரம் உண்டா?

**சிங்காரவல்லி:**—முகுந்தர் அழகானந்தரோடு முஷ்டியுததம் புரிந்தவர லாற்றை முன்பே கூறினேனே! முக்கியமானவிஷயம் ஒன்று சொல்ல மறந்துவிட்டேன்! அரண்மனைக்கு யாரோ ஒருவர் அடிக் கடிவநது சரசாங்கியுடன் சம்பாஷித்துக் கொண்டிருக்கின்ருர். அவர் அழகானந்தரின் நண்பராம்! பெயர் சுகுணராம்! ஒருநாள தங்கள் கட்டளைப்படி சரசாங்கியைக் கூப்பிடச் சென்றபொழுது அவர் அவளுடன் வார்த்தையாடிக் கொண்டிருந்தார்.

**கனகாம்புஜம்:**—சரிதான். அது தெரிந்த விஷயந்தான்.—

(இந்துவதனையும் ஏமவதியும்வர)

நீங்களிருவருஞ்சென்றுநந்தனவனத்திற்புஷ்பம்பறித்துக்கொண்டு வாருங்கள். சிங்காரவல்லி! புஷ்பங்களின் பெயரெழுதிய விப ரக்குறிப்பை ஏமவதியிடங் கொடு. (சிங்காரவல்லி விபரக்குறிப்புக் கொடுத்தல்.) விரைவில் வரவேண்டும். (சிங்காரவல்லியைப்பார் த்து)நீயும்சென்று வைத்தியனையான் சொல்லியபடிமருந்துஎடுதது வரும்படி கூறிவிட்டுவா. ஒருவேளை சுகுணன் சரசாங்கியைததே டிக்கொண்டு வரலாம்! அவனைக்கண்டால் தந்திரமாய் இங்கு அழை த்து வந்துவிடு.— (சிங்காரவல்லிபோதல்.)

இராஜாவைத் தான் நமது வசப்படுத்திவிட்டோம். சரசாங்கியை ஏமாற்ற முடியவில்லையே! அழகானந்தனை நினைந்துமிகவும் உருகித தேய்கின்ருளே! நம்காரியம் சுகுணனுற்முன் ஆகவேண்டும்! வாயி ருந்தாலல்லவோ பிள்ளைபிழைக்கும்? இருக்கட்டும். காநதர்வவிவா கநதானே செய்துகொண்டாள்? இருந்தால் என்ன? நம்தம்பியைக் கொண்டு ஒருதாலியைக் கட்டிவிட்டால் பிறகு பார்ததுக்கொள் வோம். (வைத்தியர்வருதல்.)

வைத்தியரே! வாரும். க்ஷேமந்தானே?

**வைத்தியர்:**—அம்மணி! தங்கள் கிருபாகடாக்ஷத்தினால் க்ஷேமந்தான். தங்கள் கட்டளை காதில் விழுந்ததுதான் நோயாளிகளை எல்லாம் அங்ஙனே விட்டு விட்டு ஓடிவந்தேன்! அம்மணி!

**கனகாம்புஜம்:**—கூவுகிறீர்! அதிருக்கட்டும். நீர் யான் நும்மிடம் சொல்லிய மருந்தைக் கொண்டுவந்தீரா?

**வைத்தியர்:**—அதை மறப்பேனோ! (தனக்குள்) அதைமறந்தால் சிரசை மறக்கவேண்டியதுதானே? என்னம்மாள் சூர்ப்பணகைக்குத் தமக்கை யல்லவோ? (வெளியாய) மடியிலேயே பத்திரமாய் வைத்தெடுத்து வந்தேன். அம்மணி! இதோ இருக்கிறது.

**கனகாம்புஜம்:**—நல்லது. இதை எப்படி உபயோகிப்பது?

**வைத்தியர்:**—இதற்கு **மரணதூதி** அல்லது **பரமபத சிந்தாமணி** என்று பெயர். இதை உள்ளுக்குக்கொள்ள இரண்டு நாழிகைப் பொழுதிலேயே பரமபதத்திற சேர்த்துவிடும். ஆனால் சாப்பிடவோ வெகு ருசியாயிருக்கும்.

**கனகாம்புஜம்:**—நல்லது......சிலதைலங்கள் முடிக்கவேண்டி யிருக்கிறது. (சிங்காரவல்லிவர அவளருகிற் சென்று இரகசியமாய் வார்த்தையாடிக்கொண்டிருக்கின்றாள்.)

**வைத்தியர்:**—(தனக்குள்) மகாராணியவர்கள் குணம் எனக்கு நன்றாய்த் தெரியுமே! தெரிந்தும் கிணற்றில் விழவேண்டுமா?

"சசசமறக கிளைகுலங்கள் வேரோ டற்றுத்
தரணிதனில வெகுபாவந் தலையின் மேறகொண்
டிசசையற வெழுநரகில் வீழ்வ தல்லால்
இகபரமொன் றில்லாமல் ஏங்கு வீரே."

"கோததிரங் கிளையொடு குலங்கள் வேரற
வீழ்ததிட நரகினில வீழதல திண்ணமே."

என்று அகஸ்தியர் முதலிய பிரபல ஆயுள்வேதபண்டிதர்கள கூறியிருக்கின்றாகளே! அமமாள் நனமையடைவதறகு நாம் மீளாநரகிறகாளாகலாமோ? யான் மயக்கத்தைச் செய்யுமபடியான மருந்தைக் கொடுத்தேனே யன்றி உயிரைபபோக்கத்தக்க கொடியபாஷாணத்தைக் கொடுக்கவில்லை! காக்கைக்கு வைத்துப் பரீக்ஷை பாாக்கப்போகின்றாள். அதுவும் நல்லது தான். இவள் எல்லாருக்கும் நாமம் சாத்தினால் யான் பட்டைநாமம் பெரிதாய்ச்சாததினேன்! ஏமாறப்போகிறாளே! எமனுக்கும் ஒரு நமன் இருப்பானென்று தெரிந்து கொள்ளவில்லை!

(சுகுணன்வருதல்.)

கனகாம்புஜம்:—என்ன காலடிச் சப்தம்?

சிங்காரவல்லி:—சுகுணர் வருகின்றூர் அம்மணி!

கனகாம்புஜம்:—வாரும் சுகுணரே! (வைத்தியரைப்பார்த்து) வைத்தியரே! வியாதியஸ்தர்களெல்லாம் காத்துக்கொண் டிருப்பார்கள். நீர்போம்! பின்பு விசாரித்துக் கொள்கிறேன்.

வைத்தியர்:—அம்மணீ! மிகவும் கஷ்டம். மறந்துவிடப்படாது! மறந்துவிடப்படாது!!

கனகாம்புஜம்:—சரியாய் விசாரித்துக் கொள்கின்றேன். போம்.

வைத்தியர்:—அம்மணீ! பயமாய் இருக்கின்றதே!

கனகாம்புஜம்:—வைத்தியரே! பயப்படாமற்போம். (வைத்தியர்போதல்.) (தனக்குள்) சனியொழிந்தது! (சுகுணனைப்பார்த்து) நும்மைப்பற்றி மிகவும் கேள்விப்பட்டிருக்கிறேன் எவருடைய துன்பங்களையு நீக்கவல்லவரென்று! (கண்ணூற் சிங்காரவல்லியைப்போக ஜாடை செய்கின்றூள்.) (சிங்காரவல்லிபோதல்.) சிங்காரவல்லியிடம் யாவுந்தெரிந்து கொண்டிருப்பீர். யான்மறுபடியும் நும்மிடங் கூறுவது அனுவசியந்தான்!.....நீர் எவ்வகையினூலாவது சரசாங்கியின் மனத்தைத்திருப்பி எனது தம்பியைப்பலருமறிய மணம்புரியும்படி செய்வீராயின் நுமக்குவேண்டியது எதுவானூலும் அதைத் தடையின்றிப் பெற்றுக்கொள்வீர். அழகானந்தன் திரும்பி வருவதற்கு யாதொரு ஏதுவும் இல்லை. அவனைப்பற்றி யவள் நினைந்துகொண்டிருப்பது வீண்தானே! எல்லாந் தெரிந்த உமக்கு யான் என்ன சொல்லிக் கொடுக்கப் போகின்றேன்? நீர் எப்படியாவது என் கோரிக்கையை நிறைவேற்றிவிட்டால் நீர் பெறும்படியான பெரும் பாக்கியத்தை யான் கூறவேண்டுவதில்லை! கரைப்பவர் கரைத்தாற் கல்லுங்கரையாதோ? சற்று ஞாபக மிருக்கவேண்டும். (வாங்கியமருநதைக் கீழே நழுவவிடுகிறூள். சுகுணன் அதை எடுத்துக் கொடுக்க) நீரே வைத்துக்கொள்ளும். இது அமிர்தசஞ்சீவி என்னும் சிறந்த ஔஷதம்! இவ் வௌஷதப்பிரயோகத்தால் மகாராஜா அவர்கள் ஐநூதரம் தீராவியாதியினின்று நீங்கினூர்! உமது கஷ்டத்திற்கு முன்னூலேயே ஒரு வெகுமதி கொடுக்கும்படி, ஈசுரசமமதியும் உண்டென்பதைத் தோற்றுவிக்கும் பொருட்டே அதுவுங்கீழே விழுந்தது! எனமனம்போல நடப்பீராயின் ராஜாவிடங்கூறி எது விரும்புகின்றீரோ அதை யுமக்களிக்கும்படி செய்வதன்றி, யானும் தகுந்தபடி நடந்து கொள்வதற்குத் தடையேயில்லை! நாழிகையாய்விட்டது! நந்தனவனத்திற்குப் புஷ்பம் பறிக்கச்சென்ற பெண்கள் வருநேரமாய்விட்டது!—ஐயா! நீர் இந்தவழி

யாகச் செல்வீராயின் அரண்மனைத் தெருவாயிலிற் கொண்டு போய்விடும்! உம்மை மறுபடியும் பார்ப்பேன். யான் கூறியவை கள் ஞாபக மிருக்குமா?

சுதனன்:—எதறகும் தங்களை மறுபடியும் வந்து பார்க்கிறேன். அம்மணி!

கனகாம்புஜம்.—சரி! அப்படியே! ஞாபகம் இருக்கவேண்டும். போய்வருகின்றீரா?

சுதனன்.—(போகும்போது தனக்குள்) எனது நண்பனுக்கா யானது ரோகம் நினைக்கவேண்டும்? அதைவிட இறத்தல் ஒரு பெரிய காரியமன்றே! (சுகுணனபோதல.)

கனகாம்புஜம்:—திருட்டுப்பயல்! சற்றுவது அசைகின்றானா? இவனை நமபுவதிற் பிரயோசனமேயில்லை. இவனைக் கொன்றுவிட்டால் பிறகு சரசாங்கிக்கு அழகானந்தன் செய்தி கூறுவோர் யாரிருக்கின்றார்கள்? அதனாறான் வைத்தியர் யாததிரை மருநதை உதாரமபோற் கொடுத்தேன.—இறப்பது நிச்சயம! பணமெனறால் யாரும் ஆசைப்பட்டு எந்தககாரியமும் செய்யத் துணிவாாகள! இவன் முகக்குறிப்பால் அதை லக்ஷியம் பண்ணினவனெனறு சிறிதேனுந் தோனறவில்லை!—இருக்கட்டும! பிறகு சரசாங்கி நமது தம்பியை யன்றி யாரை மணம் புரிவாள்? பாாப்போம. இராஜாவிடம சற்று முடுக்கினால் நமதெண்ணம் நிறை வேறுகினறது! (சிங்காரவலலிவர) எங்கே நந்தனவனததுக்குச சென்ற பெண்கள?

சிங்காரவல்லி.—இதோவருகிறார்கள.

(இந்துவதனையும் ஏமவதியுமவருதல்.)

கனகாம்புஜம்—வாருங்கள். புஷ்பங்கள நல்லவாசனை வீசுகின்றன. தலைமிறக்குவதறகுத தகுநதவைகளே! என்ன எனன புஷ்பங் கொண்டுவநதீாகள? எங்கே பார்ப்போம்?

(கைநீட்ட)

இந்துவதனையும்ஏமவதியும்.—

(பாடுதல்.)

இராகம் - கலயாணி. தாளம் - ஆதி.

பல்லவி.

பாராய - அமமா - பாராய - மலர்
பறிததுச - சிரத்தையுடன
கரத்திற கொண்டு வந்தோம். (பாராய்)

**அநுபல்லவி.**

ஏரார் மன்மதபாணம் எழின் மனோரஞ்சிதம்
சீரார் நந்தியாவட்டம்செழித்த மருக்கொழுந்தும் (பாராய்)

**சரணங்கள்.**

மல்லிகை முல்லையு மருவிரு வாட்சியும்
விலவமுங் கோங்கும் விலாமிச்சம் வேருமே (பாராய்)

பாரிசாதமெனும் பவளமல்லி சண்பகம்
நீரிற செங்கழுநீர நிறைமணப் பாடலம் (பாராய்)

பகராருஞ சமபங்கி பனிநீர புட்பமொடு
மகிழங கொன்றை புன்னை வனந்தனி லுளவிவை (பாராய)

**கனகாம்புஜம்:**—சரி. மற்றைப்புஷபவகைகளை ஆளனுப்பிக்கொண்டுவரச் செய்வோம். இவற்றைப்பததிரமாய் நமது அறையிற் கொணடு போய்ச்சேருங்கள,—

(இந்துவதனையும் ஏமவதியும் போக)

இதோ யானும் வருகின்றேன். (யாவரும்போதல்.)

---

## ஆறுங்களம்.

இடம்:—காஞ்சியிற் சரசாஙகியின்கன்னிமாடம். காலம்:—காலை.

**நடி —சாசாங்கி.**

**சாசாங்கி.**—தகப்பனாரோ கொடுமைக் குணமுடையவராக இருக்கின்றார்! நயவஞ்சகி சிறியதாயோ வாழை மேலே குளிர்ந்து உள்ளே வெபபங்காட்டுவதுபோல,உதட்டி லொன்றும் மனதிலொன்று முடையவளாயிருக்கின்றாள்! மணம்புரிநத என்னை முகுந்தன் கல்யாணஞ்செய்துகொள்ளப் போகின்றானும்! ஓ! என் அனபே! நீயோ அயலூரிலிருக்கின்றாய்!என மனமோ தாமரையிலை நீர் போலத் தததளிக்கின்றது! என்னைபபோல் இவ்விதத்துன்ப மநுபவிப்பவர்கள் உலகிலிருப்பார்களோ? என்னை என் சகோதரர்களைப்போலப் பூதந் தூக்கிக்கொண்டு போயிருக்கப்படாதா? யான்ராஜகுமாரியாய்ப் பிறந்தென்ன பிரயோசனம்? இதைவிடக்கவலையில்லாத இடையர் மகளாய்ப் பிறந்து காலத்தைத்துன்பமின்றிக் கழிக்கலாகாதா? ஈச்சுரன் வருத்தமென்பதையே யநுபவிக்க என்னைப் பெண்ணாய்ப் பிறப்பித்தான்!—ஐயோ!— (ஏமவதிவருதல்.)

ஏமவதி.—அம்மா! சுகுணரும் மற்றொருவரும் தம்மைப்பார்க்க வந்திருக்கின்றார்கள்!

சரசாங்கி.—வரச்சொல். (ஏமவதிபோதல்.) [தனக்குள்] சுகுணரே! உமமைத்தான் எனக்குற்றதுணை யென நமபியிருககினறேன்!—

(சுகுணருமதுன்மதியும்வருதல்.)

சுகுணன்.—அம்மா! தஞ்சைமா நகரத்திலுள்ள தமது கணவரிடமிருந்து இவர் கடிதங்கொணடு வந்திருக்கின்றார்!

துன்மதி.—(சரசாங்கியையுற்றுப்பார்தது) அம்மா! என்ன உங்கள்முகம் வாடுகின்றதே! தமது கணவர் க்ஷேமமாயிருக்கின்றார்! தஙகளை நினையாமலிருப்பதும் (கடிதம் கொடுககின்றன.) இல்லை.

சரசாங்கி.—ஐயா! மிகுதியும்வந்தனம்! உட்காருங்கள்!—

துன்மதி.—(தனக்குள்) இவள் நடையுமுடையும் (சரசாங்கி மௌனமாயக கடிதம் வாசிககினறாள்.) வாரதசையும் மரியாதையும மனததைக் கவர்கின்றன.—இதற்குத் தகுநதபடி மனமும் நிலைப்படடிருநதால இவளே பெண்ணுவாள?

“பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.”—

யான பந்தயம இழககவேணடியதுதான்..... மனமே! அதைரியப படுகினறாயா! எனன! அஞ்சாதே! ஒருவழி யில்லாவிட்டால மற றொருவழி யிருக்கின்றது! ஒருகை பாாபபோம!

சரசாங்கி.—(கடிதததை வெளியாய்வாசிக்கினறாள்.) “இவர்மிகவும் பெரிய மனிதா! இவாமீது மிகுதியும ஞாபகமிருக்கவேண்டும'என மீதுளள நேசத்தைபபாராட்டி நனறாய் விசாரிககவேணடும!”— ஐயா! எனனுலானவரையும தங்களை யுபசரிப்பதற்குத தடையேயிலலை!

துன்மதி.—நல்லதமமா!—(திரும்பி) உலகத்து மனிதாகளெல்லாம மைத்தியம பிடித்தவர்கள்! அவர்களுக்குககண் எனபதே கிடையாது! நல்லது கெட்டது தெரிநதுகொள்வதேயில்லை!—

சரசாங்கி.—எனப்படிக கூறுகினறீர்களா?

துன்மதி.—இல்லை. தெரியாமற கிணற்றில் விழுநது தத்தளிக்கினறார்களா!

சரசாங்கி.—என்ன சமாசாரம்?

துன்மதி.—ஒன்றுமில்லை. (சுகுணனைப்பார்த்து) ஐயா! நீர் தயவுசெயது, என்னோடுவந்தவர் இநத ஊர்ப்பழக்கமிலலாதவர்! ஆதலால்.—

சுகுணன்.—இதோபோய் அவருக்கு வேண்டியவற்றைச் செய்கிறேன!

(சுகுணனபோதல்.)

**துன்மதி**:—இலக்குமிபோலும் மனைவியரைவீட்டில் வைத்துவிட்டுக் குறத்திபோன்ற ஸ்திரீகள்மேல் மோகங்கொண்டு அவர்களுககுக் குற்றேவலும் புரிகின்றார்களே! ஐயோ! பாவம்!

**சரசாங்கி** —க்ஷேமமாயிருக்கின்றாரோ எனது நாயகர்?

**துன்மதி**.—சுகமாக விருக்கின்றார்! (திருட்டுச்சிரிப்புச்சிரிக்கின்றான்.)

**சரசாங்கி**:—சந்தோஷமாக விருக்கின்றாரோ? இல்லையோ?

**துன்மதி**:—சந்தோஷத்திற் கென்ன குறைச்சல்? சிரித்து விளையாடிக கொண்டு தானிருக்கின்றார்!

**சரசாங்கி**:—இங்கிருக்குமபோது துக்கமாயிருப்பது வழக்கம்! அப்படி ஏதாவது அங்கும் இருநது கொண்டிருக்கின்றாரோ வென்பதைத தெரிந்துகொள்ளும்படியாகக் கேட்டேன். வேறொனறுமிலலை.

**துன்மதி**:—அவர் ஒரு கணமேனுந் துக்கமாய் இருந்ததைப்பார்த்ததே இலலையே! எங்களோடு சேலத்தார் ஒருவர்வந்திருக்கினறார். அவர் நகரத்திலிருக்கும் தமது பெண்சாதியை நினைநது நினைநது உருகுவார்! அதைக்கண்டு நுமதுகாதலர் பரிகாசஞ்செய்வதனறி ஒரு பெண்ணைப்பறறி இப்படியும் வருந்தலாமோ வென்று கண்டிபபாா.

**சரசாங்கி**:—எனது கணவரா?

**துன்மதி**—ஆம். தடையிலலாமல்! அவர் பரிகாசஞ்செய்வதைப்பார்க்க மகா வேடிக்கையா யிருக்குமே!

**சரசாங்கி**.—அப்படி நடக்கமாட்டாரே ஒருபொழுதும்!

**துன்மதி**:—நடக்கவாமாட்டார்? நடக்கின்றாரே! அவரையும் பார்த்து உங்களையும்பார்த்தால எனக் [illegible] கினறது!

**சரசாங்கி**.—என்ன காரணமோ?

**துன்மதி**:—என்ன காரணம்! நீங்கள் தெரிந்துகொள்ள வில்லையோ? மிகவுந துக்கத்தை விளைக்கத் தகுநததே!

**சரசாங்கி**:—ஐயா! தயவுகூர்ந்து சற்று வெளிப்படையாகக் கூறவேண்டும! என்னத்திற்காக என்மீதிரககப்படுகின்றீர்?

**துன்மதி**:—தங்களுடைய சுகத்தை!—யான் ஏன் கூறவேண்டும்?—

**சரசாங்கி**:—என்னைப்பற்றிய சிலவிஷயங்கள் தாங்கள் அறிந்திருப்பதாக எனக்குத் தோனறுகின்றது! தாம்கூறினலன்றோ அதைஒழுங்குபடுத்தும்படி பார்க்கக்கூடும்? சொல்லும்படிவாயெடுத்தும் ஏன் அடக்கி விடுகின்றீர்கள்?

துன்மதி:—இப்பேர்ப்பட்ட முகவிலாசமுடைய பெண்சாதியைப் பிரிந்தாலும் படத்திலெழுதிப்பார்த்துக கொண்டிரேனே? பரஸ்திரீகளை நினைக்கவும் மனமவருமோ?

சரசாங்கி:—எனது பிராணநாயகா தொண்டைநாட்டை முழுது மறநதார்போலும்!

துன்மதி.—யான் கூறவேண்டாமென்று பார்த்தாலும் தங்கள் முகச் சோதி எனனை மயககிக்கூறும்படி செய்கின்றது! அவர் அங்கே தாசி மயக்கத்தில் விழுநது தத்தளிக்கின்றார்! நீங்கள் ஏன இபபடி வருந்தியிருக்கவேண்டும்? தகுந்த புருஷனோடுகூடி ஒத்த அனபினராய்ச் சுகிப்பதுதானே? இளமைப் பருவத்தை வீணாக ஏனகழிக்க வேண்டும? பிறகு வயோதிகதசையில் இளமையை நினைந்து கண்கலங்கவேண்டி வருமே!

சரசாங்கி:—இனி இவ்வார்த்தைகள் என் காதில் விழவேண்டாம்! ஐயா!

துன்மதி'—தமது குயில் மயங்கும் வார்த்தையைக்கேட்டும் தமது தேக சௌநதரியங்களைக்கண்டும்,தமமைக்கட்டியணைத்த சுகந்தோனறாக களிததும் நினற ஒருவனோ பரஸ்திரீகளைக் கையாற்றொடுவது? பாறசாதத்தைவிட்டுப புளிச்சாதத்தை விரும்புவானோ? பாலடிசில் அதனை நுகருந தனமை யுடையவனுக்கன்றோ உபயோகப படல் வேணடும?

சரசாங்கி—என்ன வீணான விஷயங்களைப்பறறிப் பேசிக்கொண்டிருக்கிறீரே!

துன்மதி.—மயிலும்வெட்கும சாயலை யுடையவளே! உன் நலம் வீணாய்ப் போவதைபபாாகக எனக்கு மனம் வரவில்லை! உனதிளமை பயன படும்படி அநுபவிக்கத் தகுந்தவனன்றோ அநுபவிககவேண்டும?

சரசாங்கி:—உமக்குத தகாத விஷயங்களைக் குறிதது நீர் வார்த்தையாட வேண்டாம!

துன்மதி—கண்ணே! எனன கோபித்துக் கொள்கின்றாய? உன்னைச் சிறிதேனும் நினைக்காதவனை நினைத்து நீ ஏன கனவு காண்கின்றாய்? உனது ஒரு முததததிற்குப் பதினாயிரம் பொனனுங் குறைந்த விலையன்றோ? எனனை உனக்கே காணிக்கையாகக் கொடுத்துவிடுகினறேன!மடலும் ஏறததுணிநதேன்!எப்போதும் உன்னை விட்டுப் பிரியாமல் உனக்குக் குற்றேவல் செய்து கொண்டிருப்பேன்! கண்ணே!—

(அவள்கையைப்பிடிக்கப்போகின்றான்.)

சரசாங்கி:—ஐயோ! சுகுணரே! எங்குச்சென்றீர்?

துன்மதி.—தேனே! எங்கே ஒருமுத்தங் கொடு. பாரப்போம். நாணமோ என்ன? பிணங்கிக்கொள்கின்றாயோ? எனனிடததில் என்ன உனக்குப்பிணக்கு?

சரசாங்கி.—தூர நில்லும்! கிட்டே வராதீர்!— துஷ்டரே!— உமது வார்த்தைக்குச் செவிகொடுதத எனது காதையான அறுத்தெறிய வேண்டும்! நன்மை கூறுவது போலக் கெடுக்கவநதீரே! நல்ல யோக்கியதை! சிநேகனுக்குச் செய்கின்றநனறி நனறாயிருநதது! நீா கூறியன வெல்லாம் அபத்தம் என்று தெரிநது கொண்டேன! பாவி! கடிதம் வாசிததேனே! அதிற் குறிப்பித் திருந்ததையுமறந் தேனே!—சுகுணரே! எங்குச் சென்றீர்? (துனமதியைநோககி) எனது தகப்பனாரிடங்கூறி யும்மைச் சிரசாக்ஞை புரியுமபடி செய கினறேன்!—ஐயோ! சுகுணரே! எங்குச் சென்றீர்?

துன்மதி.—ஓ! என்னருமைத்தோழா! நீயன்றோ கொடுததுவைத்தவன? ஓ! அழகானந்தா! உன்குணத்திற்குத் தகுந்தவளே சரசாங்கி! இப்படியிருக்கின்ற ஸ்திரீயுமான்களை யான் உலகிற்கண்டதேயில்லையே! புண்ணியம் பண்ணினால் உன்னைப்போற் புண்ணியம பண்ணவேண்டும்! நீகூறியதைவிடப் பத்துப்பங்கு அதிகமேயன றிச் சிறிதுந் தவறில்லை!—(சரசாங்கியைப்பார்த்து) அம்மா! தங்களிடம் இவ்விதமாக வார்த்தையாடின வெல்லாம் தங்களைப்பரிசோதித் தறியவேண்டியன்றிவேறன்று. உங்களுடைய மானததைப போக்க நினைததவனல்லேன்! தாங்கள் ஒருவேளை சம்மதிததிருந் தாலும் தங்களை நிராகரிப்பேனேயன்றி ஒப்புக்கொள்ளேன! சிநேகன மனைவி தன்தாயல்லளோற் சகோதரி, பெண்ணல்லளோ? இது யானறியேனோ? அனனமிடும்வீட்டிற் கன்னமிடலாமோ? உமது மனவுறுதியைக் கண்டறிநதேன்! அழகானந்தனைப் போன்றசணவனை யுலகத்திற்காணவுங்கூடுமோ? அவனைப்போல் மனவுறுதியை யுடையபுருடரும் உலகிலுண்டோ?

சரசாங்கி—திருப்பிக் கோக்கின்றீரோ?

துன்மதி.—இராமனுஞ் சீதையும் போன்றவர்கள் அவரும் நீருமனறிவேறே யெவருமில்லை! நீரே யுலகமெய்சசத் தரும பதிவிரதை!

(பாடுதல்.)

இராகம் - சாவேரி. தாளம - ஆதி.

**பல்லவி.**

தருந்தரும் பதிவிரதா செந்தேனே - யுன்றன்
சங்கதி யறியாமல் வந்தேனே.

அநுபல்லவி.

புருங்கருமங் கருதாப் புன்மை யாள னென்னது
புகதி விளங்கிட வுன் புருஷ னன்று சொன்னது (தகுந்)

சரணங்கள்.

கோதமன் சதியிந்த்ரன் கொள்கைக் குடன் பட்டாளே
கோகன்னனைத்ரௌபதி கூடவெண்ண மிட்டாளே
மாதுதாரை சந்த்ரனை மருவிமானங் கெட்டாளே
மங்கையேயவர்போலெண்ணிவழுத்தியயான்முட்டாளே(தகுந்)

மகிழநன் பிரிந்தசுந்தர மதியும் வழுவி லாத
வனப்புடைய சீதையும் வாய்ந்தகற பழி யாத
புகழ்சேர் தமயந்தியும் புவியிலும மையும் போதப
போறறிச் சமமாமநலல புததியுடையாரொன் ஞேதத(தகுந்)

பேதைமைக் கலன்கொண்ட பெண்கள் மதி மபககல
பெரியதன்றென்றுரைக்குமபேசசிங்கதி சயிக்க
ஏதுநான்பசபபியும் இணங்கிநலம் பயகக
விடஙகொடாமற கற்பினை ஏந்துமுனை வியக்கத(தகுந)

ஏ! ராஜபுத்திரி! உனக்கமைந்த சணவனே கணவன்! மலரும் மண மும் தீபமும ஒளியும்போன்று பிரகாசிக்கின்றீர்கள! யான தஙக ளுக்குக் கோபமூட்டியும் கோபிதநுக் கொள்ளாமலிருந்தீர்களே! உங்களைப்போற குணசாலியை யுலகிற் காண்பதரிதரிது! தாங்கள மன்னிக்கவேண்டும்! அம்மணி!

சரசாங்கி.—நல்லது ஐயா! தாங்கள் இன்று இங்கேயே போசனஞ் செய யுங்கள!

துன்மதி.—அம்மணி! ஒருவிண்ணப்பம். அதைப்பற்றித் தாங்கள் கொஞ சங கவனிக்க வேண்டும.

சரசாங்கி:—என்ன அது?

துன்மதி —நாங்கள் சோழநாட்டரசருக்குக காணிக்கை செலுதத யோ சிததிருந்தோம். அதற்காகச் சில விலையுயர்நத சாமான்கள் வாங கிவைததிருக்கின்றும்! அநதப்பெட்டியைத தாங்கள் காப்பாற றிக் கொடுக்கவேணடும்!

சரசாங்கி:—எனது கணவரும் அதிலொருவரானபடியால் அவசியம் கொ ண்டுவாருங்கள். இங்கு என்படுக்கையறையில் பததிரமாயிருக் கும்.

**துன்மதி**:—மிகவும் சந்தோஷம்! எனது வேலேக்காரர் வசமனுப்புகின றேன்! இன்றிரவு மாத்திரமே! நாளைக்கு ஊருக்குப புறபபட வேண்டியிருக்கிறது.

**சாசாங்கி**:—சிலதினங்களிங்கிருந்து செல்வதுதானே?

**துன்மதி**:—தங்களிடம் கடிதம கொடுக்கும்படியாகவே இரண்டு நாட் பிரயாணம் வரும்படி நேரிட்டது! யான் இனி நிறக நாளில்லை. கடிதம் ஏதாவது எழுதும்படி யிருந்தால் இன்றிரவே எழுதிவை யுங்கள்.

**சாசாங்கி**:—அப்படியே எழுதிவைக்கின்றேன. பெட்டியை யனுபபுங் கள். அதி சாக்கிரதையாய்க் காப்பாறறித் தங்களிடம் ஒபபுவிக கப்படும். ஏமவதி!—

(ஏமவதிவர)

இவரை அரண்மனே வாசலிற் கொண்டுபோய விட்டுவிடு.

(துனமதியும் ஏமவதியும் போதல்.)

இந்துவதனே ஏன் இன்னும் வரவில்லை? எங்கிருபபாள? அவசி யம் பார்க்க வேண்டுமே! (போதல.)

## முதலங்கம் முற்றிற்று.

---

# அங்கம்-II.

## முதற்களம்.

*இடம்:—அரண்மனைவாயின்முற்றம். காலம்:—மாலை.*

**நடர் —முகுந்தன், பிரபுக்கள்.**

**முகுந்தன்** —*நீங்கள் எல்லாம் இருந்தும் பிரயோசனமே இல்லை. ஐயா!*

**முதற்பிரபு** —*என்ன ஐயா! என்ன?*

**இரண்டாம்பிரபு** —*என்ன ஐயா! அப்படிக் கூறுகின்றீரே! உம்மை நன்றாய் விசாரிக்கின்றதில்லை என்கின்றீரா?*

**முகுந்தன்** —*ஆமாம். ஐயா!*

**முதற்பிரபு** —*ஆமாம. ஐயா! மறந்துவிட்டேனே! பார்த்தீரா? ஆமாம. ஐயா! கல்யாணசமாசாரம எப்படி இருக்கின்றது? ஐயா!*

**இரண்டாம்பிரபு** —*(தனக்குள்) எத்தனைபேர் விசாரிக்கின்றார்கள்! இன்னுமா நாமும் விசாரிக்கவேண்டுமா? விசாரிப்பதற்கு ஆயுதந்தான அகப்படவில்லை!—(வெளியாய்) கல்யாணம் இருக்கிறபடி யிருந்துகொண்டிருக்கின்றது!*

**முகுந்தன்** —*ஆமாம. ஐயா!*

**முதற்பிரபு** —*ஆமாம. ஐயா! இழுப்பிலே இருக்கிறது! அப்படித்தானே!*

**இரண்டாம்பிரபு** —*பின்னென்ன? அப்படித்தான். இழுப்புத்தான!*

**முகுந்தன்**.—*ஆமாம. ஐயா! இல்லை ஐயா! இல்லை ஐயா! சித்திரைமாதம கல்யாணந்தான. ஐயா!*

**முதற்பிரபு** —*யாருக்கு?*

**இரண்டாம்பிரபு** —*அழகானந்தனுக்கு!*

**முகுந்தன்**.—*ஆமாம். ஐயா! இல்லை ஐயா! இல்லை ஐயா! எனக்கு.*

**முதற்பிரபு** —*உமக்கா! நல்லது.*

**இரண்டாம்பிரபு**.—*பெண் எங்கே ஐயா!*

**முகுந்தன்** —*சரசாங்கிதான்! வேறேயார்? ஆமாம். ஐயா!*

**முதற்பிரபு**—*உமது பாட்டன் யாரோ ஒருவன அழகானந்தனிட மிருந்து வந்திருக்கின்றானே! அது தெரியாதா வுமக்கு?*

முகுந்தன்.—அழகானந்தனுவந்தான்? முன்னேதான் இரண்டுபேர் தடுத்து விட்டார்கள். ஓடிபபோனுன். இப்போதுகூடவா? உதைத்துவிட்டு வருகின்றேன்! விடுங்கள் ஐயா! என்னை.

(இருவரும்முகுந்தனைப்போகவொட்டாமற் றடுத்தல்.)

முதற்பிரபு—முன்னே உதைபட்டதுபோதும். ஐயா! அவசரம் வேண்டாம்! சற்றுநில்லும். ஐயா!

இரண்டாம்பிரபு—இதை மாத்திரம் கேட்டுவிட்டுப்போம். ஐயா!

முகுந்தன்—என்ன ஐயா! தப்பி ஓடிப்போகப் போகின்ருன்! சீக்கிரம் சொல்லும். விடுங்கள். ஐயா! என்னை.

முதற்பிரபு—யான் சொன்னது தெரிநததா!

முகுந்தன்:—நீர் சொன்னது தெரிந்தது.

இரண்டாம்பிரபு—மட்டைக்கு இரண்டு கீற்றென்றுதானே தெரிநதது! இருக்கட்டும். இப்போது போகப்போகின்றீரே! எனன ஐயா! உதைப்பதாகக் கூறினீரே! ஒருகாலிலேயா அல்லது இரண்டுகாலிலேயாஉதைத்துக்கொள்ளப்போகின்றீர்?இதைமாததிரஞ்சொல்லிவிட்டுப்போம்.

முகுந்தன்.—ஆமாம். ஐயா! நல்லகேள்விகேட்டீர்! ஒருகாலிலே யுதைத்தால் சரியன்று. ஐயா! நீர் சொன்னீரே நல்லயுக்தி! இரண்டு காலிலே யுதைத்துக்கொள்ளப் போகின்றேன்!

(இரண்டுகாலிலே யுதைத்துக்கொல்லப் போகின்றேன் என்பதற்கு வாய்தவறியுதைததுக் கொள்ளப்போகின்றேன் என்கின்றுன.)

இரண்டாம்பிரபு—*ஆனுல் அதுவேசரிப்பட்டங் கொடுக்கும் ஐயா! இரண்டுகாலையும் உதைத்துக்கொண்டு மண்டையுடைந்து கீழேவிழுநதுபல்லை யிளித்துத் திருவடிதீக்ஷைசெய்து கொண்டால் கல்யாணநதான். ஆம். ஆம்.

முகுந்தன்:—வேசரி என்ருல் என்ன? ஐயா!

இரண்டாம்பிரபு.—இது தெரியாதா! கேசரி என்ருல் சிங்கம்! வேசரி என்ருல் கழுதை!

முதற்பிரபு:—யான் சொன்னதில் நீரென்ன தெரிந்துகொண்டீர்?

முகுந்தன்:—அழகானந்தன் வந்தான் என்ருயே. ஐயா!

முதற்பிரபு—இல்லை ஐயா! இல்லை ஐயா! அழகானந்தனிடமிருந்து கடிதம் சரசாங்கிக்கு வந்ததென்றன்ருே சொன்னேன்?

* இந்த வாக்கியத்தை யுற்றுநோக்க விருபொருள்பயககும்.

இரண்டாம்பிரபு.—(தனக்குள்) மண்டையிலே களிமண்தானே அடைத்து வைத்திருக்கிறது! அங்கேஏன் அனுத்துணைபுத்தியாவதிருக்கும்?—நலலது முகுந்தரே! இப்படிவாரும். நீர் கல்யாணம் கல்யாணமென்று சொல்லிக் கொண்டிருக்கின்றீரே! சரசாங்கிக்குச் சம்மதந்தானா?

முகுந்தன்.—எனக்குச் சம்மதந்தான்! இப்போது அழகானந்தன்தான் வரப் போகிறதில்லையே! என்னையல்லாமற பின்யாரைக் கல்யாணம் பண்ணிக்கொளளப போகின்றாள்?

இரண்டாம்பிரபு.—மனப்பால் குடிககின்றீரோ? இங்குவாரும்! யான் சொல்வதைக்கேளும். நேராகப்போய் 'என்னைக் கல்யாணம்பண்ணிக்கொள்' என்று கேளுமே!

முதற்பிரபு.—இவரைத் திரும்பித்தான் பார்ப்பதில்லையே! இவரெங்கே நேராகப்போகிறது?

முகுந்தன்.—ஆமாம். ஐயா! அதுமுடியாது! வேறு ஏதாவது ஒருதந்திரம் சொல்லுமே!

முதற்பிரபு.—இப்போது சொன்னீரே! இரண்டுகாலாலுதைத்துக் கொள்ளும்படி. அதைப்போல் ஒருதநதிரம சொல்லுமே!

இரண்டாம்பிரபு.—ஆனால் சொல்லுகின்றேன்! யோசிககின்றேன்!—அவளகாலிலேவிழுமே!

முகுந்தன்.—நானா ஐயா! காலில்விழுகிறது?

இரண்டாம்பிரபு.—உம்மை யான்சொல்லவில்லை! கோபித்துக்கொள்ளாதீர்! ஐயா! வேறொன்று சொல்லுகின்றேன்! நீர்நீதிநூல் வாசிததில்லையோ? அதில் 'தையலைப் பாடிமகிழ விக்க வேண்டு'மென்பது நுமக்குததெரியாதோ?

முதற்பிரபு.—நீர்சொல்லுகிறது மெந்தச்சரி! ஐயா!

முகுந்தன்.—நீர்சொன்ன தென்ன? நன்றாய்ச்சொல்லுங்கள். ஐயா!

இரண்டாம்பிரபு.—பெண்பிள்ளைகளுக்குப் பாட்டுப்பாடவேண்டும். ஐயா! அப்போதுதான அவாகள் கலயாணஞ்செய்து கொள்வார்கள!

முகுந்தன்.—ஆமாம். ஐயா! ஆனால் எனக்குப் பாடத்தெரியாதே!

இரண்டாம்பிரபு.—உமக்கு முன்னமே வேசரிப்பட்டங் கொடுத்திருக்கினறதே! நீரேன்பயப்படுகின்றீர்? வாயைத் திறந்தால் வண்ணன வருவான்! வந்தால் நுமககென்னபயம்? (முதற்பிரபுவைபபார்தது) ஏன் ஐயா? இவர்பேசினால் குயில்கூவுகிறாற்போல் இல்லை.? அவருடைய கெட்டிககாரததனம் அவருக்குத் தெரியவில்லை!

**முகுந்தன்:**—எனக்கு ஒருபாட்டும் தெரியாதே!

**முதற்பிரபு:**—கீரேன ஐயா! வருத்தப்படுகின்றீர்? யான் சொல்லிக்கொடுக்கின்றேன. வாரும்.

**முகுந்தன்.**—சொல்லிக் கொடுக்கின்றீரா?—இங்கேயே சொலலிககொடும. இப்பொழுதே சொல்லிக்கொடுக்க வேண்டும்.

**முதற்பிரபு:**—வாரும்! சொல்லிக் கொடுக்கின்றேன்.

**முகுந்தன்:**—வேண்டாம். இங்கேதான் சொல்லிக்கொடும்.

**முதற்பிரபு:**—அப்படியானுல் யான் பாடும்போது நீர் கூடப்பாடுகினறீரா?

**முகுந்தன்:**—ஆ ஆ அப்படியே பாடுகின்றேன். சொல்லிக்கொடும்.

**முதற்பிரபு:**—

(பல்லவிபிடித்துப் பாடுதல்.)

இராகம் - தன்யாசி. தாளம் - ஆதி.

**பல்லவி.**

சரசி யடியென் கண்ணே-கூடவிது
தருணந் தருணம் பெண்ணே.

முகுந்தரே! சும்மாவிருக்கின்றீரே! பாடும்.

**முகுந்தன்:**—நீர்மற்றதும் பாடிமுடித்தபின்பு பாடுகின்றேன்.

**முதற்பிரபு:**—ஆனுற்சரி. (பாடுதல்.)

**அநுபல்லவி.**

கரிச்ற வெதிர வந்து
கனிந்துவாய முத்தந் தந்து (சரசி)

**சரணங்கள்.**

வில்லெனும் புருவத்தால் விளைந்திடுங் காமன் போரை
வலவிமிகவு மாறறில வர்ணிபபே னுன்றன் சீரை (சரசி)

மார்பை யிலக்கு வைத்து மன்மதன் வில லெடுத்துப
பாரில் வருத்துகின்முன் பஞ்ச பாணந் தொடுததுச (சரசி)

ஏதடி யுனக் கென்மே லிந்த வஞ்சனை சாற்று
காதல மீறுமே மனங் கனிந்தெனைக காப பாறறு (சரசி)

பாடல்முடிந்தது. நீர்பாடுகிறதுதானே!

**முகுந்தன்.**—இந்தப்பாட்டு வேண்டாம். ஐயா! வேறொருபாட்டுச் சொல்லிக்கொடும்.

முதற்பிரபு—ஏன் ஐயா?

முகுந்தன்:—இது பெரியபாட்டாயிருக்கிறது! இதுவேண்டாம். வேறொன்று சொல்லிக்கொடும்.

முதற்பிரபு—அப்படியானால், வாரும் சொல்லிக் கொடுக்கின்றேன்.

முகுந்தன்—சொல்லிக் கொடுக்கின்றீரா? இதோவந்து விட்டேன். (இரண்டாமபிரபுவைபபார்தது) நீரவரமாட்டீரோ?

இரண்டாம்பிரபு:—நீங்கள் போங்கள். இதோவருகின்றேன்.—

(முகுந்தனும் முதறபிரபுவும் போதல்.)

முகுநதா! அடேமூடா! பெறறோர்களேஉன்னையும் பிள்ளையாய! அவாகளபெறற பாககியமே பாக்கியம! உனது தமக்கையையும் உன்னையும் ஒரேவயிறறிற்றானே பெற்றாள்உனதுதாய்? அபபடியிருக்க அவளது புததிசாலித்தனத்திலும் நயவஞ்சகததிலும், பதினாயிரததிலே யொருபங்கு கூட உன்னிடமில்லையே! ஏனோ?—அழகும் அனபுமே யுருவாயமைநத சரசாங்கி! நீ நனறாயிரு! சுகமாயிரு! அழகானந்தனோடுவாழநதிரு! ஈச்சுரன நும மிருவர் மனததிலும் இருமபுக்கும் காநதததுக்கு முள்ள ஒறறுமையை யுண்டாககட்டும! சிறறனையினது நயவஞ்சகத்திற கிணங்கி மயஙகாதே!.. முகுநதன் குலைககப்போகினறான்! யானும போகின்றேன். (போதல்.)

---

## இரண்டாங்களம்.

இடம்:-காஞ்சியிற்சரசாங்கியின்சயனககிருகம். காலம:-நள்ளிரவு

நடர்—சரசாங்கி, இந்துவதனை.

[சரசாஙகி வாசிததுககொண்டிருக்கின்றாள். இநதுவதனை நினறு கொண்டிருக்கின்றாள. ஒருமூலையில் ஒருபெட்டி யிருககின்றது.]

சரசாங்கி—இந்துவதனே!

இந்துவதனை—ஏன் அம்மா?

சரசாங்கி—நாழிகை எவ்வளவு ஆயிற்று?

இந்துவதனை—பதினைந்து நாழிகை!

சரசாங்கி—அப்படியானால் அதிகநாழிகையாய் விட்டது! இநதப்புததகத்தில் இவ்விடததிற் குறியிட்டுவைப்பாய். நீயும்சென்று சயனிததிரு. (இந்துவதனைதீபத்தைஅவிக்கச்செல்ல) விளக்கெரியட்டும்.

அதை ஏன் அவிக்கின்றாய்? விடிய நான்கு நாழிகைப் பொழுது ச்கு, எழுந்திருக்கக் கூடுமானால் இங்குவந்தென்னை எழுப்புகின றாயா?—நித்திரையோ என்கண்ணை மயக்குகின்றது.—

(இந்துவதனைபோகின்றாள்.)

(பாடுதல்.)

பைங்கணா னழகா னந்தப் பார்த்திபன் வாரா னாகி
வெங்கணா னானென்றன் வேதனை யென்ன சொலவேன்
எங்கணா யகனே தேவ ரிடர்கெடுத் தின்ப நலகும
அங்கணா தமியேன் றன்னை யாண்டருள புரிவாய் போறறி.

என்றுமே யுறங்க லேனா யிடர்ப்படா நின்ற வென்னை
இன்றுதா னுறகக மெலலா மெதிர்த்துடற் சிறையி லிடடு
நன்றிமைக் கதவ மூட நயந்தது மெறறி னுககோ
ஒன்றுமே யறிய கிலலே னுமபர்நா யகனே போறறி.

எந்தையே யெம்பி ரானே யிமையவாக் கரசே யன்பே
கந்தினை யடர்கரும் வெற்றிக் களிற்றுரி போர்த்த நாதா
சிந்தைநின் னிடத்தில வைத்தேன் திருவருள் செய்ய வேணா
அந்தமு மாதி யில்லா வருமறைப் பொருளே போற்றி.[டும

ஏ! ஈசா! இவ்வேழையைக் காப்பாயாக. (படுத்துறங்குகின்றாள்.)

(துன்மதி பெட்டியைத்திறந்து வெளியில்வருதல.)

துன்மதி.—உலகத்துயிர்கள் எல்லாம் அயர்ந்து நித்திரை புரியும்படியான காலம் இதுவே! நல்ல பதினைந்து நாழிகை நிசிப்பொழுதும் வந துவிட்டது.— நம்மைப்போன்ற வஞ்சகர்களுக்கும் காமாதுரர் களுக்கும நெஞ்சில் ஈரமில்லாத கொலைகளவாளிகளுக்கும் தகு நதசமயமே!—இந்திரன் அகலியையினைக் கெடுக்க எண்ணங்கொ ண்டு கௌதமர் உருவங்கொண்டானல்லனோ? நாம் என்ன உரு வமடைவோம்? அழகானந்தன் உருவங்கொண்டால் நமதெண் ணங்கள் எல்லாம் பூர்த்தியாய்விடும்!—அஃது எவவாறு நிகழும்? இவள் அகலியையைப்போன்றவ ளல்லளே!—ஒருபோதும் நட வாது!—அவ்வாறு நடக்கக் கூடுமாயினும் அவ்வுருவெடுக்கு மாற றல்தானும் நமக்குண்டோ? இல்லையே!...ஏன் யான் பலவந்தரு செய்து என் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளக் கூடாது? இங்கு யாரிருக்கின்றார்கள்? கதவும மூடித்தானே யிருக்கின்றது. அவள் கூச்சலிடாத விதமாயொரு ஏற்பாடு செய்தால!—(மௌ னம்) மனமே! நின்யோசனை வெகு நன்று! வெகு நனறு!!—

(பாடுதல்.)

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை' யென்றே - யையமிலா
தான்றோர்க ளோத்து மருணிறைசெங் நாப்போதா
ரூன்றி யுரைத்ததுபொய் யோ?

கற்றவாசொற கறபுமலா நிறைகொம்பைக்
காமனெனுங் கடைக்காற ருலும்
பற்றியசைத தம்மலரைச சிதறுறசசெய்
திடவிருதப பாரி லுண்டோ
வெறறுளையே காட்டிடத்தும மலையிடத்து
மில்லிடத்து மேவி னுலுரு
சுற்றினுநீச சுடர்செயயு மங்கிகுணம்
பிறழநதிடுமோ சொலலாய சொலலாய்.

வஞ்சகமபொய் சூளுரைத்தல பெருமபாவ
முதலியவும வாதப பேயு
நெஞ்சமுறத்த முடையநெடும் பூதகண
முதறபலவு நிகரில லாத
வஞ்சுகொடுஞ சாபமுமிக் கறபெரிமுன்
சருகாக வவியு மன்றி
நஞ்சுகளங் கொண்டவன்மால் பிரமனவள்
சீருரையி னடப்பர் மாதோ.

ஒண்டொடியும பததினியென் றுணர்ந்தனைநீ
கண்ணகியென் றொருபோ பெறற
பெண்கொடியாற கடலுலக திலகமெனு
மதுரைநகர் பிறந்த தீயின்
விண்டசையுங் கொடிமாடம் வெறுநீறு
யெரிந்ததுவும் வேடன் முன்முன்
றண்டருசொற றமயநதி திருவாக்கா
லுயிரையிழந் தமையு மோராய்.

ஆம். பைசாசத்தன்மையா யநுபவித்தலி லின்பமுண்டோ? இல்லை. இல்லை. அந்த எண்ணம் வேண்டாம்.—ஆனாலும் அழகானந்தனைப் பந்தயந் தோற்கச்செய்யும் மார்க்கத்தையாவது தேடுவேன். அதிற பின்னடைவேனோ?—இனிச் சந்தடி தெரிந்து விழித்துக் கொண்டாளானால் யாம் எப்படித் தப்பிச்செல்வது? இதறகாகவே

நாம் கால்களிற் றுணி சுற்றிக் கொண்டிருக்கின்றோமே! இனி என்னபயம்? சந்தடி தெரியாமல் மெல்ல மெல்ல நடந்து அவ ளருகிற்செல்வோம்!—(சரசாங்கிஅருகிலவந்துஅவளைக்கண்ணுற்று) "கண்ணி னோடு பிறந்தது காரிகை, வண்ணங் காண்டற் கன்றோ."—யான் பிறந்த பயனின்றடைந்தேன.—ஏ! பாவாய!

(பாடுதல்.)

பளிங்கதனு லியற்றுறுநற் பாவையினும்
பதின்மடங்காயப் பலரு மேத்தும்
விளங்கொளியும் வனப்பமைவும பொதிந்தவொரு
செய்யதிற மேவும் பாவாய.

ஏ! ரதியே! ரதியைபபோல் அழகைப் படைத்தவள் நீதானோ!—

(பாடுதல்.)

இராகம் - பைரவி. தாளம் - ஆதி.

**பல்லவி.**

அழகைப் படைத்தவள்நீ தானே - இன்னும
யாரையுனக் கொப்பிடு வேனே.

**அநுபல்லவி.**

மழைமுகிற் கருங்குழல் வாளர வுமிழ்ந்திடும
வருசுடா விடுமதி நுதலெனப புகழ்ந்திடும்(அழகை)

**சரணங்கள்.**

வேனிலான் வருந்திட விடுங்குவளைப பகழி
தானபுதையுள் மறைந்த தன்மைத் துயிலும விழி(அழகை)
எள்ளின் மலர்க்குமிழை யெள்ளநன்மணம் வீசி
உள்ளத்தை யுருக்கழ கொழுகி விளங்கு நாசி(அழகை)
செம்பவளத் துண்டெனிற் றீஞ்சுவை யத னிலும
இன்ப மளிக்க வுத விடுமிதழ் முருக கிலும்(அழகை)

சயனித்திருக்கின்றஉனனைப்பார்க்கஎன்கண்களுமகூசுகின்றனவே! ஆண்மைக்குரிய அறிவு நிறை யோப்புக் கடைப்பிடி யெனனும நான்கரண்களும் புனல்வழிப் புற்சாயந்தாற்போ லாயினவே!—

(பாடுதல்.)

அன்னப்பு ளொலிக்குரலாற கண்கூற்ற
மென்றுரைத்த தறிந்தி லேனுற
கன்னலினு மினியநறு மொழியுடையா
ளிமைமூடிக் கண்டுஞ் றங்க

வின்னவிலை யென்றெமக்கு வாய்திறவா
வெடுத்துரைக்கு மிணைப்பா தத்துப்
பன்னருநற் கிண்கிணியைக் கருத்திலமைத்
துறவுகொளப் பயன்ப டாவே.

அன்பைக்காட்ட ஒரு முத்தமிடுவலென்றெழுந்தாலு மவையிணங்குவன வல்லவே! யான் வேறு எவ்விதம் கைம்மாறவற்றிற்குச் செயவது!—தெய்வலோகத்திலே மேனகை,அரம்பை,ஊர்வசி, திலோத்தமை,என்னும் அப்சரஸ்திரீகள் மிகுதியும் அழகு வாய்த்தவரெனக்கேட்டதுண்டு. அவர்களும் நின்னைக்கண்டால் மோகிக்க வேண்டுவதுதான! தம்மைப் புருஷர்களாகப் பிறப்பிக்கவில்லையே யென்று பிரமனையும் வைவார்கள்! நினக்குக் குற்றேவல் புரியவுநதுணிவார்கள்!—வாடாதபூவே! உன்னைப் பூவிலுறைகின்ற இலக்குமியென்று தான்கூறுவதோ? அவளுக்கும் மேம்பட்டவளே! ஆதலால் நீயவள் திலகமாகின்றாய்! அவள் தன்னைவிட அழகில் மிகுந்தவர்களில்லை யெனனும் நினைப்பை யொழிக்கவே இப்புவியிற்பிறந்தாய்! உனனை யினியாருக்குச் சமானமாக யான் கூறுவது? உனக்கொப்புமில்லை யுயர்வுமில்லை! உன்னை யுனககே ஒப்பிடவேண்டுவதுதான்!-காந்தள் மலராகிய கரத்தினிடத்திற் குறுவேர்வையரும்பியிருப்பதைக்கண்டு முத்தும் மயங்குமே! ஒருமுத்தங் கொள்ளவா? ஒரேமுத்தம்! வேறுவேண்டுவதிலலை! ஐயோ! தொடுவேனோ? தொட்டாற் சுடுமே! பதிவிரதாக்கிநி சுட்டெரித்துவிடுமே! நிச்சயம்! சாம்பலாக வேண்டுவதுதான! சந்தேகமேயில்லை! யோசிக்கவேண்டுவதில்லை!—

(பாடுதல்.)

செங்கமல மலரின்கீழ்க காந்தண்மல
ரலர்ந்ததெனச் செழும லர்க்கை
தங்குநிழ லாடியெனுங கவுட்புறத்தைக்
கவர்ந்ததனாற் றரிக்கி லாது
பொஙகியெழுந் தொதுங்கினதா விருபுறமுந்
தாவியணை பொருமை மேற்கொண்
டிங்குநிலத் திணைப்பொருளுங் கோதைநலன்
விரும்பினவென் றெண்ணு நின்றேன்.

ஐயோ! இம்மங்கையினது பரிசவின்பத்தை என்றும் அநுபவிக்கும்பொருள்களுள் ஒன்றாகவாவது பிறந்தேனில்லையே!—மனமே! ஏன் வீண்யோசனை?—பவளமும் சரியாமோ இவ்வதரங்களுக்கு?

தாமரைப் புஷ்பமும் வெட்கித்தலைகுனியும் இவளது முகவிலாசத்தைக்கண்டு!—இதென்ன! இவ்வறையிற் சண்பக மலரிருக்கின்றதோ? வாசனைமூக்கைத் தொளைக்கின்றதே! இல்லை! இல்லை!! இவள் உயிர்ப்பே நறுநாற்றத்தையுடையது! நல்ல பத்மினிஜாதி ஸ்திரீயல்லளா? கூறுவானேன்!...விளக்கேன் மங்கியெரிகின்றது? மாணிக்கமாகிய இவளது இளஞ்சூரிய ஒளிக்கு விளக்கு மழுங்கிப் போகாமல்என்செய்யும்? மரகதமும் ஒளிகுன்றும்படியாகப் பச்சை நரம்புகள் என்ன விநோதமாக இவள்கையிற் படிந்திருக்கின்றன! ஆ! ஆ! வைரமும் இவளது கூட்டுறவை வேட்டு இவளுறுப்புக்களிற் படிந்திருக்கின்றதுபோலும்!—வந்தகாரியத்தைவிட்டு இவளை நினைத்து உருகி வர்ணித்துக்கொண்டிருந்தால் நாழிகையாக என்ன தடை? பின்பு திரிதிரியென்று விழிக்கவேண்டிவரும்! நாம் ஆரியக்கூத்தானாலும் காரியத்தின் மேற்கண்ணாயிருக்கவேண்டாமா? நமதுகாரியத்தைப்பார்ப்போம்!—இந்த அறையில் என்ன என்ன விசித்திரங்களிருக்கின்றன? இவற்றை எல்லாம் ஞாபகப்படுத்துவதற்குக்கூடுமோ? கூடாது! இவற்றை யெல்லாம எழுதி உருப்போட்டு விட்டால் அழகானந்தனிடம் தடதடவென்று வொப்புவித்து விடலாம். ஆம். இதுவே தகுந்தயோசனை!

(கடிதமும் தீட்டுங்கோலும்
உடையி னின்றும் எடுதது
எழுத வாரம்பிக்கின்றான்.)

இங்குத் தொங்கவிடப்பட்ட விளக்குகள், படங்கள், கட்டிலின விசேஷம், யாவும் எழுதியாயின!—இனி என்ன எழுதவேண்டும்? ஒன்றுமில்லை. இதைக்கூறினால் அழகானந்தன் நம்புவானோ? ஒரு காலும் நம்பமாட்டான்! அவள் தேகத்திலுள்ள அடையாளங் களைப்பற்றி ஏதாவது கூறினாலன்றோ நம்புவான! ஆம். ஆம். அது ஒன்றுதானும் தெரிந்துகொண்டால் இப்பொழுது எழுதிக்கொண்டவைகளைக்காட்டிலும், அவனை ஏமாற்றுவதற்கு நல்லது! ஸ். மறந்துவிட்டேனே! அவள் கையிலிருக்கின்றவளை! ஆ! ஆ! அதில்லாவிடிற் பந்தயம் போய்விடாதோ! (சரசாங்கி யுறங்கும்போது 'பிராணநாதா!' என்கின்றாள். துன்மதி விழித்தாளென்று நினைத்து ஒளிக்கமுயல்கின்றான்.—பிறகு அதுபொய் யென்றறிநது) தூங்கும்போதும் அழகானந்தனை நினைத்துக் கனவுகாண்கிறாளே!-அதைப்பற்றி நாமேன் நினைக்கவேண்டும்? நமது கண்ணுங்கருத்துமமிப்பொழுது அவள் கையிலணிந்திருக்கும் வளையின்மீது!—ஏ! சீதேவிக்கு மூத்த மூதேவியே! எனக்குச்சற்றுத்துணைவரவேண்டும்! எங்கே உனது சௌரியத்தைப் பார்ப்போம்! அவள் கண்ணை விழிக்கவொட்டாமல் தயைபுரி!—

(பாடுதல்.)

பச்சைநிறப் படுக்கையினிற் கரமொன்று
பொருந்தவதிற் பகரும் வேர்வை
யிச்சகத்திற் பசும்புல்லின் றலைமேற்செங்
காந்தளினி லினிய முத்தம்
வைசசமுத்தி யதுபோலும் பனிநீரின்
றுளிகள்பல வதிதன் மானு
மசசமுறு தெங்ஙனங்கை வளேகவர
மனமிசைவே னசசோ வச்சோ.

ஆனாலும் கழற்றித்தான் ஆகவேண்டும்.—பந்தயம். (அருகிற்சென்று வளையைக்கழற்றிக் கொள்கின்றான்.) இவை யெல்லாம் பெரியனவல்ல! அவள் தேகத்தில் ஓர் அடையாளங்கண்டு பிடிப்பதே பெருங்காரியம்! (விளக்கெடுத்துப் பார்க்கின்றான்.)

(பாடுதல்.)

வெண்டுகிலி னித்திலநற் கச்சினுளே
மதன்முடிபோல விளங்கா நிற்குங்
கண்டனினீ னிறமணிசெ யிணைக்கொங்கை
யுயிர்ப்பதனுற கதித்துத் தாழ்தன்
மண்டலத்தி லிருசக்ர வாகமெனும்
பட்சிகளோர் வலையி னுட்பட்
டெண்டிசையிற் செலவெழுந்து வலைப்பாரந்
தலையமுத்த விறங்கன் மானும்.

ருபபட்சிகளை யென்கையிற்கொண்டு முத்தமிடுவதற்கும் கொஞ்சுவதற்கு மிடமில்லையே! சொந்தக்காரனன்றே விடுவித்தெடுத்துக் கொஞ்சுதல் கூடும்!—என்காரியம் ஜெயம்! ஜெயம்!! பயோதரங்களுக்குமேலும் கந்தரத்திற்குக் கீழும் உரத்தில் ஒரு திவ்யமான மச்சமிருக்கின்றது!— மச்சமா? அன்று. அன்று. கொங்கைக் கண்ணீலச் சாயல்தான்.—வார் வேய்ந்திருக்கும்போது சாயல் நிகழக்காரணமில்லையே!—கருவிழியின் சாயலோ?—இமைமூடியுறங்கும்போதா?—அன்று. அன்று. தங்கச்செப்பிற் பதித்த நீலமணியிற் றெறித்ததுண்டமோ!—பெருமயக்கம். அதுவுமன்று.என் மனக்களங்கந்தானோ?—இல்லை. இல்லை. பின்னென்ன இது? (துன் மதி திரும்பி, ஆண்டுள்ள நீலப்பணியணிந்து நீலவுடைதரித்து நீல மலர் சூடிய ஒருமோகினிப் பதுமையைக்கண்ணுற்று)அலர்ந்துள்ள

மலரின்சாயல்தான். கூந்தற் கறுப்பன்றிவேறு கறுப்பென் பதிவள் சந்நிதானத்தில் வரக்காரணமில்லையே!—ஆம். ஆம்.— அப்படியாயின் அச்சாயல் இவ்வெண்டுகிலில் ஏன் தோன்ற வில்லை! ஆதலின் இதுவுங்காரணமாகாது. இது புருஷனுக் கின்பளிக்கும் மச்சமே!—மச்சந்தான். இதுவொன்றே அவன் கண்களில் மிளகு பொடி தூவுவதற்குச் சாட்சியாகும்! தீர்ந்தது ஐயா காரியம! இதையுங் குறித்துக் கொள்வோமா? இது மறக்காது! மறக்காது!! வேண்டாம்! வேண்டாம்!! இதைக் கூறினதும் தன்பெண்சாதி கபடமன முடையவள் என்றும் நினைக்கத்தடையே இல்லை!- நாழிகையாய் விட்டது!- படித்துக் கொண்டிருந்தாளே!—அதென்ன புத்தகம்?— இராமாயணமோ?—ஆம்.—

(பாடுதல்.)

வெண்டுகிலை மேலுடுத்து வயிரத்தா
　　லிலங்குபணி விளங்கப் பூண்டு
மண்டலத்திற் கலைவிளங்க வுதித்ததனாற்
　　கலைமகளாய் வழுத்த லாமே.

நல்லது.- (மோகினிப் பதுமையைப் பார்த்து) இப்பதுமைக் கணிந் திருக்கின்ற நீலமலர் தன்நாயகனாகிய சந்திரனின்றும் இச்சயனக் கிருகத்தால் மறைக்கப்பட்டும் மலர்ந்திருக்கின்றன. இவள் முகச் சந்திரனிடத்துள்ள குவளைப்போ திரண்டும் குவிந்திருக்கின்றன. இனித் தாமரைநாயகன்வரக் குவளைப்போது குவியும். இவள் கண் மலர்கள் விகசிக்கும். ஆதலால் இவற்றை நீலப்போ தென்றெண் ணிய வெனக்குத் தாம் செந்தாமரைமலரே யென்று வற்புறுத்திக் கூறுகின்றன.—இதென்ன இப்பதுமைக்கணிந்த நீலமலர் குவிகின் றனவே!—சரி! விடியுங்காலமாய்விட்டது. இனித் தாமதித்து நிற் பதுதகாது. பெட்டியிற் போய்ப் பதுங்கிக்கொள்ள வேண்டும்!— (சங்கமுழக்கங்கேட்டு) நான்கு நாழிகைச் சங்கும் முழங்குகின்றது! (திரும்பி) இவள் ஆபரணவொளியும் மழுங்குகின்றது. இனித்தாம தித்தால் உயிர்போய்விடும். (பெட்டியில் ஒளித்துக்கொள்கின்றான்.)

[இக்களம் இதனோடு முடிவு பெறுகின்றது.]

---

## மூன்றாங்களம்.

இடம்:—சரசாங்கி அறையின் தாழ்வாரம். காலம்:—காலை.

**நடன்:—முகுந்தன்.**

**முகுந்தன்:**—நம்மோடு கூடவந்தவர்—அவர்பெயர் என்ன? ஞாபகத்திற்கு வரவில்லையே! அவர்சொல்லிக் கொடுத்தாரேயாட்டு அது நல்ல

பாட்டு! அதைப்பாடினுல் சரசாங்கி மயங்கி என்னைக்கல்யாணம் பண்ணிக்கொள்வாள்! ஆமாம். ஐயா! ஆமாம்.

(பாடுதல்.)

இராகம் - கமாஸ். தாளம் - ரூபகம்.

**பல்லவி.**

மோகங் கொண்டேனே - பெண்ணே கண்ணே
மோகங் கொண்டேனே.

**அநுபல்லவி.**

மோகங் கொண்டுன் முன்னே நின்றேன்
மோடி செய்ய லாமோ வின்றே (மோகங்)

**சரணங்கள்.**

இந்தச சமயம் வந்தென் னேடுஞ்
சொந்த மாகம கிழ்ந்து கூடும் (மோகங)

தாமதஞ் செய்யுந் தன்மை யேது
காமக் கடல்க டக்கநின் மீது (மோகங்)

பாவை யென்பரி தாபம் பாாத்துக்
கோவை யிதழ்கொ டுப்பாய் வோ்தது (மோகங)

பொழுதுதான் விடிந்ததே! தூங்கி எழுந்திருப்பாள்! ஆமாம். ஐயா! ஆமாம. நாம்பாடினபாட்டுக்கு மயக்கமடைந் திருப்பாள்! நம்மை வந்துதேடுவாள்! நான் ஒளித்திருப்பேன்.—(சற்றுப்பொறுத்து) இதுநல்லயுக்தியன்று. பலிக்கவில்லை. அவளைநேரே கேட்டுப்பார்ப பேன. அதற்குமுடியாமற் போனுல் அவள் நல்ல அழகாகத்தானே யிருக்கின்றுள். அவள் காலிலேவிழுந்தால் தானென்ன? நேற்றுச் சொன்னுரே—அவர் நல்ல புத்திசாலி.இப்போதுதான் அவர் சொன னது நல்லயுக்தியென்று தெரிகிறது.—(கதவிடிக்கின்றுன்.) இப் போது கதவுதிறக்கிறதற்கு அவள் தோழிதானே வரப்போகின றுள். அவள்கையிலே பணங்கொடுத்து நம்மைக் கல்யாணம் பண் ணிக் கொள்ளுமாறு சொல்லும்படி சொன்னுல் நம்மைக் கல்யா ணம் பண்ணிக்கொள்வாள்! தோழிசொன்னுல்—நம்ம சரசாங்கி நல்லவள். கேட்பாள். (கதவிடிக்கின்றுன.)

---

* இந்தக்கீர்த்தனையைச் சொற்களை விழுங்கியும் திரித்தும் பிற்கூற வேண்டியதை முற்கூறியும் முன்னுரைப்பதைப் பின்னுரைத்தும் மறந்து விட்டதைப் பிற்பெய்துரைத்தும் பலராகங்களைக் கலந்தும் கண்டோர் யாவரும் நகைக்கும்படி முகுந்தன் பாடுகின்றுன்.

இந்துவதனை:—யார் கதவிடிக்கின்றது?

முகுந்தன்:—ஒரு பெரிய மனுஷன்!

இந்துவதனை:—யார் ஐயா நீர்?

முகுந்தன்:—ஒரு பெரியமனுஷிதம்பி! (இந்துவதனைவருதல்.)

இந்துவதனை:—ஏனிங்கு வந்தீர்?

முகுந்தன்:—சரசாங்கி இங்கேவரமாட்டாள் இப்போது?

இந்துவதனை:—வரமாட்டார்களென்று நினைக்கின்றேன்.

முகுந்தன்:—யான் பணங்கொடுக்கின்றேன். நீ என்னைக்கல்யாணம் பண்ணிக்கொள்ளும்படி யவளுக்குச் சொல்லுகின்றாயா?

இந்துவதனை:—பணமா! யாருக்குப்பணம்?— (சரசாங்கிவருதல்.) அம்மா!

முகுந்தன்:—(சரசாங்கியைப் பார்த்து) என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற் கென்னதடை?

சரசாங்கி:—ஐயா! நீரேன் இவ்வளவு பிரயாசைப்பட்டு இவ்வளவு காலையிலே வரவேண்டும்? நீர்பேசுவது நன்றாயில்லை! நீா உமதுகாரியத்தைப் பாரும்!

முகுந்தன்:—எனக்காசையா யிருக்கிறதே!

சரசாங்கி:—ஐயா! எவ்வளவு மரியாதையோ அவ்வளவு மரியாதையுடன் நீர்பேசும்! ஏன் வீணான வார்த்தைகளைப் பேசுகின்றீர்?

முகுந்தன்:—இதுவா எனக்குப்பதில்?

சரசாங்கி:—யான் இனி உம்மோடுவார்த்தை யாடுவதுகூடாது! நீர் வந்தவழியைப் பார்த்துநடவும்!

முகுந்தன்:—(காலில்விழுந்து) இப்பொழுதாவது என்னைக்கல்யாணம் பண்ணிக்கொள்ளேன்!

சரசாங்கி:—அடேமூடா! ஒருவன் மனைவி மற்றொருவனுக் கெப்படி மனைவியாவாள்? உனக்குச் சிறிதும் புத்தியில்லையோ? பெண்பிள்ளையின் காலில்விழலாமா? பெண்பிள்ளையைக் கல்யாணஞ் செய்துகொள்ளென்று நேரிற்றான் கேட்கலாமா? உனக்கு வெட்கமில்லையோ? உனக்குத் தேகங் குன்ற வில்லையா?

முகுந்தன்:—பைத்தியம்பிடித்திருக்கிறது! இல்லாவிட்டால் இப்படி எல்லாம் பேசமாட்டாய்!

சரசாங்கி:—உமக்குப் பைத்தியம் பிடித்திருப்பதாற்றான் இப்படியெல்லாம் பேசவாரம்பித்தீர். புத்தி சுவாதீனதகிலிருந்தாற் செய்யத்தகாத காரியங்களெல்லாஞ் செய்வீரா?

முகுந்தன்:—தாயார் தகபபனுர் சொல்வதைக கேட்காதே!—பிச்சைக்காரப் பயல் அழகானந்தனை நினைந்துகொண்டிருக்கின்ருயோ?

சரசாங்கி:—நீர் இந்திரகுமார ராயினும், அவரது செருப்படியிற் பொடி யொன்றிற்கு நிகராவீரோ? அந்தமகா புருஷனைநிந்தித்த உனக்கு என்னநேரிடுமோ? சர்வேசா! இந்தத்துஷ்டன் அவரை அநீதியாக வையும் வார்த்தைகளையான் கேட்கும்படியாகவும் விதிநேர்ந்ததே!

முகுந்தன்.—போனவன் திரும்பிவரப் போகின்ருனே?—அவன் காற் செருப்பாநான்?

சரசாங்கி:—உம்மை யாரையா அதைப்பற்றிக் கேட்கின்ருர்கள்? அதற்குக் கூட நிகராகமாட்டீர் என்பதும் பொய்யோ?

முகுந்தன்:—அவன காற் செருப்பா நான்?

சரசாங்கி:—(கையில் வளையில்லாததைக்கண்டு திடுக்கிட்டு அருகில் நின்றிருந்த இநதுவதனையைப்பார்த்துப்)பெண்ணே! எங்கே என்கையிலிருந்தவளை?

முகுந்தன்:—அவன்காற் செருப்பாநான்?

சரசாங்கி:—என்ன இந்த வீண்முண்டத்தோடு வார்த்தை யாடினேன்?

இந்துவதனை:—வளையை எங்காவது கழற்றிவைத்திருக் கின்றீர்களோ?

சரசாங்கி.—இல்லையே! ஐயோ! நேற்றிராத்திரி என்கையிலிருந்ததே!

இந்துவதனை:—ஆமாம் அம்மா!

சரசாங்கி:—எனது நாயகருக்கு என்தன்மையைச் சொல்லிவரும்படி சென்றிருககுமோ?—அடி! பெண்ணே! அங்கு எங்கேயாவது நழுவி விழுநதிருக்கும்! அதைத்தேடி யெடுத்துவா.—ஒருவேளை தவறிவிட்டதோ?—

இந்துவதனை:—அது தவறியே யிருக்காதே!

சரசாங்கி —யானும் அப்படித்தான் நினைக்கின்றேன. ஆனுலும் நீபடுக்கை யறையைப்போய்ப்பார். (இந்துவதனைபோகின்ருள்.)

முகுந்தன்:—நீ என்னை அவன்காற் செருப்பென்று திட்டினுயே!

சரசாங்கி:—ஆமாமையா! அதற்கென்ன செய்யப் போகின்றீர்? நீர்செய் வதைச் செய்துபாரும்!

முகுந்தன்:—உனது தகப்பனுரிடங் கூறுகின்றேன்!

சரசாங்கி:—உமது தமக்கையிடமுங் கூறுகின்றதுதானே! உம்மையாரா வேண்டா மென்கின்ருர்கள்? இனி உம்மோடு வார்த்தையாடுதல் எனக்குச்சரியன்று. (போதல்.)

முகுந்தன்:—அவன்காற செருப்பு இரு இரு உன்னை!— (போதல்.)

## நான்காங்களம்.

இடம்:—தஞ்சையில் ஜெயவீரன்வீடு. காலம்:—மாலை.

நடர்:—ஜெயவீரன், அழகானந்தன்.

**அழகானந்தன்:**—அதைப்பற்றி நாமேன் பயப்படவேண்டும்? அவளது மானத்திற்கு யாதொருபழுதும் வரவேமாட்டாது! யானும் அதி சீக்கிரத்தில் அரசனிடம் போய்ச்சேருவே னென்பதற்குச் சந் தேகமேயில்லை!

**ஜெயவீரன்:**—தாம் கூறுவன வற்றிற்குத் தகுந்தகாரணங்கள் இருக் கின்றனவோ?

**அழகானந்தன்:**—அப்படி யொன்றையுங் காணேம்! காலமென்பது ஒன் றைமற்றென்றாகவுஞ் செய்யுமே! நல்லகாலம் வரின் தொட்டவை யெல்லாம் பொன்னாகாவோ? யான் ஏன் அதைப்பற்றிக் கூறவேண் டும்? அந்த நம்பிக்கையன்றி வேறொன்றுமில்லை. ஈச்சுரன்கிருபை புரியாவிட்டால் உமது ரணத்திற்காளாகியிறக்க வேண்டுவதுதான்.

**ஜெயவீரன்:**—நீர் ஏன் அப்படிக்கூறவேண்டும்? உமது நற்குணத்திறகே நீர் என்றும் என்னுடனே யிருக்கலாகாதாவென்று ஈச்சுரனை ததுதிக் கின்றேனே! (துன்மதிவர) இதோபாரும் துன்மதிவருகின்றார்!

**அழகானந்தன்:**—காற்றினுங் கடுகிவழிநடந்து வந்தார்போலும்! மனோ வேகமும் இவர்வேகத்திற் கொடுங்க வேண்டுவதுதான்.

**ஜெயவீரன்:**—வாருங்கள், ஐயா!

**அழகானந்தன்:**—தாங்கள்வந்த வேகத்தைப் பார்க்கும்போதே பந்தயந் தோற்றுவிட்டதாகத் தெரிகின்றதே!

**துன்மதி:**—ஐயா! உமது பெண்சாதி யான் பார்த்தவர்களுக்குள் அழகிற சிறந்தவள்தான்!

**அழகானந்தன்:**—அவள் குணமுமப்படியே யென்பதற்கையமுண்டோ!

**துன்மதி:**—இதோ தங்களுக்கு உமதுநாயகி கொடுத்தகடிதம்.

(துன்மதி அழகானந்தனிடங் கடிதங்கொடுக்கின்றான்.)

**அழகானந்தன்:**—கடிதத்திற் குற்றமொன்று மில்லையென்றே நினைக்கின் றேன்.(கடிதத்தை ஒருமுறை இருமுறை மும்முறைவாசிக்கின்றான்.)

**துன்மதி:**—அதேது?— (பாடுதல்.)

* காஞ்சியே காம்பர நாகா பரணக் கவினனைத்தும்
வாஞ்சை மணிவணன் பள்ளிகொள் கோலமும் வார் † குடந்தக
காஞ்சன நற்கும்ப லிங்கமுங் கண்டு கருத்துடைந்து
ஓஞ்சங்கரரென வைர்தெழுத் தோர்ந்துணர் வொன்றினனே.

---

* இப்பாடல் இருபொருள் படும். † குடந்தம்-கும்பகோணம்; திரட்சி.

ஜெயவீரன்:—சென்றீரே! தொண்டைநாடு செழிப்பாயிருக்கின்றதா?

துன்மதி:—கண்ணிற் கெட்டியதூரம் எல்லாம் மருதநிலமே நிறைந்துசெந நெற்பயிரும் கருப்பஞ்சோலைகளும் செறிந்து தென்னைமரங்கள் சிறந்து தோன்றும் தேசமதுவே! அந்நாட்டைப்போலும் நிலம் நீர் குடி வளங்களிற் சிறந்தநாடில்லையென்பது நிச்சயம்! அது நமது சோணாட்டுக்கும் வளங்களிற் குறையாது!

ஜெயவீரன்:—சரி! ஏதேனும் விசேஷ முண்டோ?

துன்மதி:— (பாடுதல்.)

சிங்கமி ரிந்திடச சிந்துர நிற்பதை
யஙகொரு மான்கண்ட தம்பனி மூடிய
தங்கமென் குன்றுரத் தானுறு மைதததை
யஙகணிற் கண்டன னன்பரே யோாதிரால.

மாலயன் காணுச சிவபெரு மானுர் மலையொன்றினைச
சால வணக்கினர் நாண்பூட டினரென்றல சாலபுடைத்தோ
வால மடந்தை மலையிரண் டிற்கொரு வார்பிணித்துச
சீலம் பெறுகுண நாண்பூண் டனளுடற் றேயத்திலே.

அழகானந்தன்:—மனஸ் திருப்தியாகவே யிருக்கின்றது! எனது சிறு விரலை யுறைவிடமாகக் கொண்டமோதிரம் பிரகாசததிற் குறைந திருக்கின்றதோ! அது நமது கரததிற் சேர்வதிலலை என்பதற்கை யமுமுளதோ?

துன்மதி:—அம்மோதிரத்தை விற்றாயினும், இரண்டுதரம் அத்தொண்டை நாட்டையணுகிச் சிறிது பொழுதாயினும் ஆனந்தவாரிதியிலமுழ்ந்து வதறகிடமிருக்க, நீர் ஏன அதைத்தோறகாதிருப்பீர்?

அழகானந்தன்:—வீணுக்கு வீம்பேன் பேசுகினறீர?

துன்மதி:—வீமபென்ன? உமது பெண்சாதிதான் கற்பிற்றவறினுளே!

அழகானந்தன்:—விளையாடு கின்றீரா என்ன? இனியெனக்குக கோபம வரும்!

துன்மதி:—கோபம் ஏன் ஐயாவரும்? உமக்கு ஏன் வரவேண்டும்? உமது நாயகிக்கும் ஏன் வரவேண்டும்? உங்களிருவர் வேண்டுகோளின படி தானேயான் நடந்தேன்!

அழகானந்தன்:—நீர் கூறுவது நம்பக்கூடியதாயன்றோ விருக்கவேண் டும்? பின் ஏன் மயங்குகின்றீர்?

துன்மதி:—மயக்கம் ஒன்றுமில்லையே!

அழகானந்தன்:—சொல்ல வாரம்பிப்பதுதானே நடந்த சங்கதிகளை!

துன்மதி:—ஆறுற்சரி. ஆ! ஆ!! அவள் சயனக்கிருகம்!

(பாடுதல்.)

இராகம் - செஞ்சுருட்டி. தாளம் - ஆதி.

பல்லவி.

சயனக கிருகத்தின் சிங்கார -முறைக்கத
தரமல எவ்வெவர்க்கு மரிதா மிகு காம்பீர (சயன)

அநுபல்லவி.

நயனமீ ராயிரத்தும் நாடிப் பார்த்துப் புயங்க
நாத னுள்ளத்தில நித நயந்து வியக்குந துங்க(சயன)

சரணம்.

அம்ச தூளிகா மஞ்சம் - ரத்ன
ஹார மணிவி தானம்
ஆர்ப நுமைமி தானம்
சம்சய மேனே கஞ்சம் - திவ்ய
தாம மருவி நால
மாம ணிக்கதிர் கால
இமசை தீர முன மிரட்டுஞ் சாமரை கந்த
மெங்கு மணக்கத் தூண்டா திலங்கு விளக்கமைந்த(சயன)

என்னவினோதமீ யமைந்திருக்கின்றது! படங்களும், பற்பலவிளக்குக்களும் தொங்க விடப்பட்டுத் திவ்யமான சலவைக்கற்களாலமைக்கப்பட்டன்றோ விருக்கின்றது?

அழகானந்தன்:—இவை ஒவ்வொரு சயனக்கிருகத்திலு மிருப்பனவேயாம்! நீரென்ன அதிசயங்கூறுகின்றீர்?

துன்மதி:—இதற்குள்ளே என்ன அவசரம்! முற்றுங்கூறமாட்டேனோ? ஆ! ஆ! அவ்வறையி னொருபக்கத்தில் ஒருநிலைக்கண்ணாடியிருக்கின்றதே! தெரியுமா?—பிறகு இருமூலையிலும் இரண்டு சிறுமூலை நாற்காலிகளில் விசித்திரமான பதுமைகளிருக்கின்றன வல்லவோ?

அழகானந்தன்:—இவற்றை யெல்லாம் யாராவது சொல்ல நீர் தெரிந்து கொண்டிருத்தல் கூடாதோ?

துன்மதி:—இரண்டு வர்ணக்கிளிகளும் சிறகோடுகூடிய பதுமைகளும் நிறைந்து பனிநீர்ச் செம்பும் சந்தனக்கிண்ணியும் ஒரு புறங்கொண்டிருக்க வில்லையோ?

அழகானந்தன்:—இதை நீர் கூறுவதனாலே அவள் கற்புக்குக் கேடுவந்த தோ? நன்று! நன்று!! இவற்றை யெல்லாம் ஞாபகமாக விடாமற் கூறுகின்றீரே! நுமது சக்தியை என்னென்றுரைப்பது?

துன்மதி:—ஆறுறசரி.—இதோபார்த்தீரா? நுமது நாயகிகைவளை! இப் போதென்ன கூறுவீர்? எங்கே மோதிரம்?

அழகானந்தன்:—ஈசா!—எங்கே? கொடும் பார்ப்போம். யான் அவள்கர த்தி லணிந்த வளை இதுவா?—இதுவா அவள் கைவளை?

துன்மதி:—நன்றாய்ப்பாரும்.அவள்தன் கையினின்றுமகழற்றியளித்தவளை யிதுவே! அவள் கழற்றும்போது அவள் செய்கை என்னவாயிருந் தது. பார்க்கப பதினாயிரங் கண்வேணடுமே! அஃது என்மனசில் எப்படித் தோன்றுகின்றது! கழற்றி என் கையிறகொடுத்ததன்றி ஒருகாலத்தில் அதைமதித்ததாகவுங் கூறினள்!

அழகானந்தன்:—ஒருவேளை—கழற்றிக்கொடுதது என்னிடங் கொடுக்கும் படி உமக்குச் சொல்லியிருப்பாள்!

துன்மதி:— (பாடுதல்.) 45764.

"வாரம படடுழித் தீயவு நலலவாந்
தீரக காயந்துழி நல்லவுந் தீயவா
மோருமவையத தியற்கையன் றே"

சடிதத்திலெழுதி யிருககின்றுளோ! கண்ணைப் பிடுங்கிவைத்துமம இனனும் இநதிரஜால விதையோ?

அழகானந்தன்:—இல்லை! இல்லை!! இம்மோதிரமும் நும்முடையதே! எடுததுக்கொள்ளும்!—(மோதிரங்கொடுக்கின்றான்.) எங்கே அழ கிருக்கின்றதோ அங்குக் சற்பென்பதிலதுபோலும்.

ஜெயவீரன்:—அவசர மென்னததிற்கு? உம்முடைய மோதிரத்தை நீர் பெறறுக்கொள்ளும! இனனமும் இவர்பந்தயம் வென்றவராக மாட்டார்! ஒருவேளை யவள்கையினினறும் நழுவி விழுந்திருக்க லாம்! அல்லது அவள் தோழிகளுள் ஒருத்திகவர்ந்துகொடுதது இவரிடம் பணம்பெற்றுக் கொண்டிருக்கலாம்! இது நடக்கக்கூடிய விஷயந்தானே!

அழகானந்தன்:—நீர் கூறுவதும் உண்மையே! (துன்மதியைப்பார்த்து) மோதிரத்தைக்கொடும்! அவள் தேகததில் ஏதாவதோரடையாளம கூறுவீராயின் நம்பக்கூடியதுதான!

துன்மதி.—குருவாணையாக அவள் கையினின்றும் கொண்டேனே யான்!—

அழகானந்தன்:—ஜெயவீரரே! பார்த்தீரா? அவராணையிடுகின்றார்! பிச கிராது!—(துன்மதியைப்பார்த்து) மோதிரத்தை நீரே வைத்துக் கொள்ளும்.

ஜெயவீரன்:—இரும். ஐயா. மகாஅவசரக்காரர்நீர். (துன்மதியைப்பார்த்து) எதற்காக அவள் தன்கையிலிருந்த வளையைக்கழற்றிக் கொடுத்தாள்?—நீர் அழகானந்தன் வளைவேண்டினனென வலிந்துகேட்பத்தனது நாயகனது நண்பராமென நும்மிடங் கொடுத்திருக்கலாம். அப்படித்தானிருக்க வேண்டும்; வேறுகாரணமேது? ஒன்றுமிராதே!

துன்மதி:—காரண மிருக்கின்றது. அஃதென்னை யென்றுகேளும்.—தனதரண்தனனைக்காக்க மகுடந்துலங்கப் பத்மாசனத்தின கணிருநது வில்லு மம்புங்கொண்டு பறையறைந்து தனது வெற்றியையவளிடமாய் மன்மதன் தெரிவிக்க, யான் அருகுசென்று அரணழிதது மகுடங்கைக்கொண்டு உடல்வருந்தச்சாட என்னை மிக்கோனெனமதித்துத் தான் தோற்றதற் கறிகுறியாய்க் காணிக்கை செலுத்திய வளையன்றோ ஈது?—ஜெயவீரரே! யான் அவளிடமிருந்தேகொணடேன். இனியுஞ்சந்தேக முமக்கேன்?—

அழகானந்தன்:—அவள் அந்தவளையைத் தொலைப்பதற்கும் இடமில்லை. தோழிமார்களும் அப்படிவஞ்சனை புரியார்கள்! அதுநன்றாயெனக்குத்தெரியும். அவர்கள் கவர்ந்திருப்பார்களா?—ஒருகாலுமில்லை. அதுமுடியாத காரியம்! அவளையிவர் அநுபவித்திருப்பாரெனபதற்கையமில்லை. அதற்கு இவ்வளையே சாட்சி பகருகினறது! ஐயோ!

ஜெயவீரன்:—சற்று நிதானியும்! ஏன் அவசரம்? 'அவசரக்காரனுக்குப புத்திமட்டு' என்பதைக் கேட்டதில்லையோ? (துன்மதியைப்பார்த்து) ஐயா! இதனால் நும்மை நம்ப இடமேயில்லை!

அழகானந்தன்:—ஜெயவீரரே! இதைப்பற்றி இன்னும் ஏன் பேசிக்கொண்டிருக்கின்றீர்? அவள் தவறியிருக்கவே வேண்டும்!

துன்மதி:—இன்னமும் உமக்கு நம்பிக்கை வரத்தகுநத விஷயமொன்று கூறுகின்றேன். அதையுங் கேளுங்கள். அவளது கந்தரத்தின் கீழிடத்தில் அழகிய மச்சமொன்றிருக்கின்றது! அதை நீர் கவனித்ததுண்டோ? என்ன சிங்காரமாக விருக்கினறது!—

(பாடுதல்.)

சுந்தரியின் பாதத்திற் கொப்பு நோக்கிற்
றருமந்தான் கருநிறமாய்த் தோன்றல கண்டாரு
சந்தமிகு மாயிரத்தோ டெட்டு மாற்றுச்
சாம்பூந தபபொன்னாற் சமைந்த மேனிக
கெந்தவித மிதுவென்று பார்ப்பார் போல
வெழிலுடைய தோழியர்பத் தனைமாற றுப்பொன
கந்தரத்துக கீழிடத்தின் மச்சங் கொண்டு
காண்டகச்சோத் திட்டதுவே நீல மசசம்.

எத்தனைதரம் முத்தங்கொண்டும் மனமார வில்லையே! மறுபடியும் என்று சென்று அதைக்கண்ணுறுவது?—நீர் இந்தக்களங்கத்தைஅவளிடங் கண்டவர்தாமே! இனியும் சந்தேகமோ!

அழகானந்தன்:—அந்தக் களங்கத்தை விடப் பெரியகளங்கத்தையும் இன்று கண்டேன்! இனியென்?—

துன்மதி:—இன்னுங் கூறட்டுமா?

அழகானந்தன்:—நீர் கணக்கிற பெரியரெனவெனக்குத தெரியும். போதும். இனி யொன்றுஞ் சொல்லாதீர்!

துன்மதி:—ஒருவார்த்தை!—

அழகானந்தன்:—நீருரைத்தது பிசகென்று கூறப்போகின்றீரா? அப்படியானுல் இபபொழுதே உம்மை யமலோகத்திற்கு விருநதினராய் அனுப்பிவிடேனே?

துன்மதி:—ஒன்று மில்லை!—

அழகானந்தன் — (தனக்குள்) அவள் என்னருகிலிருந்தாற சித்திரவதை செயது விடமாட்டேனே?—

(பாடுதல்.)

பெண்ணொன்றுருகேன் பிறந்த விடம்பாரேன்
வண்ண வுடறகுருதி வாள்சிவப்பப்—பண்ண
மனந்தங்கு நெஞ்சை மருளாமற் போழ்ந்தென்
வினந்தங்கி வாழ்வே னிவண்.

யான் தொண்டைநாட்டிற்குச் சென்று அவளை யிருதுண்டாய் வெட்டி யெறிகின்றேன்!— (வெளியாய்) சத்துருக்காரிய மிருக்கினறது! (போதல்.)

ஜெயவீரன்:—துனமதிப பிரபுவே! நீரேஜெயங் கொண்டவரானீர்! ஆயினும அவளைச் சமாதானப்படுத்த வரலாகாதோ? ஒருவேளை தறகொலைபுரியப்போகின்ருர்! வாரும். போகலாம்.

(ஜெயவீரன்போதல்.)

துன்மதி —அப்படியே தடையின்றி இதோவருகின்றேன்.—(தனககுள) அவனுக்கவள் கிட்டாதவழியை யான் தேடுகின்றேன. இவன் ஒருவேளை அவளைக்கொன்ருலுங் கொல்வான்! (போதல.)

---

## ஐந்தாங்களம்.

இடம:—தஞ்சையில ஜெயவீரன் வீடு. காலம்:—யாமம்.

நடன்:—அழகானந்தன்.

அழகானந்தன்:—ஆ! என்னமதி யீனனுய்ப்போய்விட்டேன்! அந்தோ! சிறிதும் யோசித்திலேனே நீான்! யான்கண்டு கேட்டறிந்தவை

யெல்லாம் ஒரு பெண்ணால் மயங்கிமறந்தேனே! என்னைப்போலும் அறிவில்லாதவரும் உலகில் உளரோ! ஐயோ! வீணான எண்ணம் கொண்டதன்றி வீண்சபதமுஞ்செய்து மனப்பால் குடித்தேனே! ஏ! சரசாங்கி! நீ இப்படிமோசஞ் செய்வாயென்று ஒரு சிறிதும் நினைத்தேனில்லையே! உன்னையான் மணம்புரிந்தது உன்னுடையகட்டழகுக்குமயங்கியா? அல்லது உன் தகப்பன் நினக்களிக்கும் சீதனத்தைக கருதியா? அன்றி உன்னை மணந்தலால் தொணடைநாட்டரச னாகலா மெனகிற வீண் எண்ணத்தைக் கொண்டா? எதுவுமில்லை! எதுவுமில்லை!! யான் பணத்தை அலட்சியஞ் செயபவனென்றும் வனப்பை நோக்கினவனல்லனென்றும் நீயறியாயோ? உனது குணத்தைக் கண்டேயன்றோ வுன்னை எனது மணமகளாகக்கருதினேன்! அதனாலன்றோ யானு மிப்பெருந்துன்ப மனுபவிக்கவும் நேர்ந்தது! யானே மதித்தநின்குணமும இப்படி மாறுந்தகையினதாயிற்றோ? அந்தோ! இனி யென்செய்வது? இனியென செய்வது? நீ எனமீது காதல்கொண்டா யென்று யானும் நினமீது காதல் கொண்டேனே! நம்மிருவர்தேகமு மிரண்டேயாயினும் அககினியிற்சூடுபோலவும் மணியின்கனொளிபோலவும் நம்மிருவர்மனமும் ஒன்றேயாயிருக்கின்ற தென்றல்லவோ நம்பியிருநதேன்! உன நமபிக்கை வீண் என்பதைத் தெரிவிக்கவா இக்காரியஞ் செய்தனை? என்மனமெல்லாம நின்னிடமே குடிகொண்டிருந்ததே! அக்கினியினின்று சூடும் பிரிக்கப்படுமோ! மணியினின்றொளியும் பிரிக்கப்படுமோ?— எவவண்ணம் பிரிக்கக்கூடும்? சாக்ஷாத் திரிமூர்த்திகளாலும செய்யமுடியாத காரியமே! அவ்வண்ணமே காதலின் மகிமையென்றுணர்ந்து நான் நீ யென்கிறபேதமற்று நானே நீ யென்று நினைத்த என்னை நான்வேறு நீவேறு என்று காட்டுதல்போல் எனக்குத் தீங்கிழைத்தனை! என்னெஞ்சம் துடி துடிக்கின்றது! என் கண்ணோ சுழலுகின்றது! என்மனம் கொதிக்கின்றது! என்னறிவு அழிகின்றது!— எனக்கு யாரிங்குத்தேறுதல் கூறுவார்கள்? ஏ! சுகுணா! சுகுணா!! என்னருமைத் தோழனே! நீ நனறுயிருக்கினறாயோ? உன்னோடு கூறியாறுவேனோ? அதற்கு மிடமில்லையே! இனியுனனைக்காண்பேனோ? அன்றி யிங்கேயேயுயிர்துறப்பேனோ? எனக்கு நேரிட்ட அவமானத்தைக் குறித்துப்பின் யாரிடம முறையிட்டுக் கொள்வேன்? ஒருததோழனிடமன்றோ கூறவேண்டும்? ஊரிலொருவனே தோழன்! அவனும் நீ யல்லையோ? யாருமற்றதே தாரமென்பதை மறந்து அரசன் பெண்ணைக்கைப்பிடிக்க, எனக்கு இவவிதிநோந்ததன்றி இவவித அவமானமும் நேர்ந்தது! யானிவளை மாதவிப்பொதும்பரிடததிற கண்டபொழுது இவள் ரூபலாவண்யங்களைக்குறித்தா மயங்கினேன்? முகவசீகரததிற கிளையாயினேனோ? அன்னநடைக்குத் திகைத்தேனோ? தேன்மொழிக்குக் குறைந்தே

ளோ? அன்றித் தேகத்தைக்கண்டு மோகங்கொண்டேனோ? இஃ தொன்றையும் யான் கவனித்திலேனே! இவளது குணவலையில கப்பட்டேனேயன்றி வேறன்று! ஏ! பெண்ணே! நீ எவ்விதவிசே ஷத்தை யென்னிடங்கண்டு காந்தர்வ மணம்புரிய நினைந்தனையோ? அவ்வித விசேஷதனை யானிப்பொழுதிழந்தேனோ? அப்படியிழந்த துனக்கெப்படித தெரிந்ததோ? ஐயோ! உனைத் தேவர்கள்கொடுத்த தெள்ளமிழ் தெனறிருந்தேனே! எங்கும் ஒரேவிதமாகத் தித்துக் கும் இளங்கரும் பென்றெண்ணினேனே! கரும்பே! நீயுமென்னைக் கசநதாயோ! ஆ! யானும நீயும் மருவியனுபந்த சுகத்தை மறந்தா யோ?—ஊடலுங் கூடலும் நின்னிடஞ் சிறந்ததெனறு கூறுவா யே! அதை நினைக்கும்போதே யானுருகுகின்றேனே! உன்னைப் போல் என்மனங்களங்கப் படவில்லையே! திருத்தக்க தேவர்வாக் கியம் பொயயாகாதென்பதைக் காட்டும்படியாகவோ இவ்வித மான துர்க்கிருத்தியத்திற்குடன் பட்டாய்? உன் பிரிவால் என் தாய் தந்தை உற்றுருறவினர் முதலியவர்கள் இறந்ததற்குண்டா கிய துக்கத்திற்குக் கோடிபங்கதிகமான கொடுந்துக்கத்திற் காளாகி னைந்தேனே! உன்னிட மஃதில்லையோ! யானே கற்பிற் கரசி யென்றுயே!—

(பாடுதல்.)

" சாமெனிற் சாத னேதை றன்னவன் றணந்த காலைப்
பூமனும புனைத லின்றிப் பொறபுடன புலம்ப வைகிக்
காமனை யென்றுஞ் சொலலார் கண்வறகை தொழுது வாழ்வாா
தேமலாத திருவோ டொப்பார் சேர்ந்தவன் செல்லறீாபபாா."

என்று நூல் கூறியிருக்கின்றதே! எங்கே நின்னிடம் அத்தன்மை? ...(மௌனம்) ஸ்திரீகளை யொருபொழுதும் நம்பலாகாது. யான் நம்பி மோசம்போனேன்.

(பாடுதல்.)

இராகம் - பியாகு. தாளம் - ரூபகம்.

**பல்லவி.**

நம்பி மோசம் போனேன்
நாளும் வீண னானேன்.

**அநுபல்லவி.**

இன்பங் கொண்ட வென்னை
யேங்கச் செய்தா டன்னை (நம்பி)

சரணங்கள்.

மங்கை யர்நி ஜத்தை
வழு வும்வி தத்தை
புஙக வருங .. காணப்
போகா தேயா ஞண (நம்பி)

கைவ ளைதங் தாளே
கலங் திருந் தாளே
மெய்ம்மு ழுதுங காடடும்
வேசி போலவாண் மாடடும் (நம்பி)

விட்டு நீங்கும் போது
விழநதா ளெமண் மீது
கடடுக கதை யென்றே
காணு மலே யன்றே . (நம்பி)

நீயா யானனுபவித்த உன்னைப் பிறரிடங் காட்டிக்கொடுப்பது! இந்தக்குரூபியாகிய துன்மதியோ உன்னை மயக்கிநின்நலம் நுகர்ந்தது! ஆ! ஆ! அதுவும் க்ஷணநேரத்தில்! ஒரு நொடிப்பொழுதில! சிறிதுந்தடையின்றி! நாணமென்பதும் உன்னைவிட்டகன்றதோ?

"உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புசிறந் தன்றெனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞு" சத்த
ளென்று கருதிய வென்னைநகை யாடினை!—

வேண்டியபோ தின்பம் வேண்டியவரிடம் நுகரும் விலைமகளிரும நாணமுதலிய வுடையவர்கள் போன்று நடித்துக்காலதாமசஞ் செய்கின்றார்களே! குலமகள்! என்னிடங்காதல் கொணடவள்! நீயோ வார்த்தைபிறக்கு முன்சம்மதித்தனை! யான் மறறொரு பெண்ணைக் கணணெடுத்துப்பார்க்கவும் மனம்வரவில்லையே! நீதவறினை யென்று தெரிந்தும் என்மனந் துணியவில்லையே! உலகில் ஆடவரில்லாவிடத்தன்றோ பெண்கள் பதிவிரதைகளாயிருப்பது? மன மொற்றுமை யில்லாதவர்களே! பிறழ்ந்திடு முளத்தரே!

(பாடுதல்.)

"தூம கேது புவிககெனத தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வருங்
காம மிலலை யெனிற்கடுங் கேடெனு
நாம மிலலை நரகமு மிலலையே."

இனிச்சகியேன். இனிச்சகியேன். யானநுபவித்த நீயோ மற்றோ ரற்பப்பயலுக் கின்பங்கொடுப்பது? இதற்கென்ன பரிகாரமிருக் கின்றது?—(மௌனம்) இருக்கின்ற தொன்று! உனது தேகத்தைச் சின்னபின்னமாக இவ்வாளினால் வெட்டியெறிந்து அவன்கண்ணு றற வொவ்வொரு உறுப்பையும் கொந்தி அக்கினியிற் காட்டியன்றே நின்னுவியைப் பரிசுத்தப்படுத்துவது! இனியஞ்சேன்! இதோ எழுந்திருப்பேன்! தொண்டைநாட்டிற்குச் செல்வேன்! பெற்ற தந்தைமுன்னரே இச்சித்திரவதை செய்வேன்! நெடுநாளாகச் சிறு பிராயமுதற் பழகின யான் கணவனாயிருக்க முகந்தெரியாத அற்பப் பயலைக் கண்டு அவனைத்தழுவுவதா? நின்னைமயக்கிய நின்கண்ணை நெருப்பிற்காய்ச்சிய இருப்புக் குறட்டாற் பிடுங்கியெறிவேன்!— ஐயோ!—என்கண்ணே! உன்னைக்கொல்வதற்கும் மனந்துணியவில் லையே!—என்று மனத்தில் நினைத்தேனோ அன்றே உன்னை ஏதே வகையிலாவது கொல்வேன! நானுமிறப்பேன்! நீ எனக்குத்துன் பங்கொடுத்த போதிலும் முன் நாமிருவருமிருந்த தன்மையெனனை மயக்குவதனால் நீயிறந்து நானிறவாமலிருப்பேனோ! யானும் இறப் பேன்! துணிந்துவிட்டேன்! இனி எதுவும் என்னை—

(சோர்ந்து படுத்துக்கொள்கின்றான்.)

[இக்களம் இதனோடுமுடிவு பெறுகின்றது.]

## ஆறுங்களம்.

இடம்:—தஞ்சையிற்சந்திரசேகரன்அரண்மனை. காலம்:—மாலை.

நடன்.—சந்திரசேகரன்.

சந்திரசேகரன்:—நமது அந்தரங்க நண்பர்களுள் ஒருவராயினும் இது காறும் வந்திலர். பொழுதும்போகேன என்கின்றது. நமது கட்டழகி யாகிய காதற்பரத்தை மனோரஞ்சிதம் இல்லத்திற்குப்போய் உல்லாசமாக வார்த்தையாடுவதற்கும் இடமில்லையே! அவள்தான நோயினாற் பீடிக்கப்பட்டுத் தேகமிளைத்திருக்கின்றாளே! இப்பொழுது அவளைப்பார்க்க மிகவும் அருவருப்புத்தான் தோன்றும். அவ ளுடன சொக்கட்டான் சதுரங்கமாடியே வெகுதினங்களாயின. அஃதாவது நேரிட்டால் ஒரு பொழுதுபோக்காயிருக்கும். அவளை நினைக்கும் போதே எனக்கு வருத்தமாயிருக்கின்றது.—அவள் தேறி எழுவதற்கும் இன்னும் இரண்டுவார மாகுமாம். இக்காலம் எப்படிக்கழியுமோ? எனக்குத்தெரியவில்லை.— (துன்மதிவர) வாரும்! துன்மதியாரே! உம்மைத்தான் எதிர்பார்த்திருந்தேன. இப்படியுட்காரும். ஏன் நிற்கின்றீர்? பொழுது போக்காகச் சதுரங் கம் ஆடுவோமா?

துன்மதி:—அப்படியே ஆடுகிறது.

சந்திரசேகரன்:—யாரடி பெண்ணே! சுந்தரி! (சுந்தரிவருதல்.) சதுரங் கங்கொண்டுவா.

சுந்தரி:—இதோ கொண்டுவந்து விட்டேன். (சுந்தரிபோதல்.)

சந்திரசேகரன்:—என்ன இன்று இவ்வளவு நாழிகைபொறுத்து வந்தீரே! சற்றுமுன் வந்திருந்தால் இரண்டாட்டமாவது ஆடியிருக்கலாமே!

துன்மதி:—தாங்கள் வழக்கம்போல் மனோரஞ்சிதவம்மை அரண்மனைக் குப் போயிருக்கலாமென்று நினைத்துக் கொஞ்சம் தாமதமாய்வந்து சேர்ந்தேன். இங்கு இருப்பீர்களென்று தெரிந்திருநதால் முனன மே வந்திருப்பேன்.

சந்திரசேகரன்:—நான் இப்பொழுது அங்குப்போவதில்லையே!

துன்மதி:—ஏன்?

சந்திரசேகரன்:—அவள்தான் நோயினாற் றுன்புறுகின்றாளே!

துன்மதி:—என்றுமுதல்?

சந்திரசேகரன்:—பதினைந்து தினமாக—

துன்மதி:—பதினைந்து தினமாகவா?

சந்திரசேகரன்:—ஆம். உமக்குத்தெரியாதா? உமக்குத் தெரிநதிருக்க வேண்டுமே! நீரன்றோ கூட்டிவைத்தவர்?

துன்மதி:—நான் நகரத்திலில்லை. ஆதலால் எனக்குச் சங்கதி தெரியாது. இப்போது தான் தங்கள்வாக்கினாற் றெரிந்துகொண்டேன். இனிப போய்ப்பார்ககாம லிருப்பேனா?

சந்திரசேகரன்:—ஆமாமையா! உம்மைப் பத்துப் பதினைந்துதினமாகக் காணோம்! எந்நாட்டிற்குப் போயிருந்தீர்?

துன்மதி:—தொண்டை நாட்டிற்குப் போயிருந்தேன்.

சந்திரசேகரன்:—என்னிடமும் சொல்லாமற் போய்விட்டீரே!

துன்மதி:—இல்லை. அவசரமாகப் போகவேண்டியிருந்தது.

சந்திரசேகரன்:—அங்கென்ன உமக்குக்காரியம்.

துன்மதி:—என்காரியம் ஒன்றுமில்லை.

சந்திரசேகரன்:—பின்என்ன அவசரமென்றொருவார்த்தை?

துன்மதி:—அவசரமாகத்தான் போகவேண்டியிருந்தது. இல்லையாகில்உயிர் நண்பராகிய உம்மிடத்திற் சொல்லாமற் போயிருப்பேனோ?

சந்திரசேகரன் —அவசரமாய்ப் போனேனென்கிறீர்! உமது காரியமாயு மில்லையென்கிறீர்! பின்யார் விஷயமாகத்தான் போயிருந்தீர்?

துன்மதி.—எல்லாம் தங்கள்காரியமாகத்தான். அடிமை வேறெந்தக்காரி யதிற்கு அவ்வளவு அவசியமாகப் போயிருப்பான்?

சந்திரசேகரன்:—என்காரியமா? என்காரியம் என்ன இருக்கின்றது தொண்டைநாட்டில்? ஒன்றுமில்லையே!

துன்மதி.—தங்கள்காரியந்தான். தொண்டை நாட்டின் தலைநகராகிய காஞ்சிபுரியிலேயே—

சந்திரசேகரன் —காஞ்சீபுரியில்!—காஞ்சீபுரியில்!!— (சுந்தரிவருதல்.)

சுந்தரி —மகாராஜா! இதோ இருக்கிறது சதுரங்கம்.

சந்திரசேகரன் —சரி! நீ போ. (சுந்தரிபோதல்.)

துன்மதி —ஆடுவதுதானே!

சந்திரசேகரன் —பிறகு ஆடுவோம். நீர்போன காரியமெல்லாம சிறிதும் ஒளியாமல் இப்பொழுது சொல்லவேண்டும்.

துன்மதி·—தாங்கள் வற்புறுத்திக் கேட்கும்போது யான்சொல்லாமலிருக் கலாமா? இதோ சொல்லுகின்றேன.

சந்திரசேகரன்·—இந்தப்பீடிகை யெல்லாம் என்னதிற்கு? சீக்கிரம் சொல்லும்.

துன்மதி:—பதினைந்து தினங்களுக்குமுன்னே காஞ்சி புரியிலிருந்து நமது நகரத்திற்கு ஒருவர்த்தகர் வநதிருந்தார. அவருடன் வேடிக்கை யாய் வாாததை சொல்லிக்கொண்டிருந்தபோது அவ்வூர் ராஜா வைப்பற்றிசசம்பாஷிக்கும்படி நேர்ந்தது.அப்பொழுது அவர் தமது நாட்டரசருக்கு அழகிற்சிறந்த பதினைந்து பதினாறு வயதுள்ள பெண்ணிருக்கிறாளென்றும் இன்னும் கல்யாணமாகவில்லை யென றுஞ்சொனனார். அப்பொழுது தங்கள் ஞாபகம வந்தது. அவள் பெயர் என்னவென்று கேட்டேன். 'சரசாங்கி' எனறார். ரசத தோடுகூடிய தேகத்தையுடையவளோ வென்று கேட்டேன. அவா சாரசததைப்போனற தேகத்தையு முடையவள் எனறா. வெகு நாள் தேடிநின்ற திரவியம் காலடியிற கிடைத்ததென்ன மிகவுஞ் சந்தோஷமடைந்தேன. தங்களுடன் இந்த விஷயததை யபபொ ழுதே சொல்லியிருக்க வேண்டும். தவறிவிட்டேன. மன்னிககை வேண்டும்.

சந்திரசேகரன்:—அதனால் ஒருபாதகமுமில்லை. பிறகு—

துன்மதி:— (பாடுதல்.)

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு" என்றும்

"செய்தொழில் பயனு லுரைப்பரே யன்றித்
தெளிகுந ருரையினு லுரையார" என்றும்

பெரியோர்கள் சொல்லியிருக்கின்றார்கள். தாங்கள் மகபேறில்லாமல் வருந்துவது வெகுநாளாய் அடியேனுக்குத் தெரியும். ஆயினும் தாங்கள் வாய்விட்டுச் சொல்வீர்களா? தங்கள் மனோரதத்தை யீடேற்றும் வண்ணம் வெகுநாளாக யோசித்திருந்தேன். அஃது இப பொழுதுதான் வாய்த்ததென் றெண்ணினேன்.

சந்திரசேகரன்:—இந்த விஷயத்தை முன்பே சொல்லி யிருக்கலாமே! தாம் போனபோது தமக்குத்துணையாய்ச் சிலரை யனுப்பியிருப பேனே!

துன்மதி:—ஆம். வாஸ்தவந்தான்! ஆனாலும் எங்கே குளிக்கப்போய்ச் சேற றைப்பூசிக்கொள்வோமோ என்ற ஒருயோசனை. உலகத்தில் செவ வாய்க்கிழமையை மங்களவாரமென்று மங்கலமாகக்கூப்பிடுகிற ஒருவழக்கமிருக்கின்றதே! ஆதலாற்றான் தங்களிடஞ் சொல்லாமற போகநேர்ந்தது. இஃதன்றியும் நேரிற்போனதற்கு வேறு சிலகாரணங்களுமுண்டு.

சந்திரசேகரன்:—வேறுகாரணங்க ளென்ன?

துன்மதி:—பிறகு சொல்லமாட்டேனு?

சந்திரசேகரன்:—சரி! போய்ச் சேர்ந்தீர். பிறகு.—

துன்மதி:—தங்களிடம் சொல்லாமல் தனியே போய்ச்சேர்ந்தேன்.—புருஷர்கள ராஜகன்னிகையைப் பார்ப்பதென்றால் சரிப்படுகின்றதா?- ஆனாலும் போய்ப்பார்த்தேன்.

சந்திரசேகரன்:—பார்த்தீரா அவளை? எப்படிப் போய்ப்பார்த்தீர்?

துன்மதி:—உயிரை ஒருபொருட்டாய் எண்ணுமைமற்றான் போய்ப்பார்க்கும் படி நேரிட்டது. பார்த்தேன். மிகவும் மனந்திருப்தி யடைந்தேன். இனித் தங்களுடன் சொல்லத்தகுமென்று நினைத்துச் சிறிதும்தாம தியாமற் புறப்பட்டு ஆறு ஏழுதினங்களிலேயே வந்துசேர்ந்து விட் டேன். இன்றுகாலைதான் வந்தேன். உடனே தங்களைப்பார்க்கும் படி நேரிட்டது.

சந்திரசேகரன்:—நண்பரே! உமது சாமர்த்தியத்திற்கு நானென்ன சொல்லப்போகின்றேன். எனக்காக உயிரையு மிழக்கத் துணிந்தீர்!

துன்மதி:—சிநேகம் பண்ணியபிறகு உயிரென்றும் உடலென்றும் பார்த்தாலாகுமா?

சந்திரசேகரன்:—தோழரே! நீர் எனக்காக இவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டீரே! உமக்கு என்னகைமமாறு செய்யப்போகின்றேன்!

துன்மதி:—நீர் அழகுள்ள புத்திரனொருவனை அவளிடமாகப் பெற்று இந்தச்சோழநாட்டுக்கரசனுக்கி ஆளச்செய்வதுதான் கைம்மாறு. அவளிடமாகப் பிறக்கும் பிள்ளை பரதனைப்போல் ஏகசககிரேசுவரனாயிருப்பானென்பதறகுத தடையேயில்லை.

சந்திரசேகரன்:—அதென்ன! அவளிடம் பிறக்கும் பிள்ளை சக்கிரேசுவரனாயிருப்பா னென்கிறீரே!

துன்மதி:—ஆம். தாய்தகப்பன்மார்கள் நல்ல அழகுடையவர்களாகவும குணமுடையவர்களாகவு மிருந்தால் ஏன் அப்படிப் பிறவாது குழந்தை? தங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை. இப்பொழுது பார்த்திருக்கிற பெண்ணோ—அழகிலும் குணத்திலும் மிகச்சிறந்த பெண்தான். தடையேயில்லை.

சந்திரசேகரன்:—மிகவும் உயர்த்திக் கூறுகின்றீரோ! அவள் எப்படித்தானிருப்பாள் சொல்லுமபார்க்கலாம். நமது மனோரஞ்சிதம் போலிருப்பாளா?

துன்மதி:—நன்றாயிருககிறது உவமை! நல்ல மயக்கம். காமத்திற்குக் கண் தெரியாதென்பது சரிதான். அந்தப்பெண்ணைக் கல்யாணம பண்ணிக்கொண்ட பிறகு மனோரஞ்சிதம் ஆகமாட்டாள் என்று பழி சுமத்தினீராயின் எனசெய்வது?

சந்திரசேகரன்:—அப்படியன்று. அவள் இப்படியிருப்பாள் என்று தெரிந்துகொள்வதற்கு ஓர் உவமை சொன்னால அதற்கென்னெல்லாமோ சொல்லுகின்றீரே!

துன்மதி:—

(பாடுதல்.)

நிலையே சுவர்க்கம் விலோசன மம்பெனுந் தேமொழியைத்
தலைகீ ழுறுந்தன் னகிலத்தை யொப்பத் தவஞ்செயினும
வலையா னினது மனப்புட் படுத்த மனோரஞ்சித
மிலைவேற் கரத்தாய் நிகர்ப்ப திலையிலை யென்றென்றுமே.

மாதுளங் காய்வனம் புக்குத் தவஞ்செயும் வண்ணங்கண்ட
சூதிளங் கொங்கை மடந்தைக் குவமை சொலத்தகுமோ
வாதொழிந் தேதலே நாணிக் கவிழ்ந்தன வண்டனத்தைப்
பேதுற வேய்வார் பிணிக்குறும் பேரிளம் பெண்ணினையே.

ஒரு பொருளுக்குவமை அதனினுஞ் சிறந்ததனுலன்றோ கூறவேண டும்? அங்ஙனமிருக்கத் தாங்கள் அநத மாசில்லா வலம்புரி முத்திறகு இந்த விலேமகளாகிய மனோரஞ்சிதத்தை உவமை கூறியது பாற கடலிற் பிறந்த பவளம் அடுப்பிற் கரியென்று சொல்வதுபோலத தான் இருக்கின்றது.—இருககட்டும்—அக்கட்டழகியின் நலம வீணு கப் போகலாமோ? கூடாது. கூடாது. தாம்வயதின் முதிர்ந்தவரா யினும் நல்ல யௌவனத்தவர் போன்றிருப்பதால் தமககு உரிய ளாவாளென்று கருதினேன். அன்றியும்தாம்இநதஉலகத்தைவெறுத தகலவதற்கு இன்னும் முப்பதுவருடகாலம் செல்லவேண்டுமென று நமது பிரபலசோசியம் ஐயங்காரவர்கள் கூறியிருத்தலானும அவள் தாங்கள்அநுபவித்தற்குரிய மடந்தையென்றே கருதினேன். தாங்கள் கேட்டனுப்பினுல் தொண்டைநாட்டரசன் தடைசொல் வானே? அஃது ஒருகாலும் நிகழாது. அஃது எனக்குத்தெரிந்தவிஷ யநதான். ஆனுலும் பெண்பாவம் பெண்தோஷமல்லவா? அதெல் லாம் புத்தியுடையவர்களாகிய நாம் ஆலோசிக்க வேண்டாமா? தாங்கள் அவளே மணம்புரிய இஷ்டப்படின் இப்பொழுதே சார்த் தூல பண்டிதரை வரவழைத்துப் பாலசந்திரோதயமும் அமிர்த குண சஞ்சீவிததயிலமும் செய்துதரச் சொல்லவேண்டியதுதான்.

**சந்திரசேகரன்**:—சரி. அதெப்படியாவ திருக்கட்டும். அவள் எப்படித் தானிருப்பாள் அதைச்சொல்லும்! இந்தக் கம்பராமாயணப் பிர சங்கம என்னத்திற்கு?

**துன்மதி**:—எப்படிச் சொல்வது! என்வாயால் அவளே வர்ணிக்கக்கூடுமோ! அதற்கு ஆதிசேஷன்தான் வரவேண்டும். யான் பன்னிப் பன்னிப் படித்தாலும் ஒரு சிறிதுதான் சொல்ல முடியும்.

(பாடுதல்.)

பைந்தொடி மிருந்த காநதியிற் சிறப்பப்
பகலவன் றினந்தினந் தோன்றிச
சிந்தையி லவளே நோக்கின வளவிற்
றிருமுகஞ் சிவந்துவெய் துயிர்த்து
விந்தைகொள் படிவத் துளக்கமுங் குறைந்து
விரைவினின் மறைகுவன் குடக்கிற்
சந்தத மிதனேக் கண்டது முளதாற்
சாற்றுமா றெவனுெ ளொளியே.

நிறைமதி யவடன் முகத்தினுக் கிளைத்து
நேரிழை யுறுப்பினுக் குவமை
யறைதரப் பெறுவ மெனவவ ணுதலிற்
கனையதா வுளவினிற் சிறுத்துங்
குறைவர வொக்கி லேமெனப புருவங
கூடுமோ வெனமிகக் குறைந்து
பிறையென வழஙக நின்றுநேர்ந் திலனுயப்
பெரிதயிர்த் தொழிநதனன் வடிவம.

மீட்டுமோர் நசையின் மிகமயக் குற்று
வெடகமு மொழிந்தன னிரண்டு
கோட்டுடைப பிறையா யருத்தசந் திரனுயக்
குலவுவா மதியெனப் பிறப்பான்
வாடடெழின் மடநதை யுறுபபினுக குடைந்து
வளருவான் குறைகுவா னெனவே
காடடிது வெனயான் காண்கிலே னெவனுங
சவினுறு பெரியநா யகனே.

அழகினின் மிகுத்த விரதிகேள் வனுமிவ
வரிவையி னெழிலினை நினைந்து
பழுதக லுருவங் கண்ணுற நாளும்
படிவமே யிலனெனப் போந்தான்
தொழுதகை யினனுய மஙகைகண் ணீலத்
தொடாசரம போற்றியே யொருதன்
வழுவிலாக் குவளைப பகழியை வருத்தும
வகையெலாம பயிற்றவெண் ணினனே.

பொன்னனுள் நடையைக் கண்டுகொ முறுமெய்ப
பொற்கொடி யரம்பையா பலரோ
டன்னமு மொருபா லோவிய வடிவா
யணிநடை பயிலுவ பொருந்திப
பன்னுறு மிசைதேர் மகதியாழ் முனிவன்
பண்ணினிற் றேற்றன னதனுன்
மின்னனின் கொடியை விண்ணவர்க் கரசன்
வியனுல குளனென் வறியான்.

மாமயிற் ருெகுதி கோதையை நோக்க
　　மழைகொடு வந்தநம் மரசென்
றேமுற மகிழ்ந்து சாயலைக் காண்பா
　　னிணைவிழி யமையுமோ வென்ன
வாமமார் தோகைக் கண்ணெலா நிரமப
　　வரிசையாய் மிகநடஞ செயுமா
ஞமமா ரயிலைத் தாங்கிய கரத்தாய்
　　நவிலுமா றெவனவள் சாயல.

மோப்பதிற் குழையு மனிசசமென் மலரு
　　முளரியு நெருஞசிலா வமர்ந்து
சேப்பவே பதத்தைச சிறைசெயப் பரிந்தே
　　சேடியர் செம்மலாக் கரத்தாற
காப்பமென் றதனைச செவ்வரி விழியாற்
　　கயிரவ வாயினற் சிவப்ப
மாப்படி புரிந்தன ரென்றுளம் வருந்து
　　மாந்தளிர் நடைபெரு ததனல்.

பஞ்சரந் தனிலே வைகுபைங் கிளியும்
　　பசியமென் ருெடியினைக கண்டே
யஞசிர மசைததுப் பலதரம் விழித்தெ
　　னன்னமென் றவடனை விளிக்கப்
பஞ்சினுக் கனுங்கும் பதமிகச சிவப்பப
　　பாசிழை நடந்தை யெடுபப
வஞசிமென் பவளக் கொம்பினை மானும்
　　வளைவிர லதினனி வதிந்தே.

வன்னமெ லுகிரை நோக்கிய சுகமும்
　　வதிந்ததோ மூக்கெனக் கருதிப
பன்னுறு சிறகை யுளர்ந்துளர்ந் தயலைப
　　பார்த்துநற் கொவ்வையி னிதழைத
தின்னுறு கனியா யயிர்த்ததைக் கோதத
　　தேமொழி வதனநோக் குற்று
மன்னமெ னடையாள் வார்த்தையைச செவிகொண்
　　டதனையே கற்குமா நினைக்கும்.

கமுகமென் களத்துச் சுந்தரி யிணைத்தோள்
கருதரு நித்திலக் கசசா
லமையெனப் பலகான் முத்தினைப் பொருப்பி
லணியணி நிறைத்துமே நிற்கு
மிமையவர் முதலோர் பெறுவதற் காற்று
ரெடுத்தலும பார்த்தலு மிசையா
தமைவுறு முலகிற் கணவனுங் குரவ
னன்றிமற் றெவரெவர் தமக்கும்.

குமிழநன் மலரி னிறத்தினைப் பொருந்தக்
கோதிலா தெண்ணனி யிசையும்
கமழுறு மணஞ்சேர் நாசிதன் னுயிர்ப்பாற்
காமன்ற னிரதமென் றேது
மமைவுறு தென்றற குரியவா சனையை
யரிதினி லூட்டியே நிறகு
மிமையவர் தருவு மினியவ ளுருப்பெற்
றின்றவம் செயுமது பெறவே.

யாழினிற் பயின்ற பாணாக ளிவடன்
யாணாமுன் கையினைக காணின்
வாழிய விதெனப பலமுறை யுரைத்து
வழிபட நினைகுவா பெரிதும்
பாழிய வகஙகை காநதளென் றேதும்
பாவல ருவமையை யழிக்கு
மாழியிற பிறவா வமுதமா மன்னு
ளடியினிற் பதின்மதி பொருந்தும்.

தவத்தினி லுயர்ந்தார் நெஞ்சினைப் பிளக்கத்
தையலின் கண்ணெனும் வாளைப்
பவத்திறம் விளைக்கும் மதனிதந் தீட்டும்
பன்னுறு சாணைகொல் கபோலம்
சிவதநபொன் றோலை யணிந்தமென் செவியுந்
திருமுகம் பொலிவுற விளங்கி
யுவதநலைப பொருந்த வுழுவலன் புடையா
னுளத்தினை வள்ளியாய்ப் பிணிக்கும்.

சுத்தவெண் மூர னெருங்கிய வாயிற்
றேன்றெயி றூறிய நன்னீர்
நித்தில வரம்புப் பவளவள் ளமதில
நிறைநற வமுதெனப் பொருந்து
மித்திற மதனைப் புவியுளோ ரறிய
விதழ்நகை கிளவியுங் காட்டுஞ்
சித்திர மனையாள் மழலையைக் கற்பான்
றீங்குயின் மழையையு மறக்கும்.

செந்தமிழ்ப் புலவர் கூறிய படிநஞ்
சேயிழை நுதலடி நுசுப்பும்
அந்தமா மகறேள் கண்ணெனு முறுப்பு
மளவினிற் குறைந்துமே பருந்ததுஞ
சிந்தையை யுருக்கி யெட்டுநான் கென்னுஞ்
சீர்பெறு மவயவ வழகு
விந்தையை விளைக்கப் பித்துறச் செய்யும்
விண்ணமர் பிரமதே வனையும்.

இன்னபூங் கொடியை யணைந்திடு தருவு
மினியதா மானற வருந்தும்
பொன்னகஞ் சிறைசேர் பொற்பமர் சுரும்பும்
புவியுறு தொருவண மினிக்குங்
கன்னலைக் கறிக்குங் களிறுநீ ரன்றிக
காசினி வேறெவ ருளரே
அன்னமும் போக பூமிய ராமா
னரியென வின்பநீர் நுகர்வீர்.

புலவர் பெருமானுகிய கம்பரால்

"வில்லொக்கு நுதலென் றாலும்
வேலொக்கும் விழியென் றாலும்
பல்லொக்கு முத்தென் றாலும்
பவளத்தை யிதழென் றாலுஞ்
சொல்லொக்கும் பொருளோவ் வாவாற்
சொல்லலா முவமை யுண்டோ
நெல்லொக்கும் புல்லென் றாலு
நேருனைத் தாகவற்றே." என்று

புகழ்ந்து கூறப்பட்ட சீதையும் இவட்குச் சேடியாந்தர முடைய ளல்ல ளென்றால் இவளுடைய யழகினையாரோ வெடுத்துரைக்க வல்லவன ?—ஆதலின் அப்பெண்மணி

“ நாறுகுணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
ஆர்கருரு சிலம்பே யணிமுரசா - வேற்படையும
வாளுமே கண்ணு வதன மதிக்குடைகீழ்
ஆளுமே பெண்மை யரசு.”

(இருவரும் சற்றுநேரம் வார்த்தையாடாம லிருக்கின்றார்கள்.)

சந்திரசேகரன் —அப்பெண்மணி நமக்குக் கிட்டுவாளா?

துன்மதி—சந்தேக மென்னவிருக்கின்றது. தடையில்லாமற் கிட்டுவாள. ஆட்சேபனையில்லை. தாங்கள் ஒரு திருமுகம் வரைந்து தூதனிடம அனுப்பினால் யாவும விளங்கும்.

சந்திரசேகரன்.—ஒருவேளை அவ்வரசன் கொடுக்கமாட்டே னென்று சொல்லி யனுப்பிவிட்டால !—

துன்மதி —பயப்படாதீர். நமது நால்வகைப்படை யிருக்கின்றன. நான ஏன நேரிற்போனேன? ராஜனுடைய பலாபலங்களையுந தெரிந்து கொண்டுவரத்தான். தாங்கள் இப்பொழுது கேட்டகேள்வியை முன்னரே ஆலோசித்துத்தான் யான போனேன.

சந்திரசேகரன்.—யாம் தூதனை யனுப்ப அரசன் சுயமவரம் நாட்டின் அதில அக்கன்னிகை நமக்கு மாலையிடாளேயானால் !—

துன்மதி —

“குன்றின துயர்ச்சி யந்தக குலமறிநுக் கறிய வுண்டோ.”

ஆதலால் உமது சௌந்தரியமும் சௌரியமும் உமக்கு விளங்காது.—எஃது எவ்வகையாயினும்நீர்புஜபலத்தில வல்லவரென்பது உலகப்பிரசித்தமான விஷயம.

“ ஆறியங நரனி தன்னு ளம்பொடு கணையம் வித்திச
சூழகுடர்ப் பிணங்கண் மலக விளைத்தபின் ஹெருழுதிபபலபேயக
கூழபடு குருதி நெய்யி னிறைச்சிச்சோ றூட்டி வென்றி
வீழ்தர வேட்டு நின்றூ ரெய்துப” வவளை யையா.

நீர்தா மையா அவளையடையப் போகின்றீர்.—

சந்திரசேகரன்:—சரி. தூதனை யனுப்பவேண்டுமே! நீரிருக்கும்போதே திருமுகம் வரைந்து வைத்துவிட்டால் பிறகு வேறுபிரதி ஒன்றெழுதித தூதனிடம் அனுப்பிவிடலாம். வாரும். போவோம்!

(சந்திரசேகரனும் துன்மதியும் போதல்.)

(சுந்தரிவருதல்; சதுரங்கம் எடுத்துச் செல்லல்.)

## இரண்டாமங்கம் முற்றிற்று.

---

# அங்கம்-III.

## முதற்களம்.

இடம்:--காஞ்சியிலரண்மனையில்விடுதியிடம். காலம்:—நண்பகல்.

நடர்:—சச்சந்தன், கனகாம்புஜம்.

சச்சந்தன்:—கனகை! இப்போது சோழநாட்டு மன்னன் சந்திரசேகரன் என்பவனிடமிருந்து ஒரு தூதுவன் வந்திருக்கின்றான்! அது தெரிந்த விஷயந்தானே உனக்கு?

கனகாம்புஜம்.—தெரியாதே! யாருஞ்சொல்லவில்லையே! என்ன விசேஷம? தூதன் வரவேண்டிய காரியம் என்ன விருக்கக்கூடும்? ஒருவேளை அந்த நாட்டரசருக்குச் சீமந்தமோ! அதற்காகத் திருமுகம் வந்திருக்கின்றதோ?

சச்சந்தன்—பெண்ணே! சீமந்தமில்லை. கல்யாணக்கடிதம் வந்திருக்கின்றது!

கனகாம்புஜம்.—முன்னேயே கல்யாணமாயிருக்கின்றதே அவருக்கு? ஒருவேளை முதற்றாரந்தப்பி யிரண்டாந் தாரங் கல்யாணமோ!

சச்சந்தன்:—அப்படியில்லை. கல்யாணமாய்த் தனக்கு இருபத்தைந்து வருடகாலமாயும் புத்திரப் பேறென்பதில்லையாம். அதனாலே நமக்குத் தூதனையனுபபி—

கனகாம்புஜம்:—இவருக்கு இப்பொழுதே குறைந்தது ஐம்பது வயதிருக்குமே! இவருக்கேன இப்பொழுது பெண்சாதி? இரண்டாந் தாரத்திற்குக் குழந்தைபிறக்கு மென்பதென்ன நிச்சயம்? இவருக்கிரண்டாந்தாரம வருபவள் பிறர்முகம் பார்க்கவேண்டுவதுதான்! பன்னிரண்டு பதின்மூன்று வயதுப்பெண்ணைத்தானே கல்யாணஞ்செய்து கொள்வதாயிருக்கவேண்டும். இவர், வயிற்றிற்பிறந்த பேர்த்தியைக் கல்யாணஞ்செய்து கொள்வதுபோலவே யிருக்கின்றது! இவருக்குப்பெண்ணைக் கொடுக்கின்றார்களே புத்தியீனர்கள்! அவர்கள் கொலைபாதகர்களாகவே யிருக்கவேண்டும். பெண்ணைப்பெற்று இப்படியும் விற்பார்களோ! ஈசா! பெரும்பாவம்! கிழவர்களுக்குத் தான் ஆசையதிகம்! வலியற்றும் பித்துப்பிடித் தலைகின்றார்கள்!

சச்சந்தன்:—கண்ணே! அவர் இரண்டாந்தாரங் கல்யாணஞ்செய்து கொளவது இன்பமநுபவிக்கிற எண்ணத்தைக் சொண்டன்று! புத்திரவாஞ்சை எல்லாருக்கு முள்ளதுதானே! தனக்குப்பின் தேசத்

தையாள்வதற்கு ஒருபிள்ளை தன்மனைவி வயிற்றிற பிறக்கவேண்டு மென்றுதான் கல்யாணஞ் செய்துகொள்ளப் போகினருராம். அதற்காக—

**கனகாம்புஜம்:**—மனைவி வயிற்றில் இவருக்குப் பிள்ளைபிறககவே பிறக சாது. அது நிச்சயம. மனைவி சோரபுருஷனுடன கலந்து பிளளை பெற்றுக்கொடுககலாம்! அவள் பதிவிரதை யாயிருநதால் அதுவு மில்லை!—

**சச்சந்தன்**—பெண்ணே! உலகத்தில் ஐம்பது வயதுடையவர்கள் எத்தனை பேர்பிள்ளை பெறுகின்றுர்கள். நீபெண்பிள்ளை யானபடியால் ஒன றுந் தெரியவில்லை!—இப்பொழுது அவரனுப்பியிருக்குந் தூதரிடத் தில் என்ன வுத்தரஞ் சொல்லியனுப்புவது?

**கனகாம்புஜம்.**—எதற்கு உத்தரமனுப்ப வேண்டும்?

**சச்சந்தன்.**—நமது சரசாங்கியைக் கொடுக்கும்படி யெழுதி யனுப்பிய தற்கு!

**கனகாம்புஜம்.**—நாங்களோ எழுதி யனுப்புகிறதுதானே! எனனை ஏன் கேட்கவேண்டும்? தாங்கள பெறறவரானபடியால் உங்களுக்கவளை விற்க எண்ணமிருக்கிறபோது அப்படியே செயகிறதுதானே!

**சச்சந்தன்.**—பெண்ணே! எப்படியிருந்தாலும் உன்னேடு யோசனை செய்யாமல எந்தக்காரியம நடக்கும்? நீதான அவள் நடக்கை நேரிதன்றென்று முனபே கூறியிருக்கின்றனையே! யாருக்காவது கொடுததுவிட வேண்டியதுதானே! இனியும் வைததிருபபது அவ மான மல்லவோ நமக்கு?

**கனகாம்புஜம்.**—அழகானந்தனைப் பார்த்தாளென்றுயான் கூறினல் நீங் கள் அவள் சோரம் போனளென்று நினைப்பதோ? நனருயிருக கினறுள்! கனனியருககு ஒருவர்முகம் பார்த்தல் தகாதெனறு சாஸ்திரங் கூறுதலினுலே, யான் அவள்நடக்கை நனருயில்லை யென்றேன்! இப்போது அவளைப்பார்தத குற்றத்திற்காகப் பாழுங கிணற்றிற் பிடித்துத தள்ளிவிடுவதோ? கன்னிகைகளுக்கு நலல அழகாக இருககும் ஆடவரைக்கண்டால், நமக்குப் புருஷனுக மாட் டாளுவென்று நினைப்பது வழககந்தானே!

**சச்சந்தன்.**—நாம் ஏதாவது ஒருத்தரமனுப்பவேண்டும். இதோ இருக்கின றது அவர்படம்? இதை நமது குமாரத்திக்குக்காண்பித்து அவள மனத்தை யறிந்து எனக்குச் சொல்வதன்றி நீயும் உன்னிஷ்டத தைத் தெரிவி!

**கனகாம்புஜம்:**—என் இஷ்டம் யாதிருக்கின்றது! தங்களுக்கெது இஷ் டமோ அதுதான் எனக்கும் இஷ்டம்! இந்தப்படம் செவவிது! செவ்விது!! மிகவும் அழகுடைத்து!

(பாடுதல்.)

இராகம் - பந்துவராளி. தாளம் - ஆதி.

பல்லவி.

அழகுடைத்தம்மா - மிக
அழகுடைத்தம்மா.

அநுபல்லவி.

பழகும் பாவலோர
பகரரிய சீர (அழகு)

சரணங்கள்.

முகத்தொளியைக் காண மூவாயிர நாட்டம்
அகத்திற் கொண்டாற்று னறியலா நோட்டம் (அழகு)

பாலைச் சிமாட்டிக்குப பாரெங்கனும் கிட்டா
சால நரைத்திட்ட தன்மையுரைக் கெட்டா (அழகு)

பூரணசந்த்ரனைப் போன்றதைய விடம்
தாரணிந்து வாழத் தக்கவர்தம் படம் (அழகு)

இதைச் சரசாங்கிக்குக் காண்பித்தால் காரியமிழ்வாள்! நீங்களே சென்று அவளிடங் கொடுங்கள்! நான மாற்றாந்தாயாயிருந்து அப்படிச்செயவது தகுதியன்று! சொந்தத்தாய் எது செய்யினும் பாதகமில்லை. நான் தங்கள் கட்டளைப்படி நடக்கினும் உலகம பலபல விதமாக நினைக்கும!

மப சந்தன் —உனக்கே இஷ்டமில்லாத போது அவளுக்கெங்கே யிஷ்டமிருக்கப் போகின்றது?

கனகாம்புஜம்:—ஒருவேளை அவளுக்கிஷ்ட மிருக்குமோ என்னவோ! உலகத்தில் தந்தை புத்திசாலியாய்ப் படித்திருக்கின்றானென்றும, தாய் பணக்காரனென்றும் பெண் அழகுடையளென்றும உற்றார் முதலியோர் நல்லகுலமோவென்றும் பார்ப்பதுண்டு! முக்கியமாகப் பெண்மனங்கோணாமலும் உற்றார்வசை சொல்லாமலுமிருக்கும்படி பார்த்துத்தாய் தந்தையர் தமது பெண்களுக்கு விவாகஞ்செயயவேண்டும். குலத்திலே குரங்கையாயினுங் கொள்ளென்பது உலகில் தொன்றுதொட்டுவழங்கிவரும்பழமொழி. புதுக்கால் வெட்டாதே பழங்கால் தூர்க்காதேயென்று கூறுவது முண்டு!

ஆதலால் நமதுவருக்கத்திலேயே ஒருவருக்கு விவாகஞ் செய்து கொடுப்பது தகுதியென்று தோன்றுகிறது. புது இடத்தில் நமது குமாரத்தியைக் கொடுப்பது உசிதமாய்த் தோன்றவில்லை.—வண்டு சண்பக மலரிடத்திற் சேருமோ?—மேலும் அவர் கிழவரல்லரோ?- இனித் தங்களிஷ்டம். நான் என்னத்திற்குச்சொல்லவேண்டும்?

சச்சந்தன்:—ஆயின் நல்லது! நாம் கொடுக்கமாட்டோமென்று சொல்லி யனுப்பிவிடுவோம்! இனி நமது பெண்ணையாருக்குத்தான் கொடுப்பது? குணசாலியாகவும் போரில் வனமையுடையவர்களாகவும ஒருவரு மில்லையே! (முருந்தன்வருதல்.)

கனகாம்புஜம்:—மகாராஜா! தோட்டத்திற் காய்கறி வைத்துக்கொண்டு வேறுவிலைக்கு வாங்குவது போலிருக்கின்றதே! இதோ நமது அருமைத் தம்பியில்லையோ?

சச்சந்தன்:—ஆனுற்சரி. சர்க்கரைப்பந்தலிற் றேன்மாரி பெய்தாற்போலாயிற்று! யான் போகின்றேன்!—யான் மறந்தாற்போல் என்னவோ யோசித்திருந்தேன. (சச்சந்தனபோதல.)

முதந்தன்:—சரசாங்கியைக் கேட்கவாவந்தான் தூதன்? அப்படித் தெரிந்திருந்தால் நேற்றே கொன்றிருப்பேனே!

கனகாம்புஜம்:—தம்பி! நீபுத்திசாலியாயிரு! என்னுத்தரவின்றி நீயொரு துஷ்டத்தனமுஞ் செய்யாதே! என்னையல்லாமல் சரசாங்கிக்கு எப்படிக் கல்யாணம் நடக்கப்போகின்றது? நீ ஏன் பயப்படுகின்ருய்? வெந்நீரில் வீடுவெந்துவிடப் போகின்றதா?—

(சிங்காரவல்லிவருதல்.)

சிங்காரவல்லி:—அம்மா! மகாராஜா தங்களை மறுபடியும் பார்க்கவேண்டுமாம். அழைத்துவரும்படி யனுப்பினுர்கள்.

கனகாம்புஜம்:—இதோ வந்துவிட்டேன். (யாவரும்போதல்.)

---

## இரண்டாங்களம்.

இடம்:--காஞ்சியிற்கன்னிமாடத்துப்பூங்காவனம். காலம்:--மாலை.

நடி:—சரசாங்கி.

சரசாங்கி:— (பாடுதல்.)

“ முனிவரும் போக பூமிப்
போகமுட் டாது பெற்றுந்
தனியவ ராகி வாழ்தல்
சாதுய ரதனி னில்லை

கனிபடு கிளவி யாதங்
காதலன் கவானிற றுஞ்சிற
பனியிரு விசும்பிற் றேவர்
பான்மையிற் றென்று சொன்ஞன்" எனறு

பெரியோர் கூறியது பிசகன்று.—உண்மையே! சந்திர காந்தக கற களாலாகிய இப்பளிங்கு மண்டபமும் சூரியகாந்தம் போன்றுதகிக கினறதே!—ஏ! வசநதமண்டபமே! எனதலைவ ரருகிருநத காலத் துததெனறற்காற்றும சந்திர கிரணமு நினனங்கதிற் பொருநதக் குளிர்நதிருப்பாயே!—மாலைப் பொழுதுதான் அரசனினறிக கிடக் கும் நாட்டிற் குறும்புபுக்கு நடாத்துவதுபோ லென்னைக் காய்கின றது.—நீயுந் தலைவன் நீத்தகன்ற இக்காலத்துத்துணையின்றி வதியும என்னைப பாலைவனததிற் கொடும்புலி துரத்தலால் யான் உயிர் நீங் குவேனென்றறிந்தும் மனமிரங்காமற செந்தழலாய்த் தகிப்பதென் னையோ?—நீங்கள் எல்லாம் எனககுத் துணையாயிருந்து என்னை யாற்றுவிப்பீரென்றெண்ணியே யெனதலைவர் என்னைப் பிரிந்தகன ருர்.—நம்பிக்கைத் துரோகிகாள்! அவரிருக்கும் வரையில் ஆம ஆம என்று தலையசைத்து முகமனியம்பி யவர்சென்றதும் எனனைப்பட முடியாத துன்பததிறகாளாக்கு கின்றீர்களோ?—ஏ! நயவஞ்சகர் காள்! உங்களை வீணேநம்பித் தலைவரும் விட்டகன்றனரே! அவர் வரின் கைகட்டி வாய்புதைத்து நிற்பீர்களே!—உமது துர்க்குணத தை யறிநதிருப்பராயின விட்டு நீங்குவரா?—ஏன் நீங்குவாா? ஒருகாலும் நீங்கிப்பிரிந்திரார். தனியே துணையின்றி யேங்கும் ஒரு பெண்ணைக்காயு முமதுவீரத்தை யென்னெனறுரைப்பது?—அவரி ருககும்போது எனக்கின்பஞ் செய்யுநீங்கள் எனக்கிப்பொழுது விரோதம் பாராட்டுகின்றீர்களே!—அவர்வந்தவுடன நுமதாண் மையெல்லாம் ஒடுங்கி விடுமன்றே?—ஏ! தலைவா! எபபொழுது வந்தென்னை யிப்பாதகர்களிடமிருந்து காக்கப்போகின்றுய்? அ தோ! தலைவனே!—

(பாடுதல்.)

பையத்தொட டேயென்றன் பாற்கலச விணைநோககி
நையுமிடை யொடியாம னயந்தவிவை மேலோாக
ஊயவென்றே யடிவீழ்வார்க் கபயக்கை காடடிறறுற
றையலகா ணென்றுரைககுந் தலைவாவென் றலைவாவோ.

ஆற்றலசேர் குரும்பையினை யகங்கையாற் றொடடிநதச
சீறறமிகுந் தெனைக்கொல்லுந் திறல்யானை வலியடககப

போற்றிய வஙகுசமென் பூவிரலி னுகிரலவோ
சாற்றணங்கே யென்றுரைக்குந் தலைவாவென் றலைவாவோ.

சங்கையிலா, தென்றனது தமனியக்குன் றைத்தொடடே
யிஙகொறறை யூசியின்மே லியற்றுதவ நன்றுமா
லஙகையா லபயாத்த மளித்தேனைப் பார்த்தருளாய்
தங்கம்மே யென்றுரைகருந் தலைவாவென் றலைவாவோ.

தோளணிக ளுயிர்நீங்குந் துயரத்தா லென்றெண்ணி
வாளுடையாய் நினையொவ்வா மருத்துவர்போற் கைபாாத்துத்
தாளிடதது வீழ்ந்தென்னைத் தலைவன்வரப் பார்த்தாறறுன்
நாளைநீ பிழைத்திருப்பாய் நங்காயென் றுரைததனவே

அழகின்பம் பொருந்துறுநல் லரியவொரு பெயருடையா
யழகின்பந தருவாயென் றையுறு துணைசசோந்தே
னழகின்பங கொள்ளைகொள்வே னறிவிலா யென்றெனற
னழகின்பங கவர்ந்தென்னை யழுமாறு வைத்தனையே.—

(இந்துவதனைவருதல்.)

**இந்துவதனை:**—(தனக்குள்) இதென்ன அழுகுரற் கேட்கிறதே! நமது தலைவிதான் துக்கிக்கின்றுளோ! ஆம். அவள் தான். யான்சென்று தேறுதல் கூறுவேன. —(இந்துவதனை சரசாங்கி யருகில் வந்து) அமமா! எதற்காகத் தாங்கள் இங்குத்தனியேவந்து வருந்து கின றீர்கள்?—

**சரசாங்கி** — (பாடுதல்.)

இராகம - முகாரி. தாளம் - அடதாளசாப்பு.

**கண்ணிகள்.**

சகியே நானிந்த ஜெனன மெடுத்தேன் வீணுயச
சஞ்சலபபட் டேமனந்
தயஙகுகின்றே னேதினஞ்
சாறறுவாய் சாற்றுவாய் சாற்றுவாய் சாறறுவாய.(சகியே)

**இந்துவதனை:**—

சாற்றுவ வென்ன வம்மா சாரு மின்ப துன்பமுஞ
சமரசம தாயெங்குஞ்
சகத்திலெவர்க் குந்தங்குந்
தையலே தையலே தையலே தையலே. (சாற்று)

சரசாங்கி:—

சென்ற விடத்தி லுற்ற செய்தி யொன்றுங் காணேனே
சித்தமயங்கு மென்செய்வேன்
சேயிழையெப் படியுய்வேன்
தேர்கிலேன் தேர்கிலேன் தேர்கிலேன் தேர்கிலேன். (சென்ற)

இந்துவதனை:—

எப்படி யெப்படி யென்றே யேங்குவ தேனோ வம்மா
ஏதுங்குறை வராதும்
ஏந்தலுக்கே யெப்போதும்
எண்ணுவாய் எண்ணுவாய் எண்ணுவாய் எண்ணுவாய். (எப)

சரசாங்கி:—

விரைவில் வருவே னென்றே வேந்தரு மேகினர்
வீணுரை யோமானே
விளம்பிடு வாய்செந்தேனே
மேவுமோ மேவுமோ மேவுமோ மேவுமோ. (விரைவி)

இந்துவதனை:—

விளம்புவ தென்ன வம்மா மெய்யாய் நின்மீ தென்றும்
வேட்கையுற் றவர்வர
வெகுநாட்செல் லுமோஸ்திர
மீளுவார் மீளுவார் மீளுவார் மீளுவார். (விளம்பு)

சரசாங்கி:—கண்ணே! நான் எப்பொழுது என்பிராணநாதரைப் பார்க்கப்போகின்றேன்? அவர்பிரிந்தது முதல்துக்கம் அளவில்லாமற் பெருகுகின்றதனாலே யான்மிகவும் நைந்துருகு கின்றேனே! இஃதேனோ?

இந்துவதனை—அம்மா! உலகத்தில் ஸ்திரீகள் புருடருடன் அநுபவிக்கும் இன்பம் ஒருதிவலையாக, அவரது பிரிவால் வருந்துந்துன்பம் கடலினுமதிகமாயிருக்கின்றது! மாதர்களிடம் பிரிவிடத்துதுக்கந் தோன்றுவதன்றி ஆடவரிடம் அதுமிகுதியும் புலப்படுவதில்லை! அவர்கள் தமது நாயகிகள்மேற் கடலினு மிகுந்தகாதல் கொண்டவிடத்தும் உருகின பொன்னிலுற்ற நீர்ப்புள்ளிபோல அதனை வெளியிற றோற்றுவிக்காது அடக்கும் வல்லமையுடையர்களாயிருக்கின்றார்கள்! அவர்கள் தாமே தேறுதலடைவதே யுசிதமாகத்தோன்றுகின்றது!—ஒருவேளை இத்துன்ப மிகுதியாலிறந்துபடும்படியும் நேரிடும். பிறகு இம்மையோடு மறுமைப்பயனு மின்றிக்கணவனுக்

குத்தீங்கிழைத்த தன்மையுமுண்டாகும்! அவரும் தங்களையதிசீக்கிரத்திற பார்க்கக்கூடுமென்றே தோன்றுகிறது! ஆதலின தாங்களா ஆற்றியிருப்பதேதகுதி. அம்மா! தேகமுழுவதும் பசலை பரவிறறே!

சரசாங்கி.— (பாடுதல்.)

"இலையா ரெரிமணிப்பூ ணேந்து முலையுஞ
சிலையார் திருநுதலுஞ செம்பசலை மூழக
மலையா ரிலஙகருவி வாள்போல மின்னுங்
கலையாதீஞ சொலலினுய் காணுரகொல் கேளவா."

"பிறையாாதிருநுதலும் பேரமருண் கண்ணும்
பொறையார் வனமுலையும் பூமபசலை மூழக
நிறைவா ளிலஙகருவி நீள்வரைமேன் மினனுங
கறைவேலுண் கண்ணினுய் காணுர்கொல் கேள்வர்."

"அரும்போ வனமுலையு மாடமைமென் ருேளுந்
திருநதேர் பிறைநுதலுஞ செம்பசலை மூழ்க
நெருங்கார மணியருவி நீள்வரைமேன் மின்னுங
கரும்பாாதீஞ சொல்லினுய் காணுர்கொல கேள்வா."

(ஏமவதிவருதல்.)

ஏமவதி.—அம்மா! சுகுணர்வந்திருக்கின்ருர்.

சரசாங்கி:—வரச்சொல் (ஏமவதிபோதல்.) இந்துவதனை! நீசெல். இதோ வருகின்றேன்.— (இநதுவதனைபோதல.)
ஐயோ! இநதுவதனை! யான் என்னடிசெய்யப் போகின்றேன? என்னங்கமெல்லாந் தழலா யெரிகின்றதே!—

(எழுந்துசோலையூடே நடந்துசெல்கின்ருள்.)

(பாடுதல்.)

காவிடத்து மலரகத்து மதுநுகர
விரைந்துசெலுங காமாவண்டா
நாவிடத்துப் பொய்யுரைத்து நகரகன்ற
நாயகனுந் நடைகண் டேபல
பூவிடத்துந் தேனுணவி னுமையிகழ்ந்தா
னென்றுது பொலிவு கூர்ந்து
கோவிடத்தென் வருத்தமெலாங் கூறியவா
வரசசெய்து கோலஞ செய்வீர்.

கைம்மாறு கருதாதிவ் வுலகினோர்க்குத்
துணைபுரியுங் காரமே கங்கா
ளம்மானுக் கென்வண்ண முரைத்தருளி
யவரவர் நீண்டு வந்தா
லும்மாலே மயிலடையு மனக்கிளர்ச்சி
யெனதாகு முண்மை யீது
பெம்மானு மயிலென்பான யானுமதை
யோர்ந்திருப்பேன் பெரிது மன்றே.

உயிர்த்துணைவன் கூறுமொழி கூறியெனைப்
பரிகசித்தே யுவக்குந் தத்தா
யயர்த்தனையோ வத்தொழிலே யல்லாக்கா
லவன்பிரிவை யறிகி லாயோ
செயிர்த்தெதுவுஞ் செப்பாதே செவ்வியுணாந்
தணுகிநின்றன் றேவி யின்னு
முயிர்த்திருக்கின் றுளனநீ யுரைத்தவனை
யிவ்விடத்தி னுறச்செய் வாயோ.

ஏ! தத்தாய்! நீ குணமாலையினது கிளியாரைப்போன்று தலைவனை நலவரவைத் திரும்பிவந்து கூறுமாற்றலுடையை யல்லையாயினும் இஃதொன்றையாயினுஞ் சொல்லுதி.

“ வந்தெனைக் கரம் பற்றிய வைகலவா
யிந்த விப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தை யாலுந்தொ டேனென்ற செவ்வரந்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.”

“ ஈண்டு நானிருந் தின்னுயிர் மாயினு
மீண்டு வந்துபி றந்துதன் மேனியைத்
தீண்ட லாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டி னுடொழு தென்று விளம்புவாய்.”

நீ நின்வாயிலாக அவருரைத்தனவற்றிற்குச் சாட்சியாயிருந்தா யாதலால் நீதான்சென்று ஞாபகமூட்டவேண்டும். சீக்கிரஞ்சென்று வருதி.—

(பாடுதல்.)

இராகம் - புன்னாகவராளி. தாளம் - ஆதி.

**பல்லவி.**

என்று காண்பேன் என்றன் நெஞ்சமே - நான்
என்று காண்பேன் என்றன் நெஞ்சமே

**அநுபல்லவி.**

ஒன்று மெனை விட்டு நீங்கி
அன்று சென்ற அன்பர் தம்மை (என்று)

**சரணங்கள்.**

மீள மீள வந்தே மத
வேளும் போர்செய் கின்றா னொரு
நாளு மோர்யு கமா கவே
நீளு மென்ம ணாளர் தம்மை (என்று)

கத்துங் கடல் சூழ்பு வியி
லெத்தி சையி லுற்றிட் டாரோ
நித்த மெதிர் பார்த்து மந்த
வுத்த மர்தாம் வரக் காணேம் (என்று)

ஆசி லாநன் மணம் வீசும்
வாச மலர்ச சோலை யிலுல்
லாச மிஞ்ச வேந யந்த
நேச விசு வாசர் தம்மை (என்று)

ஏ! மனமே! மனமே!! நீ எங்கிருக்கின்றாய்?—அன்றவருடன சென்றநீ இன்றும்வந்தாயில்லையே!—செய்குன்றே! இயற்கைக் குன்றைக் குழைவிக்குந் தோளான் என்று வந்து கவலை தீர்ப்பான்? மாதவிக்கொடியே!—உன்னைப்பார்க்கப் பொறாமையெழுகின்றதே! நீயரசைவிட் டகல்வதின்றோ?—அந்தோ!—

(சரசாங்கி துக்கித்துக்கொண்டே பொதும்பரின்கண் மறைகின்றாள்.)

சுதனன்:—(கடிதம் ஒன்றைப்பிரித்து வாசித்தல்.) ஆ! இதென்ன சரசாங்கியைக்குற்றமுடையவளென்றும் வியபிசாரியென்றும் கூறியிருக்கின்றதே! யாரிதை எழுதினது? என்னது நண்பனா? அழகானநதனா? அவள்புருடனா? நன்று! நன்று!! சித்தப்பிரமையோ! 'அன்பில்லாதவள்' அவள் நம்மை நினைந்து நினைந்து உருகுவது அன்பில்லா

மையோ? இறக்கவேண்டியதா? ஐயோ! ஐயோ!! என்ன விபரீதம்! காலத்துக்குத்தகுந்த புத்தியா? யான்சொல்லவேண்டும். நானுசொல்வது? சற்பிற கரசியை! பதிவிரதாசிரோமணியை! இதைக்கண்ணுரக்கண்டதைவிட ரவுரவாதிநரசமும் அநுபவிக்கவேண்டியதில்லையே! 'அரத்த அடையாளமனுப்புவது' ஐயையோ! பிறகென்ன எழுதியிருக்கின்றது?—'எனக்குரிய தோழனுயின் இதுபுரியாமலிராய்.' இதென்னகாலக்கேடு. என்ன வன்னெஞ்சம! யோசனையழிந்ததோ? பெண்சாதியைக் கொலைபுரிவது. நன்று! நன்று!!—பிறகு—'தடையில்லாமற்செய! தாமதம் வேண்டாம்' அவளே நின்னைப் பின்றொடர்ந்துவருமபடி அவளுக்குக் கடிதமெழுதி யிருக்கின்றேன.'—நன்மை நினைப்பவர்களுக்கும் அறநெறி வழுவாதிருப்பவர்களுக்கும் தண்டனை யிதுவோ! ஈசா!—சரசாங்கி அதோ வாடியமுகத்தோடு வருகின்றாள்! யான் என்ன செய்யப்போகின்றேன. எனக்கொன்றும் புலப்பட வில்லையே! (சரசாங்கிவருதல்.)

சரசாங்கி—சுகுணரே! என்னவிசேஷம்?

சுகுணன்:—விசேஷமொன்றுமில்லை. அழகானந்தரிடமிருந்து ஒருகடிதம் வந்திருக்கின்றது!

சரசாங்கி.—கடிதமா வந்திருக்கின்றது? எங்கே! (சுகுணன் கடிதங்கொடுக்கக்கண்ணிலொற்றி முத்தமிடுகின்றாள்.) எனது நாயகரது க்ஷேமலாபங்களைக் குறித்தகடிதமோ? ஐயோ! எத்தனை நாளாக இப்பேர்ப்பட .கடிதம் வராமல் துக்கித்திருந்தேன்! இதைக்கண்ணுற்றயான் சந்தோஷ சாகரத்திலாழ்ந்தேன்! அவர் சௌக்கியமாயிருக்கின்றாரென்பதற் கிஃது ஓர் அறிகுறியே யன்றோ? ஆம். (பிரித்துவாசிக்கின்றாள்.) "உனது தகப்பனார் அன்னியதேசம்போம்படி ஆஞ்ஞாபித்ததினாலுண்டான வருத்தத்திற்கு மேலான பெருந்துன்பத்தை உன்னைப்பார்க்காததனாலடைகின்றேன்! உனக்கத்தன்மையில்லையோ? யான் திருவக்கரையிலிருக்கின்றேன். நீ சுகுணனைப்பின்பற்றிவரின நாமிருவரும் ஒருவரையொருவர் கண்ணுறல் கூடும்.—

உனது நன்மை நாடுகின்ற
" அழகானந்தன். "

சுகுணரே! அவரே கட்டளையிட்ட பின்னரும் அவரைப்பாராமல் ஒருதினமும் ஆற்றியிருக்கமுடியாது! அவரையுடனே யான் பார்க்கவேண்டுமே! இல்லாவிடில் எனதுயிர் நீங்கும்! சுகுணரே! திருவக்கரை எவ்வளவு தூரமிருக்கும்?

சுகுணன்—அம்மணீ! இரண்டு காதமிருக்கும்! அதுவும் அதிகமென்றே எண்ணுகின்றேன்!

சாசாங்கி:—நீர் எனக்குத் துணைவரவேண்டும்! நீர் அருணோதயத்திற்கு முன் என்னைக் காணும்படி நம்குமாரகோட்டத்தின சண்வநதிருக்க வேண்டும்!

சுகுணன்:—அங்ஙனமே வருகின்றேன். (சுகுணன்போதல்.)

சாசாங்கி:—யான் சுகுணருடன் புறப்பட்டுப் போவதைப்பற்றி நமது தோழி இந்துவதனையுடன் கூறுவோமா!—அவள் யாருடனும் சொல்லமாட்டாள்! நமக்கொதத தோழியல்லளோ!—

(இந்துவதனைவருதல்.)

இந்துவதனே! நீகூறியபடியேயான் என் பிராணநாதரைபபாாக் குஞ் சமயம் நேரிட்டிருக்கின்றது! இதோபார்த்தாயா கடிதம்? யான் நாளைவிடியற்காலம் சென்று அவர்பாததரிசனஞ்செய்யும்படி நிச்சயித்து விட்டேன்!

இந்துவதனை:—அம்மா! யார்கூடவருவது! சுகுணரோ? புருடர்களோடு தாம்தனியே போதல் தகுதியன்றே! யானும் தங்களோடு வரு வேன்! இந்தவரம்மாத்திரம் கொடுக்கவேண்டும் அம்மணீ!—

சாசாங்கி:—கண்ணே! இந்துவதனை! நீகேட்கத்தகாத வரமல்லவோ கேட்கின்றாய்? நீவேறு எதுவேண்டுமாயினுங் கேள்! தடையின றிக்கொடுக்கின்றேன! அதுமாத்திரங் கேட்காதே!

இந்துவதனை:—ஏனம்மணீ?

சாசாங்கி:—பெண்ணே! நீபுத்திசாலி யல்லையோ! நான் சொல்வதைக் கேள். சுகுணரிடம் இவ்வளவு நாளாகப் பழகுவதனாலே அவர் என் னைத்தங்கை போலெண்ணியிருப்பது உனக்குத் தெரியவில்லையே! அவரை நம்புவதிறகுற்றமேயில்லை. ஆதலின்யான் அவருடன்போக லாம். நீஏன்வரவேண்டும்? நீசுகமாய் அரண்மனையிற் காலத்தைக கழிப்பதை விட்டுவிட்டு என்னைப்பின்பற்றி வருவேன் என்கின றாயே! என்தலைவிதி யான்போகவேண்டி யிருக்கிறது!

இந்துவதனை:—அம்மா! என்னைவிட்டுவிட்டா போகப்போகின்றீகள்? தம்மைப்பிரிந்து நான் எப்படி யுயிர்தரிததிருப்பேன! நீங்கள் கல் லிலுமுள்ளிலும் நடந்து செல்லநான் அரணமனையிலிருப்பதோ? யானும் வருகினறேன்!

சாசாங்கி:—கண்ணே! உன்னைப்பிரிவதில் எனக்குத் துக்கமில்லையோ? ஆயினும் எனசெய்வது? யான் ஒருவருக்குத் தாரமாயினபோது அவருடைய சுகதுக்கத்திற்குத் தக்கபடி நடக்கவேண்டி யிருககி றது! வருந்தாதே! நீ. இங்கேயேயிரு!

இந்துவதனை:—யானும் வருகின்றேன்!

சரசாங்கி:—எத்தனைவிதமாக எடுத்துச்சொன்னாலும் நீ தெரிந்துகொள்வதில்லை! இன்றிரவு எப்படிக் கழியப்போகின்றது எனக்கு? நீ எனனுடன்வந்தால் அதுவசைச்சொலன்றோ? "ஊழ்வினை யுருத்துவந்தூட்டு" மென்பதற்கேற்ப யானநுபவிக்கின்றேன். நீகிளியோடுகொஞ்சிக்குலாவிக் கொண்டிரு!

இந்துவதனை:—வருகின்றேனே!

சரசாங்கி:—என்மேற் பட்ச மிருந்தால் என் சொல்லைத்தடுப்பாயோ! யான் போகின்றேன்! (சரசாங்கிபோதல்.)

இந்துவதனை:—நீ என்னை விட்டுப்பிரிந்தாபோகப் போகின்றாய்? தாயே!

(பாடுதல்.)

இராகம் - பைரவி. தாளம் - ஆதி.

**பல்லவி.**

தாயே யுன்னைப் பிரிந் தாலே-உயிர்
தரித்திருப்பனோ புவி மேலே. (தாயே)

**அநுபல்லவி.**

நீயென்னை யொருபோதும்
நீங்கவிடாயே
நீதியோ விது வைப்பாய் (தாயே)

**சரணங்கள்.**

கந்த மலர்ச் சோலையிற
சந்ததமுந் தான் சென்று
பந்தினை யாடுவமே (தாயே)

பாலைபபழித்த மொழி
யாலே பணிததருளுங
கோலங காண்பதெக் காலம (தாயே)

பொங்கும பணிகள் நின
தஙகந் தனிலே யென்றுந்
தங்கப பூட்டுவ தென்றோ (தாயே)

[இந்துவதனே யென்று ஓரினியமெனகுரல் விளிக்க
என்றலைவி மனமிரங்கி யென்னையழைத்தாளோ வென்று
சததமெழுந்த திசைநோக்கி விரைந்துஇந்துவதனைசெல்கின்றாள்.]

---

## மூன்றாங்களம்.

இடம்:—ஒருமலைச்சாரல். காலம்:—காலை.

நடர்:—குணநிதி, விக்கிரமன், வீரசேனன்.

**விக்கிரமன்:**—அப்பா! மூன்று தினங்களாக மழைவிடாமற் பெய்துகொண்டிருந்ததனால் நாம் நமது குகையினின்றும் வெளிப்படுவதற்கும கூடாமையாயிருந்தது. இன்று மழை சற்று நினறிருக்கினறமையால் வெளியிற் புறப்படும்படி எங்களுக்கெண்ண மிருக்கின்றது.

**வீரசேனன்:**—ஆம், யானும் என்தமையனோடு செல்வேன். எங்களிருவருக்கும் விடை கொடுக்கவேண்டும். தந்தையே!

**குணநிதி:**—உங்களது வேண்டுகோளைத் தடுப்பதற் கியாதுங் காரணமின்மையின் நீங்கள் போய்ச்சுற்றிப்பார்த்து வரலாம். மழைபெய்து நின்றிருக்கின்றமையால் நீங்கள் வேட்டையாடுவதில அதிசாக்கிரதையாயிருக்கவேண்டும். மிகுந்த ஞாபகமிருக்கட்டும். மழையால் வருந்திப் பதுங்கியிருக்கும்பன்றி முதலிய மிருகக்கூட்டங்கள் எல்லாம் இரைதேடி வெளிவருங்காலமானபடியால் நீங்கள் மிகவும் தாமசப் படுவீர்களாயின் யான் சந்தேகப்பட்டு நும்மைத் தேடிவ வேண்டி நேரிடும். ஆதலால் அதிசீக்கிரத்திற் றிரும்புங்கள்.

**விக்கிரமவீரசேனர்கள்:**—அப்படியே தடையின்றி வேட்டையாடிவருவோம்.

(பாடுதல்.)

இராகம் - பியாகடை. தாளம் - ஆதி.

### பல்லவி.

வேட்டை யாடி வருவோம் - நாமவன
வேட்டை யாடி வருவோம்.

### அநுபல்லவி.

காட்டினில் வாழ் கின்ற
கனவிலங் கினம் பொன்ற (வேடடை)

### சரணங்கள்.

பார்த்துப் பதுங்கி யெதிர் பாயத் தனது வலி
யார்த்தெழு சினமடங் காம லுழலும் புலி (வேட்டை)

பரும்பனைக் கருநிறம் படைத்த குடாவடி
தருவிலு மேறுறுந் தன்மை யுள காடி (வேட்டை)

வக்ர தந்தத் தினது வலியிற் பிளப்ப தன்றி
உகர முடன் மனித ருளங்கலங்கச்செய் பன்றி (வேடவை)

நாங்கள் விடைபெற்றுக் கொள்ளுகின்றோம். (போதல்.)

துணநிதி—நமக்கு நன்மையுண்டாகுக!—(ஆகாயத்தைச் சுற்றித்திரும்பிப்பார்த்து) நாம் சச்சநதமகாராஜாவால் அநியாயமாக நாட்டைத் துறந்து இவ்விடம வரும்படி நேரிட்டகாலமுதல் இன்றைத் தினத்தைப்போலும் மனக்களிப்பைத்தரும் நாள் ஒன்றையாயினுங் கண்டோயில்லை! ஆ! ஆ! நமது பலவகைச் சிறபபமைந்த நகரததை விட்டு, மலைகளடாந்த இக்காட்டில் தனியே குகையில், குருவிக் கூண்டிற சஞ்சரிபபதுபோற சஞ்சரித்துக்கொண்டு, அறுசுவைப் பதார்த்தங்களோடுண்டு, திவ்யமான வஸ்திரங்களைத்தரிதது, செம் பஞ்சணையிற் றுயின்றநாம், ஐவன அரிசியையும் தினைமாவையும் புசிதது, சுனைநீரைக்குடிதது, வேடரைப்போற் பரண்மேற்றுயில் கின்றோமே, என்று எண்ணி எண்ணிவிதியை நொந்து வருந்தியிருந்தது அறிவினமையெனறு இன்றன்றோ கண்டறிநதேன். இனி இவ்வெண்ணங்கள் எல்லாம் என்னைவிட்டகலு மென்பதற்கையமுமுண்டோ! எனமனம் எப்படி இம்மலைகளால் வசீகரிக்கப்பட்டது! ஆ! ஆ! யான் இதுவரையிலும், உயர்ந்த துயர்ந்ததென்றெண்ணியிருநதேனே, அபபேர்ப்பட்ட நகரத்தில் வசிக்கும்போதும் இன்று அடைநததுபோலுமமனக்களிப்பை என்றாவது அடைந்ததுண்டா! இங்கு நுகருந் தேனும் தினைமாவும் சுனைநீரும், பாயசம் பச்சடியோடருநது முணவினும் எத்தனை மடங்குமேலானதென் றறிந்தேன!—நான்குபக்கங்களிலும் உன்னதமான மலைகள்பொருந்த அவையிற்றின இடைவெளியில் சூரியன் பிரகாசிப்பதும், நமது குகைக்கு எதிரில் இருக்கும் பள்ளததாக்கில் தேங்கிநின்ற ஜலத்தில் தோன்றும அவனது பிரதிபிம்பமும் என்ன மனப்பூரிப்பையுண்டாககுகின்றது! ஆகாயம் யாதொரு மாசுமில்லாமறறென்ற, கருநிறங்கொண்ட மலைகளிற்பொருந்திய மரங்களெல்லாம் மழையாற குளிாநது ஒரேபசசையாய் நீர்த்துளிகளைததுளிதது, வரிசைவரிசையாய் அடர்நத கொடிகளோடிணைய, சூரியனிவற்றின்மேற றுலங்குவதும், தாழ்வாரங்களெல்லாம் சிறுசெடிகள் நெருங்கவிருப்பதும காணத்தகதே!—சுனைகளினின்று நீர் பெருகுவதாலாகிய வோசையினது எதிரொலி இடியோசையினும் பதின்மடங்கதிகமே! மலையினின்றும மாலைபோ லிழிந்துவரு மிக்கான்யாற்றில், பாறைகள்மேற்பட்டு நுரையெழச்சிதறித்துளித்துவரும் ஜலப்பெருக்கும் சிறிது காலததிறகுறைந்து, கணைக்கால் அளவாகவோடி, வெணமையாகிய பெருமணற் சிறுகுவைகளைததோற்றுவிதது, சிறுகூழாங் கற்களையுருட்டிச்செல்வதும், இருமருங்கும் வெளிநிலங்களினின

ந்தஜலம், அவ்யாற்றின் கரைகளைச் சிறுகால்வாய்க ளாகவி யிருப்பதும் எவ்வளவுமனத்தைப் பரவசப்படுத்துகின்றது! மழை யைக்கண்டு மகிழ்ந்த மயில்கள் இன்று ஒடுங்கி ஒருபுறமாய்ச்செல் வதும் கிளிகள்பறந்துலாவுவதும் வெகுவிநோதமே! இலைகள் தளிர்த்த கிளைகளடர்ந்ததேக்கு வேங்கை சந்தன அகில் மரங்கள் திவ்யபரிமளத்தை நிரப்புவதும், அவைகளே தமக்குற்ற துணை யெனநம்பி மிகவுல்லாசமாக மந்திகள் கடுவனோடு ஊடிக்கூடிஊச லாடுவதும் என்கண்ணைப்பறிக்கின்றது! உலகில் உயிர்கள் பெற்ற வர்களை விடத்தம்மை வளர்ப்பவர்களிடத்திலும் தாமுறையுமிடத் திலும் இயற்கையாய் அன்புபாராட்டுவதும் வழக்கமோ? ஆம். இஃதென்னை? நாமே அதற்கிலக்கியமாயிருக்க, இக்குரங்குகள் தாமு றையுமரங்களைத் தமதுதந்தை தாய்போலுங் கருதிமேலேறித் தழு விக்குதித்து விளையாடுவதை யறிந்தேனில்லை! நாம் ஒருபிரபுவாயி ருந்தும், சச்சந்தன் எனக்குத் தீங்கிழைத்ததற்கவனை யென்னைப் போலுந் துக்கமநுபவிக்கும்படி, அவனது ஆண்மக்களிருவரையுங் கவர்ந்துவர, அவர்களும் என்னைத்தந்தையென்றே கருதி என்னி டம் அன்புபாராட்டவில்லையோ! இஃது உலகியல்பே போலும்! நாழிகையுமாய்விட்டது. தினைப்புனத்தைப்பார்த்துத் திரும்புவதற் குட்சென்ற ராஜகுமாரர்களும் வந்துவிடுவார்கள்! இன்று பிருதி யும் மனக்களிப்போடிருப்பதன்றி வலதுதோளும் துடிப்பதனால் ஏதோ நன்மையடைய ஏது உண்டெனத்தோன்றுகிறது! ஆனால் எனது சிற்றறிவிற்கு ஒன்றும் புலப்படவில்லையே! ஈசுரசங்கற்பம் எவ்வண்ணமோ? அறிவோம். (போதல்.)

---

## நான்காங்களம்.

இடம்:—திருவக்கரைக்குச செலலும்வழி. காலம்:—முற்பகல.

நடர்:—சுதுணன், சரசாங்கி.

[சரசாங்கி ஆண்வேடம் பூண்டுவருதல்.]

சரசாங்கி:—சுகுணரே! சற்றுநில்லும்! ஐயோ! இதென்ன என்வலக் கண் துடிக்கின்றது! வயிறெரிகின்றது! என்மெய்யுமனமும் நடுங் குகின்றனவே! இவையெல்லாம் துர்க்குறிகளே! இவையென்ன தீமையை விளைக்குமோ? தெய்வமே! என்பிராணநாதருக்கு யா தொரு தீங்கும் நேரிடாவண்ணம் காவாயோ! ஐயோ!—

சுதுணன்:—ஒன்றும் அவருக்கில்லை. அம்மணீ!

சரசாங்கி:—சுகுணரே! இன்னும் திருவக்கரையையடையவில்லையோ? இன் னும் எத்தனை நாழிகைப்பொழுதிற் சென்றுசேரலாம்? மிகச்சமீப

மென்றீரே! சுகுணரே! என்ன உமதுகண்கள் நீருகுக்கின்றனவே! பெருமூச்சுவிடுகின்றீரே! உமது நாசீரின்றித தழுதழுககினறதே! பேசும்படி நினைத்தும் பேசமுடியவில்லையே! முகம் வெளுததிருக்கின்றீரே! என்வேண்டுகோளுக் கிரங்கி யுண்மை யுரையீரோ? ஐயா! சுகுணரே!

சுதனன்:—ஈதோ ஒருகடிதம்! விஷயத்தைச் சொல்லவும் நாவெழவில்லையே! (கடிதங்கொடுக்கின்றான.)

சரசாங்கி:—இதென்ன எனது பிராணநாதர் கையெழுத்திருக்கின்றதே!—

(கடிதம் வாசித்துத்திகைத்து நிற்கின்றாள்.)

சுதனன்:—(தனக்குள்) ஐயோ! இக்கடிதங்கண்டதும் பாதியுயிரிழந்தனளே! இன்னும் வாளால வீசிக்கொல்வதோ?—யான் ஜானகியைக காட்டில் விடும்படிசென்ற இலக்குவனே யாயினேனே!

சரசாங்கி:—யானோ கற்பிறநவறினவள்? ஈசா! நீயறிவாய்! பெண்ணாய்ப்பிறந்தவர்களில் யான்படும் பெருந்துயர மநுபவிப்பவர்களுமுளரோ?—

சுதனன் —ஐயோ!—

சரசாங்கி:— (பாடுதல்.)

"கைகேசி மனந்திரியக் கறபித்த கூனியைபபோன்
மையாாகண் மடவாரோ மைந்தரோ மண்ணுலகி
லையாவென் காதலனை யாரோவிக் காரியததைச
செய்வாயென் றிபபொழுது சிந்தையுறக் கற்பித்தார்."

சுதனன் —அம்மா! இவையெல்லாம் ஊழ்வலி!—

சரசாங்கி.—ஐயா! சுகுணரே! நீரென்னசெய்வீர்!—என்னை உலகமெல்லாம வெறுத்திருப்பதன்றி என்னைக் கைப்பிடித்த கணவனும் வெறுக்கவும் விதிநேர்ந்தது! நீர் இனிச்சற்றுந்தாமதியாது நமது நணபர்கட்டளையை நிறைவேற்றும்படி நுமது வாளைக் கையிலெடும்! யானும் அவரெண்ணப்படி நடக்கவேண்டுவதுதான்! யானுந் தலைகுனிந்தேன்! இனித்தாமதிக்கவொண்ணாது! சுகுணரே! எடும் ஐயா உமதுவாளை! என்வேண்டுகோளுக் கிரங்கினீராயின் உமககுக் கோடிபுண்ணியமுண்டு.

சுதனன்:—அம்மணி! தம்மையோ என்வாளாற் கொல்வது? பதினான்குலகமும் அச்செய்கையால் வருமெனினும் அத்தொழில்புரிய மனவொற்றுமைப்படேன்!

**சரசாங்கி:**—சுகுணரே! யான் அவரெண்ணப்படி நடக்கச் சித்தமாயிருப்பினும் தற்கொலைபுரிய மனமெழவில்லை! உமது நண்பர் விருப்பத்தைநிறைவேற்றவும், எனதுவேண்டு கோளுக்கிரங்குந் தன்மையைக் காட்டும்படியாகவும் உமதுவாளை எடும்! யானே கேட்டுக்கொள்ளுகின்றேனே! உமக்குக்கெடுதி யிதனாலொன்றும்வராது!—

**சுகுணன்:**—அம்மா! நீங்கள் பதினாயிரமுகத்தா னுரைத்தபோதினும் யானதற்குடன்படவே மாட்டேன்! பின் ஏன் தங்களை இவ்விடத்திற்கழைத்துவந்தேனென்று கேட்பீர்களாயின், என நண்பர், தாங்கள் அரண்மனையிலில்லாதிருப்பதைக் கேட்டனராகில், யான் அவர்கட்டளையைநிறைவேற்றினேனென்று நினைக்கும்படியாகவும் ஒருகாலத்தில் தாம் செய்தசெய்கையைக்குறித்து அவர் வருந்தும்போது அவரிடந்தங்களை யொப்புவிக்கும் பொருட்டும செய்தனனேயன்றி வேறன்று.

**சரசாங்கி:**—சுகுணரே! இந்த அற்பவிஷயத்திற்காகவா பொய்கூறவேண்டும்? அரிச்சந்திரன் ஒருபொய்க்கு அஞ்சித்தனது மனைவியைவிற்றதன்றி அவளையும் கொல்லும்படி துணியவில்லையோ? யானிருந்தெனன? இறந்தென்ன? இந்தத்தேகம் யாருக்குரியதோ அவரேவெறுக்கும்போது நீர்ஏன் என்னாற்பொய் கூறவேண்டும்? தாமதப்படாமல் என்னை நுமதுவாளுக்கிரையாக்கிவிடும்! சற்றுத்தயைபுரியும்! ஐயா! உம்மைவணங்கிக் கேட்டுக்கொள்ளுகின்றேன!

**சுகுணன்:**—அம்மா! இது பொய்யாகாது.

> "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்" என்று

தமிழ்வேதம் முறையிடுகின்றது! பொய்கூறினும் மெய்யேயாம்!

**சரசாங்கி.**—ஐயா! நீர்யான்வருந்துவதற்கும் இரக்கமடையாது எனக்குததீங்கிழைக்கின்றீர்!

**சுகுணன்.**—ஐயோ! யானிருதலைக்கொள்ளியிடைத் தெறும்பைப்போல அகப்பட்டுக் கொண்டேனே! ஈசா! அம்மணீ! நுங்காதலா தமது புததியின்மையைக்குறித்து, ஒருகாலதது நும்மை நினைதது வருநதியிறக்கவேண்டிவரும! அப்பொழுது என்னையவரே கோபிக்கவும நேரிடும்! கணவற்குத் தாமிறந்தும் துன்பங் கொடாமலிருப்பது கறபுடைய மாதர்கடனாதலின் யான்கூறுவதைச்சிறிது செவிசாய்த்துக்கேட்க வேண்டும்!

**சரசாங்கி:**—என்ன சொல்கின்றீர்?

**சுகுணன்:**—அவர் தம்மை அதிசீக்கிரத்திலேயே தேடிவருவதற் கிடமிருக்கின்றது! அது கரதலாமலகம்போல் என்னறிவிற்குத தோன்று

கினறதாதலின் தாம் இங்கு என்மாளிகையில் அவனைக்காணும் வரையில் இருந்தருளவேண்டு மென்பதே! இங்கு இருக்குந்தோழி யர் சிலதியர் யாவரும் தம்மீது மிகுதியும அன்புபாராட்டுவார்கள். (அவள்முகஞ் சுளித்தலைநோக்கி) அம்மணீ! சீதை வான்மீக ராசசிரமததிலிருக்க வில்லையோ!

சரசாங்கி.—ஐயா! நீர்கூறுவ துண்மையே! அவள் கணவன் கட்டளைப் படிநடந்தாள்! யான் நடப்பதற்குக் கொடுத்துவைக்கவில்லை! நீர் மனமிரங்கேனென்றீரே! யான் என்செய்வது! யானிங்கிருததல் கூடாது! உமது பெருமைக்குக் குறைவுநேரிடும்.

சுகுணன்:—தாளொன்று நினைக்கத தெய்வமொன்று நினைத்தல்போல என யோசனைகள் வீணாயின. இனித்தங்களைத் தமதரண்மனையிற சேர்த்துவிடுகின்றேன்.—திரும்பிப் போவோமா? அம்மா!

சரசாங்கி.—ஐயா! சுகுணரே! இனி அங்குச்செல்வேனோ? யானோ செல்வது?

(பாடுதல்.)

“ தககககண வன்சிறத் தன்னைக்கை விட்டகன்ற
புககககததார் கைவிடுவா பிறந்தகத்தார் போற்றார்க
ளககணமே பழியிடுவ ரன்னியர்க ளருவினையேன்
மிக்கொரிடங் காண்கிலேன் விதியேயோ விதியேயோ.”

சுகுணன் —அம்மணீ! என்மதியீனத்தால் இவவளவுந் தீங்கிழைத்தேன்! எனசெய்வேன்? என்செய்வேன்? தங்களிஷ்டத்தையாவது தெரிவியுங்கள்!

சரசாங்கி.—நீர் என்னிஷ்டப்படி என்னுடலினின்றும் உயிரைப் பிரித்தீராயின் நீர் எனக்குத் தீங்கிழைத்தவ ராகமாட்டீர்!

சுகுணன்.—அம்மணீ! நீங்கள்சொல்வது என் செவியில் நாராசத்தைக் காய்ச்சி நுழைததது போலிருக்கின்றது! யானென்செய்வேன்? ஐயோ! விதியே!

சரசாங்கி:—சுகுணரே! நீரேன்வருத்தப்படுகின்றீர்! தஞ்சைக்குச் செல்லும் வழியைக் காட்டினீராயின் யான் சென்று என்மணவாளனைக் கண்டு அவர்கையாலிறக்கவோ அன்றியணைக்கவோ!—எதுவாயினுஞ்சரி—யான்போகவேண்டியதே!

சுகுணன்:—அம்மணீ! அதுகாட்டுவழியாயிற்றே! மிருகக்கூட்டங்களும் வேடர்குழாமும் நெருங்கி இம்சைபுரியுமே! ஆதலின்யான் நும்முடன் துணையாய்வருகின்றேனே!

சரசாங்கி:—ஐயா! வேண்டுவதில்லை.

(பாடுதல்.)

" உலகுக்கு நாயகனு யோராழி தனைநடத்தி
மலையொக்கு மதகளிற்றின் மதிக்குடைக்கீழ் வாழ்ந்தநளன்
நிலைகெட்டு நேரிழையை நெடுங்கானத் திடைவிட்டு
மலையொத்த வினைப்பயன்ன் மடையனாய் வருந்தினனே."

நீர் என்னுடன்வரின் நுமதுபேருக்கொரு பெருங்குறைவுண்டாகும்! அன்றி என்தந்தைமுதலியோர் அயிர்ப்பார்கள்! ஆதலின் நீர் சீக்கிரம் போகவேண்டுவதுதான்!

சுகுணன்:—அம்மணீ! இனியென் செய்வது?

" ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்." என்பது

போலாயிற்று! ஆயினும் இவ்வழியாகச்சென்றால் இரண்டுகாததூரத்தில் ஒருமலையிருக்கின்றது. அதற்குத்தென்புறமாகத் திரும்பிப் போகவேண்டும். அப்புறம் பத்துப்பன்னிரண்டு காதமிருக்கின்றது சோழநாடு. பிறகு—

சரசாங்கி:—நீர் காஞ்சிநகரை யடையவேண்டுமே!

சுகுணன்:—ஆம். யான் போகின்றேன்!—அம்மா! இதோ இருக்கின்றதே இந்தமருந்து அமிர்தசஞ்சீவி யென்றுபெயர். இது சுரமுதலிய எந்த வியாதியையும் போக்கவல்லது! தாங்கள்வைத்துக் கொள்ள வேண்டும்.

சரசாங்கி:—அப்படியே!—போய்வருகின்றீரா?

சுகுணன்:—அம்மணீ! நும்மை இங்குத்தனியே விட்டுப்போக மனம்வரவில்லையே! ஐயோ! ஈசா! என்விதியிப்படி யாயிற்றே?

(சுகுணன்போகின்றான்.)

சரசாங்கி:— (பாடுதல்.)

" ஏதமுறு பழியூட்டி யிப்பிறப்பி லெனையொழிய
மாதரையென் மனத்தாலுந் தொடேனென்று வரந்தந்த
காதலனை மனங்கலக்கிக் காட்டிலெனை விடுவித்து
வேதனைநோய் செய்வித்த விதியேயோ விதியேயோ."

யான் இனித்தாமதிக்கலாகாது! அவர்கூறியபடி வழிகண்டுசெல்வேன்.

(போதல்.)

---

## ஐந்தாங்களம்.

இடம்:—சச்சந்தன்அரண்மனையில்ஓர்அறை.காலம்:—பிற்பகல.

நடர்:—சச்சந்தன், கனகாம்புஜம், சிங்காரவல்லி.

சச்சந்தன்:—கனகை! நம்சரசாங்கியை முகுந்தருக்கு மணம்புரிவதாக யோசித்திருக்கிறோமே! அதை அவளுக்குத்தெரிவித்து மனக்களிப புடனிருக்கும்படி செய்யவேண்டுமாதலால் நீசென்றழைத்துவா!

(சிங்காரவல்லிபோதல்.)

கனகாம்புஜம்:—சிங்காரவல்லி சென்றனள்!—சீக்கிரம் அழைத்துவரு வாள! மகாராஜா! தூதுவன எப்பொழுது சென்றனன்?

சச்சந்தன்:—சரசாங்கியைக் கொடுக்க இயலாதென்று கடிதம் எழுதிக் கொடுத்தனுப்பி அநேகநா ளாய்விட்டனவே!

கனகாம்புஜம்:—நல்லது! சரசாங்கிக்கும் சீக்கிரத்தில் விவாகமுடிக்க வேண்டியதுதான்! அவள் காமநோயுற்றுவருந்துவதாகத் தெரிகி றது! மிகவும இளைத்திருக்கின்றாள்!

சச்சந்தன்:—அதனாலன்றோ நாம் இம்மணத்தைப்பற்றி யவளிடங்கூறி னாற் சிறிது தேறியிருப்பாளென்று நினைத்து அழைத்துவருமபடி யாகக் கூறினேன்?

கனகாம்புஜம்:—சர்க்கரை என்றால் ருசிதட்டுமா? ஆசைநோய் நோய்க ளெல்லாவற்றினுஞ் சிறநத கொடியநோய்! அந்நோய் இறந்துபடும படி உள்ளேயே சுட்டுருக்கும் வெநதீயாயிருக்கின்றது! அத்தீ உடம்பாகிய விறகுடனே உயிரிழுக்கச் சுட்டவிடத்தும் யாவற்றி னுஞ் சிறநதபெறறோரிடமுங் கூறாந்தகையினதன்று! இநநோய மணிமந்திர அவிழ்தங்களினால் நீங்குவதில்லை! எநதப் பொருளால விளைந்ததோ அந்தப்பொருளாலேயே அநநோய் நீங்கவேணடும! ஆதலின சரசாங்கிக்கு மிகுவிரைவில் மணம்நிறைவேற்றுவதாவசி யகம்! அப்பாவென்றால் உச்சிகுளிராதாசையினாலே தலையமுநத வேதேய்க்க வேண்டும.

சச்சந்தன்:—கண்மணி! உன்சொல்லைத்தவறி நடப்பேனோ? உன்னிஷ் டப்படியே அதிசீக்கிரத்தில் விவாகமுடித்து விடுவோம்!

(சிங்காரவல்லிவருதல்.)

சிங்காரவல்லி:—அம்மணீ! யான் எங்குந்தேடியும் தங்கள் குமாரத்தி யைக் காணோமே!

கனகாம்புஜம்:—இந்துவதனை எங்கே?

சிங்காரவல்லி:—இதோவருகின்றாள்! (இந்துவதனைவருதல்.)

**கனகாமபுஜம்:**—இந்துவதனே! சரசாங்கி எங்கே? நினக்குத்தெரியுமே!

**இந்துவதனே:**—அம்மணீ!—அம்மணீ!—

**சச்சந்தன்:**—இந்துவதனே! என்ன துக்கப்படுகின்றாய்? சொல்சீக்கிரம்!

**இந்துவதனே:**—மகாராஜா! வைகறைமுதல் எவ்விடத்துந்தேடியும்—காணேமே! யாதொன்றுந தெரியவில்லையே! ஐயோ!

**கனகாம்புஜம்:**—என்ன நீலிவேஷம் போடுகின்றாள்!

**சச்சந்தன்.**—இந்துவதனே! என்பின்வா.

(சச்சந்தனும் இந்துவதனேயும்போதல்.)

**சிங்காரவல்லி:**—அம்மா! மகாராஜா அதிகோபமாய்ப் போகினுரே! நீங்கள சென்று தேறுதல்சொல்லலாகாதோ?

**கனகாம்புஜம்:**—நான் இதோசெல்வேன். நீ சுகுணன் ஊரிலிருக்கின்றானவென்று தெரிந்துவா.—(சிங்காரவல்லிபோதல்.) எப்படியாயினும நமதுகாரியம் ஜெயமே! அழகானந்தனை நினைத்தோடிப்போய் விட்டாள் போலிருக்கிறது! சென்றவள் திரும்பிவாராதிருந்தால மிகவும் நல்லது! ராஜ்ஜியம் நம்வசமாகவேண்டியதொன்று! கல்யாணத்தைப்பற்றி நமக்கென்ன? ஆடு நனைகிறதென்று ஓநாய்வருந்துமோ! நான புருஷனே காமநோயால் அவளைநினைந்து வருந்துவதற்கு? என்காரிய முடிப்பதற்குத் தம்பிகாரணம்! இனி இவனது தயவுதான் எதற்கு? நம்மெண்ண நிறைவேறியது!

(பாடுதல்.)

இராகம் - அடாணு. தாளம் - ஆதி.

**பல்லவி.**

எண்ணம் நிறைவேறியதே
யினியான் கொண்ட (எண்)

**அநுபல்லவி.**

பண்ணும் யோசனை வேறிலை
யினி யான் கொண்ட (எண்)

**சரணங்கள்.**

இட்டப்படி யென்கைக்குட் பட்டுக்கொண் டான்மன்ன
னட்டி யேதுமே கிடையா தினியான் கொண்ட (எண்)

மனக்குறை நீங்கிட மயங்கினேன் கோனே
யெனக்கு நிகரெவரோ வினியான் கொண்ட (என்)

துன்பமெல லாங்கெடத் தொல்லுலகின் மேம்பட
வின்பமுட னேவாழ்ந்திட வினியான் கொண்ட (என்)

(முகுந்தன்வருதல்.)

முகுந்தன்:—சரசாங்கி ஓடிப்போய் விட்டாளாமே!

கனகாம்புஜம்:—ஆம். (ஏமவதிவர) ஏமவதி! என்ன?

ஏமவதி:—அம்மா! சரசாங்கியைத்தேடிச் சுகுணர்வந்திருக்கின்றார்! அவா களை எங்குந்தேடியுங் காணாது இங்குவந்தேன்.

கனகாம்புஜம்:—நீசென்று இங்கிருக்கின்றாளென்று சொல்லி அவனை யனுப்பு. (ஏமவதிபோதல்.)

முகுந்தன்:—அக்காள்! அவளெங்கே போயிருப்பாள்?

கனகாம்புஜம்:—சுகுணன் வருவான். அவனைக்கேள்! அவன் சொல்வானா! ஒருவேளை அவனுக்குத் தெரிந்திருக்கும். தம்பி! மகாராஜா கோப மாயிருக்கிறார்! அவரைச் சமாதானப்படுத்தப் போகின்றேன்! நீ இங்கேயேயிரு. (கனகாம்புஜம்போதல்.)

முகுந்தன்.—அழகானந்தனை நினைத்து என்னை மறந்து ஓடிப்போய்விட்டா ளோ? என்னை அவனகாறசெருப்பு எனறாளே! அவர்களைப் பின் தொடர்ந்து இருவரையும் குத்திக்கொன்று விடுவேன! இதோபோ கின்றேன்!—(சுகுணன்வர) பயலே! சரசாங்கி எங்கே? உண்மை யைச்சொல்! வாளாற குத்திவிடுவேன்!

சுகுணன்:—ஐயா! எனக்கொன்றுந் தெரியாதே!

முகுந்தன்:—நிசத்தைச் சொல்லுகின்றாயா? இல்லையா? பயலே! குடலைப் பிடுங்கிவிடுவேன.

சுகுணன்:—இதோ இருக்கிறது ஒருகடிதம்! வேறொன்றும எனக்குத் தெரியாது!

முகுந்தன்.—(படிக்கின்றான்) திருவக்கரைக்கு வரவில்லையென்று எழுதி யிருக்கின்றான்! அழகானந்தன் கையெழுத்தன்றோ இது? திருவக் கரை எங்கிருக்கின்றது? அங்குத்தான் அவளசென்றாள். நிச்ச யம்! என்பினவா பயலே! (சுகுணனும் முகுந்தனும்போதல்.)

---

## ஆறுங்களம்.

இடம்:--காட்டிற்குகையுங்குகைக்கடுத்தவிடமும்.காலம:--மாலே.

நடி:—சரசாங்கி.

சரசாங்கி:—யானே ஒரு ராஜகுமாரத்தி! யான்பிறந்த சிலவருடங்களில் என் அன்னையிறநதாள்! பிறவாமுன்னரே தமையன்மா ரிருவரையும் பூதந் தூக்கிப் போயிற்றும்! சிற்றன்னை என்மேற் பிரீதியிலள்! ஆதலின் எனதன்பிற் குரிய தந்தையும் என்னைவெறுத்தார்! எனது புருடருங்கசந்தார். யாரெனக்குத்துணை? தெய்வமே! திக்கற்ற இக்கானகத்தில், இரண்டுதினமாக ஆகாரமுதலியவுமின்றி பசுமபுற்றரையே பஞ்சணையாகத்துயின்று திரிகினற எனக்கு நீ யன்றோ துணை? உடன்பிறப்பில்லாஉடம்பு பாழெனபதுபோற் கொழுநன வெறுத்த குலமகளிரும் பாழோ? அந்தோ! யானேஇவற்றிற்கெல்லாம் ஆளாகி வருந்துகின்றேனே! இப்பொழுதுதான் சுகுணா கூறிய அடையாளப்படி மலேச்சாரலேயடைந்தேன். இன்னும் வெகுதூரம் நடந்துபோகவேண்டுமே! ஈசா! அருள்செய்வாய!

(பாடுதல்.)

இராகம் - எதுகுலகாம்போதி. தாளம் - அடதாளசாப்பு.

பல்லவி.

அருள்வாய் பரனே
அபயஞ் சங் கரனே.

அநுபல்லவி.

இருளார் வனந்தனி லேகமாய்ப் போகின்றேன்
ஏதும் வகையறியா திடரினி லாழகின்றேன்(அருள்)

சரணங்கள்.

கலலு முள்ளு களுமென் காலுருவத் தைத்தே
அலலறபட முறையோ அன்பெண்மேல் வைத்தே(அருள்)

கரடி புலி யானே காட்டில்வாழ விலங் கினம்
அரற்றி முன் னேடுமே அஞ்சுகின் றதே மனம(அருள்)

கண்ணுரக் காண்பதெக் காலமென் போதனே
எண்ணம் பலித்தென்று சேர்வேனென் றுதனே(அருள்)

இங்குவேடர்வில்லியரது குடிசையாயினு மொன்றிராதா? கிருபாமூர்த்தி! தீனதயாளுவே! ஆநந்தசுந்தரா!

(பாடுதல்.)

இராகம - செஞ்சுருட்டி. தாளம் - ரூபகம்.

**கண்ணிகள்.**

ஆநந்தசுந் - தரநடேசா - ஆபத்பாந்தவா (ஆநந்த)
ஞானரூபா - நமசிவாயா - நாகபூஷணு (ஆநந்த)
காலகாலா - காமதகனு - கஜசர்மாம்பரா (ஆநந்த)
பகதவத்ஸலா - பாபநாசா - பார்வதிபாகா (ஆநந்த)
தேஜோமயா - சித்பிரகாசா - சிவசிதம்பரா (ஆநந்த)
கருணுகரா - கமலபாதா - கானவிநோதா (ஆநந்த)
தீனரக்ஷகா-தேவதேவா-திருவருள்செய்வாய் (ஆநந்த)

இதோவோர் ஒற்றையடிப்பாதையிருக்கின்றதே! இந்நேரம் என்க ணுக்குப்புலப்படவில்லையே! இஃது எங்கேயாவதுகொண்டுபோ யவிடுமென்பதற்குச் சந்தேகமேயில்லை! அங்குச்சற்று நேரந்தங்கித் தாகசாந்தி செய்துகொண்டு இளைப்பாறிப் பின்புவழிநடப்போம! ஒருவேளை இக்காட்டிற சஞ்சரிப்பவர்கள் கொல்வார்களோ? எப் படியிருப்பினும் நன்றே!—(நடந்து ஒருகுகையினருகிற் போகின ருள.) ஐயா! வீட்டில்யார்? வழிதப்பிவந்த வழிப்போக்கனுக்குக சதவுதிறந்து கொஞ்சம மோராவது கொடுப்பீரோ? ஐயா! அம் மா! யாருமில்லையோ? பதிலொன்றையுங் காணுமே! கதவை ததட்டியாவது பார்பபேன்.—(கதவைத்தட்டஅதுதானேதிறததலி ஞல் உள்ளே போய்விடுகின்ருள்.) (குணநிதிவிக்கிரமன் வீரசேனன்தனிததனி வெவ்வேறிடங்களினின்றும் வருதல்.)

குணநிதி.—நீங்கள் இனறு வேட்டையாடியதில் காடை கவுதாரியும் அகப போலும்!

விக்கிரமன்—நாங்களிருவரும் ஒருமானைத்துரத்திச் சென்று மிகவுமயா நதோம! பசிகளை வருத்த வாரம்பிததது! ஆதலாற கண்ணியிற பட்சிகளையும் படுக்காது திரும்பினோம்.

குணநிதி.—தினையாவதிருக்கின்றதா?

வீரசேனன்:—தினையாய்விட்டதே! மூங்கிலரிசியும் மலைவாழையுமிருக்கி னறன!

குணநிதி.—இன்று காலையான்கொண்டுவந்து வைததிருககினற வளளிகக ழங்கும்பலாப்பழமுமிருக்கின்றன! ஆதலால் ஒன்றுங்குறைவில்லை! நீங்கள் மரையாவினபாலை உலையாகவைத்து அதில் மூங்கிலரிசி யைப் பெய்து சிறிதுதேனூற்றிப் பொங்கியிறக்குங்கள்! வள்ளிக்

கிழங்கைச் சுட்டுப் பலாப்பழத்தோடுண்டு இன்றுபொழுது போக்குவோம் !

**விக்கிரமன்**:—இதனோடு குறிஞ்சிப்பழமும இருக்கின்றதே !

**துணநிதி**.—ஆம் ! மறந்துவிட்டேன் ! இதென்ன நமது குகைக்கதவு திறந்திருக்கின்றதே!—(உள்ளேபோய்ப் பார்த்து) இமமலையிற் றங்கும் கன்னித்தேவதையோ வீது !—நம்மாகாரததைப் புசிக்கின்றதே !

**வீரசேனன்**:—என்ன ? என்ன ?

**துணநிதி**:—தேவதைதான் ? தேவதைதான் ! ஆண்வேடங் கொண்டு வநதது !

(சரசாங்கி குகையினின்றும் வருதல்.)

**சரசாங்கி**:—ஐயா ! உங்களைப்பார்த்தால் இரக்கமுடையவர்களாகத் தோன்றுகிறது ! நீங்கள்என்னை மன்னிதது க் கிருபைபுரியவேண்டும்! எனக்குயாதொரு தீங்கும்புரியீர்கள் ! இங்குக்கதவை வெகுநேரந்தட்டிப்பார்த்தேன். பிறகு பசியால் காதடைத்துக் களைத திருந்தேனுதலால் ஜலமாவது இருக்கலாமென்று நினைத்து உளளேநுழையப் பாலும்பழமும் இருந்தமைகண்டு அதிற்கொஞ்சம அருந்தினேன்! திருட்டெண்ணததோடு வந்தேனல்லேன்! இங்குக் கோடிகோடியாய்க் குவிதததிரவியங்கண்டாலும் அதில் ஒரு காசுந் தொட்டிரேன். இப்பொழுது உங்களைக்கண்டது பெருநதிருப்தியாயிற்று ! இதோ பணமிருக்கின்றது. எடுததுக்கொள்ளுஙகள் ! உங்களைப்பார்க்காவிடில் இதற்கு கிரயம் இங்கேயே வைததுவிட்டு உங்களைப் பிரார்த்தித்துயான் சென்றிருப்பேன் ! நல்லவேளையில் வந்தீர்களே ?—

**துணநிதி**:—அப்பா பணமா கொடுக்கபபோகினுய் ?

**விக்கிரமன்**:—உன் பணம் யாருக்கு வேண்டும் ? பணததைக் குப்பையிற் சொரி !

**சரசாங்கி**:—ஐயா ! நீங்கள் கோபமாயிருக்கின்றீர்கள் ! எனது குறறததிற்கு என்னைக் கொல்லத்துணிந்தீராயினும பசியாலிறப்பதை விட உங்கள் கையா லிறப்பது மேலென்று கருதிச் சநதோஷமடைவேன் !

**துணநிதி**:—அப்பா ! எங்கேபோகின்ருய் ?

**சரசாங்கி**:—ஐயா ! தஞ்சைக்கு ?

**துணநிதி**:—உன்பெயரென்ன ? ஏன்குப்போகவேண்டும் ?

சரசாங்கி:—என்பெயர் சுந்தரன! எனதன்பரொருவரைத் தேடிச்சென்ற நான்வழிதப்பி இங்குவந்து சேர்ந்தேன்!

துணநிதி:—அப்பா! நீ நாங்கள் இம்மலைச்சாரலிலிருப்பதனால் வெவ்வேறு விதமாக நினைக்கின்றாய்! நீ பயப்படவேண்டியதில்லை? இப்பொழுது அந்திப்பொழுதாயிற்று! நீசொல்லாதபோதிலும் நின்முகம் நீ மிகவும் நடந்து வாடிக்களைத்திருப்பதாய்க் கூறுகின்றது! ஆகலால் நீ இங்குத் தங்கிப் பின் போகலாம்.

விக்கிரமன்:—தம்பி! சொல்வதைக்கேள்!

வீரசேனன்:—நீ இங்கேயே எங்களுக்குவிருந்தினனாய் இரு! நீபயப்படவேண்டியதில்லை! எனதம்பியைப்போலவே உன்னைநினைதேன! நீ என்னருமைத்தோழனாய்!

சரசாங்கி:—உங்களுக்கு மிகவும் வருத்தத்தைக்கொடுதேன்.—

(மூவருந்தனித்துப்பேசுகின்றார்கள்.)

(தனக்குள்) இவர்கள் உடன்பிறப்புப்போல் என்னிடம் பட்சமாயிருக்கின்றாகளே! ஒருவேளை எனது தமையன்மார்களோ? அவாகளேயானால் எனைப்போல் பாககியசாலி இவ்வுலகத்திலுண்டோ!

துணநிதி:—இவன் பெருங்குடியிற் பிறந்தவனெனத் தோன்றுகின்றது! (உற்றுப்பார்த்து) முகம் வருத்தக் குறியைக்காட்டுகின்றது!

இருவரும்:—ஆம்! ஆம்!!

துணநிதி:—இதையும் செவிசாய்த்துக்கேளுங்கள்!

(இரகசியமாய்மூவரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.)

சரசாங்கி:—இவர்கள் பெரியமனுஷர்கள். இவர்களை நம்பலாம. இங்கு இன்று வரும்போது வாயசம்வலமாயிற்று! ஏதோ நன்மை யுண்டென்று நினைதேன்! நல்லவேளையாய் ஆண்வேடந் தரிததுவந்தோமே! நல்லது? இவர்களே அண்ணன்மாரென நினைதது இரண்டு மூன்றுநாள் இங்கிருப்பேன்!

துணநிதி:—அதேசரி! நாம் போஜனஞ் செய்யச் செல்வோம். அப்பா! (சரசாங்கியைப்பார்த்து) நீயும்வா! நாழிகையாகினறது.

இருவரும்:—இதோவருகின்றோம!

சரசாங்கி:—யானும்வருகின்றேன்! (யாவரும்போதல்.)

---

## ஏழாங்களம்.

இடம்:—தஞ்சையிலொருபிரமதவனம். காலம்:—மாலை.

நடன்:—சந்திரசேகரன்.

சந்திரசேகரன்:—நுன்மதி கூறிய தோகையை மணந்தே
யின்புற் றிருப்ப தென்றுகொல்? அறியேன்!
மதியோ விரவியின் வருத்தும். அன்றியென்
மதியைக் கலக்கி மத்துறு தயிரிற்
சிதறுறச் செய்தனன் மதனனுங் கொடியன!
இத்தனை தன்னில நித்திரை யில்லேன்.
எள்ளின் நாசியாள் வள்ளைச் செவியாள்
கோங்கத் தனத்தாள் மூங்கிற் றோளாள்
இந்துவைப் பழித்த சுந்தர முகத்தாள்
சந்தங் குலவு மந்தகா சத்தாள்
சங்க மென்னு மங்கல மிடற்றாள்
சலசலோ சனத்தாள் சரசாங்கி யென்றனன்.
பலவிதத் தவளைப் பற்றிய தென்னுளம்.
அவளை நினைத்தலி லமர்ந்ததென் மனமும.
அவள்பெய ருரைத்தலி லமர்ந்ததென் நாவும.
மாலையும் வந்தது, வருத்தமு மிகுந்தது;
சோலைக் குயிலும் சாலக் கூவுமே!
என்றவ ளுடனே நன்று குலாவி
இன்பந் தழைக்கத துன்பொழிந திருபபது?
வெய்யிலி லுருகும் வெண்ணெயப் பாவைபோற
பைய வுருகிப் பதைப்பேன். அந்தோ!—
காமக் கோடைக் கனலின்வருந் தாது

"கொங்கையிள நீராற் குளிர்ந்தவிளநு சொறகருமபாற
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின்—மஙகைநறுங
கொய்தாம வாசக் குழல்நிழற்கீ ழாறேனோ
வெய்தாமக் காம விடாய்."—

சென்ற தூதனோ இன்னும்வந் திலனே.
இன்று வருவான். ஏழை வரானேற்
கொன்று விடுவேன். தென்றல வீசிடத்
தியங்குகின் றேன்மனம். ஐயோ!—

(உருவெளித்தோற்றங்கண்டு) இதுவென்!
கோங்கந் தாமரை குவளைசெங் குமுதம்
வீங்கு குமிழ வீயொடு மலர்ந்த
வல்லிக் கொடியொன் றுலகி யொல்கி
அந்தி மாலையின் வந்தென் முன்னர்த்
தோன்றிக் கண்களைத் தூயமென் மனத்தைக்
கொள்ளைகொண் டென்னை யெள்ளி நிற்கின்ற
அதிசய மென்னே! விதிவச மிதுவோ!
இத்தனை யழகுகொ ளுத்தமி தன்னையான்
எத்திசை தன்னிலும் என்றுங் கண்டிலேன்!
கற்பனை நுண்மதி நவின்றபெண் ணணங்கின்
வண்மை யாவும் வாய்ந்திருக் கின்றனள்!—
(உருவெளித்தோற்றத்தை முன்னிலைப்படுத்தி)
சரசாங் கிபெயாத் தளிரியல் நீயோ?
அருகின் வந்தெனக் கருள்வாய் பெண்ணே.
கண்ணே! யுயிரே! கற்பகக் கொடியே!
வண்ணக் கிளியே! மயங்குமுத் தாரமே!
ஆருயி மருந்தே! அமுதசஞ் சீவியே!
சிறுமை யொன்றென் செவிக்கமு தென்ன
வாய்திறந் துரைத்தல் வாய்க்குமோ? வழுத்தாய்.
சித்தசன் கொண்டெயுந் திகழிரு குவளைநீ
வைத்திருந் தென்னை வருத்துகின் றுயமிக.
அளிசுமந் திருப்பீர்! அளியெனப் தமிகிலீர்!
கொடியரே! எனக்குக் கொடுமைசெய் கின்றீர்!
இறந்து படுவேன் ஏந்திழை யீரே!
மறந்துந் துன்பங் கொடாரே மதியுளார்
கலைமதி யழிக்கக் கலையொன் றுடுத்தீர்!
முலைகோ முறுவலீர்! முலைச்சாந்து வேண்டும்.
இதழிக் கூந்தலீர்! இதழமிழ்து வேண்டும்.
பதைத்துக் காமன் பகழியாற் களைத்தேன்!
கொடாவிடிற் கெடுவேன் கொடும்புரு வத்தீர்!
நாண்கொண் டான்மதன் நாணிறுங் கொல்லோ?
இரக்கமில் லீரே! இரக்கமில் லீரே!
நம்பிவரு கின்றேன். வமைபக் கிழிப்பீர்.
(அவ்வுருவருகிற்சென்றுதன்பாதங்களினவீழ்ந்து)

உம்மிடத் தாசையால் உருகுகின் றேன்மிக.

(அவ்வுருவம் அருளாமைகண்டு)

பெண்மைக் குணமிலீர்! பெருந்தகை யீரே!

(அவ்வுருவை யணைத்துப்பிடிக்கமுயறல.)

முத்தமொன் றளித்து முயங்கி டீரே!

(அவ்வுருவம் பரிசப்படாமல்மறைந்ததுகண்டு)

உருவெளித் தோற்றமென் றோர்கிலேன்! அந்தோ'
சிறியேன் ஆயினேன் சித்தசன றன்னால.—

மதனே நினதாண் மைவழுத் துவனே
விதமே யறியா தெதிராப பொருவாய
வதையே புரிவாய் வனமே புகுவாய்
கதமே தெரிவாய் கருதா யெதுவும்.

சன்மனத்தைக் கரைதுருக்கிக் கல்லினுமே நாருரித்து
மன்மதநின் மலரம்பான் மாயன்மகன் யானென்பாய [ரு
தன்மமற முறைபிறழ்ந்து தனிநெடுமபோர்க் கிழுக்குமொ
துன்மதிசூ தன்மகனுய்ச சூதனையும் வெலவாயே.

கரும்பணியா லென்றென்று முடலவருந்தி
வெய்துயிர்க்குங் கதிர்வெண் டிஙகாள்
கருமபனைய மொழிநலலா ளிடத்தமையு
நண்பனினுற் கடிய லுறறேன்
விரும்பணியாா பரும்பணியை யுறுபபொன்றிற
குவமைபெற மேவி னுரென்
றரும்பணியா பரணனடி சாராதார்ச
சாாந்தவர்க ளடைதல போன்றே.

வெம்புலியா யுயிர்குடித்து மிகவருத்து முனையென்று
மம்புலிமா னென்றவனி யழைத்திடுதன் மஙகலமே
செமபதனிற் களிம்பெனநின் றேகமெலாங் களங்கமுற
வமபடிகத் தவள்போலு நிறத்தினனென் றறைவதெனே.

மங்கையினன் முகத்தினுக்கே யிளைத்ததனுற்
கறுத்தென்னை வருத்து கின்ற
யிங்கதனை யறிந்தனன்யான் கூறுமுப
தேசங்கேட் டிணங்கி வாழ்வாய

பொங்கு † மழுக் காறுடையா ரெனுங்குறளை
மனத்திருததிப் பொறாமை நீங்கின்
மங்களமா யென்றுமொரே படியிருத்தி
குறைவடையாய மதிவெண் டிங்காள்.—

பொழிலுறு சிறுகுயிலே புன்னையி னுண்மலரோ
யழகுறு கலைமதியே யணைதுயில வண்டினமே
பழுதறு கிளிமொழியே பணிசெறி சிறுநுதலே
யெழிலுறு சிறறிடையே யெனையிடர் செய்தவையே.

இதழ்விரி நறைமலரே யெழிலுறு மென்பிணையே
புதைபடு மளியினமே புருவமென் வில்லிணையே
பதையிறு கொடியிடையே பகாமலை நிகாதனமே
இதழமிளிர் முலைமுகையே யெனையிடர் செயதவையே.

பணைவளர் பைஙகிளியே பலவகை மலரினமே
யணைவளர் மென்மயிலே யணிபெறு செங்கரமே
கணைமதன் புருவவிலே கதமெறி பொறபணியே
யிணையுகள் கயல்விழியே யெனையிடர் செய்தவையே.—

(சேவகன வருதல.)

சேவகன் —மகாராஜா அவர்களுக்கு அடியேன் சேவகன்வந்தனம. காரு
சீபுரததிறகுச்சென்ற தூதுவர் வந்துசேர்ந்தார்.

சந்திரசேகரன்:—சீக்கிரம் வரச்சொல். தாமதியாதே.

(சேவகன்போதல்; தூதன்வருதல்.)

தூதன்.— மங்கலம் மங்கலம் மஙகல முனக்கே
செஙகதி ரோன்குலரு செழிக்க வநதோய!
மஙகலம மஙகலம் மஙகல முனக்கே.

சந்திரசேகரன்:—இன்று வந்தனை. நன்று! பிழைத்தாய!
காரிய மென்ன காயோ பழமோ?
விளைவிற் கூறுதி. வீணே நின்று
தாமதஞ் செய்தேன் ஏமுறு கின்றய.

தூதன்:— அடைந்தவர்க் கபய மளிகருமெம் மிறைவ!
கடிதம ஈதோ! காவல! காணய.

(தூதன்கடிதங்கொடுக்கச் சந்திரசேகரன் வாசிததல.)

---

† திருககுறள்—165.

**சந்திரசேகரன்.**—காஞ்சி மன்னனோ கருத்தழிந் திவ்விதம
மாதை வதுவையிற றரேனென மயங்கி
ாகெழு தியவன்? எழுதினனேவவன்?
என்னே! அவன்மதி! தன்னையு மறநது
விதிவழித் தன்சிர மிகமறந் தனனே!
பேதை! யறிவிலி! பித்தனே யின்றும!
இனியென் தாமதம? இனியென தாமதம?
ஏதுநி நிறபது? தூதுவ! செலலாய்.—

(தூதன் போதல்.)

துசச மாகுந தொண்டை நாட்டினை
நாலவகைப படையொடு நாறபுற முமவளைஇ
மனனனை மாய்த்துப பொன்னினைக கவாந்தபி
னன்புமி தூர வருமண மியறறி
மஙகையொ டின்புறீஇ மகிழ்ந்துவீற றிருததலே
காரிய மன்றி வீரிய மெனனோ!

(போதல்.)

## மூன்றுமங்கம் முற்றிற்று.

# அங்கம்-IV.

## முதற்களம்.

இடம்:—குகையுங் குகைசகடுத்த விடமும. காலம்:—காலே.

நடன்.—முகுந்தன்.

முகுந்தன்:—சுகுணன் அவர்களிருவரும் சந்திக்குமிட மிதுவென்று சொன்னுனே! சுகுணன பொயசொல்லியிருக்க மாட்டான! நமககு அழகானந்தனுடைய உடுப்புக்களையெல்லாம் கொடுததானே! பார்த்தாயா! பணம் எல்லாம் பண்ணுகினறது! என்னிடம் அவனுக்குப்பயந்தானே! பொய்சொல்லி யிருநதாலுைம் கொனறுவிட மாட்டேனே? நான் புறப்பட்டுப் பதினைநதுதினமானுலும் பாதகமில்லை. எப்படியாவது கஷடப்பட்டுச் சுகுணன்சொல்லிய அடையாளப்படி வந்து சேர்நதேனே! இங்குத்தான் அவர்களிருக்கவேணடும. அழகானநதன இங்குததான் ஓடிவந்திருப்பான். ஆமாம. ஆமாம்.—இப்பொழுது அழகானந்தன தலைபோகப்போகினறதே! வநதாலுைம் குததிவிடுவேன! சரசாங்கிவநதாளானுல்—என்னை அவனகாறசெருப்பு எனறு திட்டினுளே! இருக்கட்டும். அழகாயிருககிருள்! கொல்லமாட்டேன! நானகண்ணுடி எடுத்துப்பார்த்தேனே! நான் எவ்வளவு அழகாயிருககிறேன்! நான் அழகானநதனைப்போலவே யிருநதேனே! ஆமாம். ஆமாம. அச்சடிததாறபோலவே யிருந்தது! ஆனுல் மூஞ்சிமாத்திரங் கொஞ்சம் விததியாசமாயிருநதது! அவளைககண்டதும் மூஞ்சியைத் திருப்பிக் கொள்வேன்! அவள்கெஞ்சிக் காலில்விழுவாள்! பிறகு அழகானந்தன் காறசெருப்பின் காலில் விழுந்தாயேயென்றுதிட்டி, இங்கேயே மல்லுக்கட்டி மானங்குலைத்து விடுவேன்! இந்தக்காட்டில்யார் பார்க்கப்போகிருர்கள்? பிறகு அவள்மடியைப்பிடித்து ஊருக்கிழுததுக்கொண்டுபோவேன்! ஒருவேளை ராஜாகோபித்துக்கொணடால்!—நம்ம அக்காளில்லையோ நமக்கு? ஹஹ! நான நினைத்தாற போல முடியப்போகிறது! அந்த ஆலமரத்தடியில் ஒளிததிருப்பேன! அவர்கள் வரட்டும். (போதல்.)

(குணநிதி, விக்கிரமன், வீரசேனன், சரசாங்கிகுகையினின்றும் வருதல.)

குணநிதி:—(சரசாங்கியைப்பார்த்து) உனக்குடமபு செவ்வையில்லை! நீஇங்கிரு. நாங்கள்சென்று வேட்டையாடி வருகின்ருேம்.

விக்கிரமன்:—தம்பி! இங்கேஇரு. சுந்தரா! நாம் சகோதரர்களல்லமோ?

சரசாங்கி:—உலகிற் பிறந்த நாம் சகோதரரே யாவோம். மாறுடர்கள் ஜீவகாருண்யம் பாராட்டிப்பிறரைத தம்மைப் போன்றவர்களாய் நினைக்க வேண்டியதன்றோ? அண்ணா! எனக்கு என்னவோ தேசம இனறு அசௌககியமாயிருககினறது.

வீரசேனன்:—அண்ணா! நீ வேட்டையாடும் படிசெல். நான் தம்பிக்குக் காவலாயிருப்பேன்.

சரசாங்கி.—அண்ணா! நீங்கள் ஏன் இங்கிருக்கவேண்டும்? நீங்கள் வேட்டைக்குப் போகலாமே! எனககவ்வளவு மிகுந்தநோ யில்லையே!

வீரசேனன்:—எனக்குப்போக மனம் வரவில்லையே! உன்மீது எனக்கு மிகவும் அன்பதிகரிக்கின்றதே! எனது தந்தைமீதுள்ள நேசததையுன் மீதும் பாராட்டுகின்றேனே!

குணநிதி:—என்ன! என்ன!!

விக்கிரமன்:—அப்பா! தம்பிகூறியது தவறோ? யான் இச்சிறுவன் மீது அன்பு பாராட்டக் காரண மில்லையாயினும் அவனிடத்து விருப்பம் என்னைதெரியாமலே என்னிடத்ததிகரிக்கின்றது! அவனைக் காப்பாற்றுவதில என்னுயிரைத்துறக்கவும் பின்வாங்குவேனோ?

(விக்கிரமனும் வீரசேனனும் சரசாங்கியும் பேசிக்கொண்டு நிற்றல்.)

குணநிதி.—நல்லது. (தனக்குள்) இப்பேர்ப்பட்ட பிள்ளைகளாலல்லவோ ராஜரீகம் நடததப்படவேண்டும்? ஐயோ! தனனுயிரைப்போல் மன்னுயிரிடத தன்பு பாராட்டு மிவர்களுக்குத் தீங்கிழைத்தேன்! கோபத்தினாற்பாபஞ் சம்பவிக்குமென்பதை இன்றுதானறிந்தேன! அரசன் செய்த அநீதிக்கு யான ஏன் இவர்களைக் கோபவெறியால் ராஜ்ஜியமிழக்கும்படி செய்யவேண்டும்! இவர்கள் எனக்கொரு கெடுதியும் நினைக்காத இளங்குழவிகளாயினரே! இவாகள் தாம் அரசன்மக்களென் றறியார்கள்! என்னையே தநதையெனறு கருதியிருக்கினறார்கள்! அறிவின்முதிர்ந்த இம்மேதையர்க ளெல்லரோ மறுநீதி தவறுமற்செங்கோற்செலுததத தகுந்தவர்கள! எனறால் ராஜஜியம் வீணாய்பபோகினறதே! ஏ! மக்காள்! உங்களை யான விட்டுப்பிரிய மனமிலலாதவனாயினும் நீங்கள் இக்காட்டிற் சஞ்சரிக்கவும் வேறொருவன் நாடாளவும் நான் சம்மதிப்பேனோ! என் செய்வது? விதியின்பயன் இப்படியாயிற்று! இவர்கள் பிறப்பின வரலாற்றை யான் இப்பொழுது வெளியிடத்தகுமோ? 'விடியற் காலம கல்யாணம பிடியடா தாம்பூலம்' என்பதுபோ லன்றோ இருக்கின்றது நம்யோசனை! இப்பதினைந்து வருடகாலமாக வாய் திறவாதிருந்தோமே! அந்தோ! விதியே! அரசிளங்குமரராகிய நீங்கள் என்னாற்றுன்பமநுபவிக்கவேண்டுமோ? ஆ!—

விக்கிரமவீரசேனர்கள்:—தம்பி! போய்வருகின்றோம்.

சரசாங்கி:—அப்படியே! (தனக்குள்) இவர்கள் அன்பேயுருவா யமைந்த வர்கள்! எவ்வளவு பட்சமாயிருக்கின்றார்கள்! என்மீது கணவருக்குப் பட்சம்பறந்து சென்றது போலும்! மலைவாசிகளெல்லாம் கொடியவர்கள் எனக் கேள்விப்பட்டிருந்தேனே! காதாற்கேட்டு நம்புவது பொயயென்று தெரிந்தேன! இன்னமும் சௌக்கிய மில்லை! மனோவியாதி அதிகரித்தது! சுகுணர்கொடுத்த மருந்திற சிறிதருந்துவேன். (மருந்தருந்தல்.)

வீரசேனன்:—நானவனைவிட்டெப்படிப் புறப்படுவேன்! 'தான்துரதிர்ஷ்டசாலி' யென்று தன்னைவெறுத்தது நமது நண்பன் என்னிடங்கூறினானே!

விக்கிரமன்:—அப்படியா? ஆயின நான் காரணங் கேட்டுத் தெரிந்து கொள்வேன்! என்னிடங் கூறாமலிரான!

குணநிதி:—புறப்படுங்கள்! புறப்படுங்கள்!! புனத்திற்கிளிவந்து தங்கும் வேளையாயிற்று! (சரசாங்கியைப் பார்த்து) தம்பி! நீயுள்ளே சென்று படுத்திரு!

விக்கிரமன்:—நாங்கள் அதிக தாமதஞ்செய்யோம்! அதிசீக்கிரத்திற் றிரும்புவோம.

குணநிதி:—நீ நோயடையக்கூடாது. அன்னைபோல் எங்கட் கன்னமூட்டுவையே!

சரசாங்கி:—யானெவ்விதமிருப்பினும் உங்களுக்கு அடிசில் அட்டு அமுதமூட்டவேண்டியதே!

குணநிதி:—எங்களுடன் ஒத்ததோழனாய் என்றும் நீங்காது இங்கிருக்க வேண்டும். சுந்தரா! நீ இக்காற்றில் நில்லாது உள்ளேசெல்.—

(சரசாங்கி போதல்.)

இப்பிள்ளை உயர்குடியிறபிறந்தவனே! அதற்குச்சந்தேகமேயில்லை!

விக்கிரமன்:—கந்தருவருமயங்கப் பாடுவதைப்பார்த்திரோ!

வீரசேனன்:—நேற்றிவன்சமைத்ததற்குநளபாகமும்வீமபாகமும்ஈடோ?

விக்கிரமன்:—புன்முறுவல்பூத்துப் பெருமூச்செறிவது கோடி பொன் பெறும்! கோடிபொன்பெறும்!! பெண்ணாய்ப் பிறந்திருந்தானேயாயின் மூவருந தேவரும் யாவரும் ஓரிளநகைக்கு ஒருயுகமாயினுந் தவம்புரிந்து பெறுவார்கள்!

வீரசேனன்:—தடையோ! முகத்திற்றுக்கமும் பொறுமையுமிருப்பதே ஒரு விளக்கமாக விளங்குகின்றது!

குணநிதி:—பிள்ளைகாள்! நாழிகையாயிற்று! தாமதம்வேண்டாம். சீக்கிரம் வாருங்கள்!—(முகுந்தன்வர) யார்இங்குவருவது?

முகுந்தன்:—சுகுணன் பயல் பொய்சொன்னால்!—ஓடிவந்தார்களே அவர்களைக் காணேமே! களையாயிருக்கின்றதே!

குணநிதி:—ஓடிவந்தவர்களா! நம்மைத்தான் தேடிவந்தானே? இவனராணிதம்பி முகுந்தன்! இவனைச்சிறுபிராயத்திற் கண்டது!—முகுந்தன்தானிவன்! நாம் இங்கிருப்பது கெடுதி! போவோம.

வீரசேனன்:—நீங்கள் வேறு யாராவது நம்மைத்தேடி வந்திருப்பதாக நினைக்கின்றீர்கள்! ஆதலால் நீங்கள் இருவருஞ்சென்று சுற்றிப பார்த்துவாருங்கள். நானிங்கு இருக்கிறேன்!

(குணநிதியும் விக்கிரமனும் போதல்.)

முகுந்தன்:—குறப்பயலே! எங்குப்போகின்றாய்? ஒளியப் பார்க்கின்றாயா? நில்முனனே! ஓடாதே!

வீரசேனன்:—தடிப்பயலே! பயலேயென்று கூறிய பல்லை யுதிர்த்துவிடுவேன! உயிர் குடித்துவிடுவேன்! பயலே! யாரென்று நினைத்தாய்?

முகுந்தன்:—திருட்டுப்பயலே! என்காலில்விழு!

வீரசேனன்:—மூடப்பயலே! உன்காலில் யாருவிழுவது? உன்னைப் போல் எனக்குக கைகாலில்லையோ?

முகுந்தன்:—என்னைப்பாாததால் தெரியவில்லையா உனக்கு?

வீரசேனன்:—வாலைக்காணேமே! வாலிருந்தால குரங்கென்றறிவேன்!

முகுந்தன்:—என்னுடுப்பைப்பார்ததுத தெரிநதுகொள!

வீரசேனன்:—உன்பாட்டன் தைத்துக்கொடுததா னுனக்கு? அல்லது நீ தைததாயா இது?

முகுந்தன்:—பாட்டனுமில்லை! தையறகாரனுமிலலை!

வீரசேனன்:—உனக்குயாராவது பிச்சை கொடுத்திருப்பார்கள! முண்டம? உன்னிடம போராபுரிவது தகுதியன்று! பிழைததுப்போ!

முகுந்தன்:—என்பேரைக்கேட்டுப் பயபபடவேண்டாமா!

வீரசேனன்:—உன்பேர் எனன?

முகுந்தன்:—மடையா! என்பெயர் முகுநதப்பிரபு!

வீரசேனன்:—அடிமடையா! முகுந்தனுவுன்பெயர்? பூதமா? பிசாசா? அதற்குப்பயப்படுவதற்கு!

முகுந்தன்:—பயலே! யான் ராணிதம்பியென்பது தெரியாதா உனக்கு?

வீரசேனன்:—உயர்குலத்துப்பிறந்தும் தகுந்தபுத்தியில்லையே! உனக்கு இரக்கப்படுகின்றேனயான்!

முகுந்தன்.—எனக்குப் பயப்படமாட்டாய் நீ!

வீரசேனன்.—மூடனுக்குப்பயப்படுவார்களோ? புத்திசாலிகளுக்கன்றோ அஞ்சுதலவேண்டும்!

முகுந்தன்:—இந்தவாளாற் குத்தி யுன்னைக்கொன்று இங்கிருந்து ஓடிப போனவர்களையுங் கொல்லப்போகின்றேன் இப்பொழுது!

(இருவரும் சண்டையிட்டுச் செல்லுகின்றனர்கள்.)

[குணநிதியும் விக்கிரமனும் வருதல்.]

குணநிதி:—எங்குஞ் சுற்றிப்பார்த்தும் யாரையுங்காணோமே!

விக்கிரமன்:—முகுந்தனல்லன் அவன். அவன தனியேவர என்னஏதுவிருக்கின்றது? யாரோ அவன் தெரியவில்லை!

குணநிதி:—யானவனைச் சிறுபிராயத்திற்றான் பார்த்ததுண்டு! தடபுடலாய் வார்த்தை சொல்லிவந்ததைப் பார்க்க அவனே என்றெண்ணவேண்டியிருககிறது. அவன்தான். தடையில்லை. முகுந்தனே அவன்!

விக்கிரமன்.—இங்குத்தானே அவன்நின்றிருந்தான் நாம் புறப்படும்பொழுது! நமது தம்பியையுங் காணோமே!

குணநிதி:—தம்பியைப் பற்றிச் சந்தேகப் படுகின்றாயா? வேண்டாம். அவன் தீரனுயினனே! இம்மட்டிமுகுந்தனால் அவனுக்கொரு தீங்குமில்லை. இதோபார்! உனது சகோதரனவருகின்றான்!

(வீரசேனன் முகுந்தன்தலையைக் கையிற்பிடித்துக்கொண்டுவருதல்.)

வீரசேனன்:—அப்பா! முகுந்தன் மகாமூடன்! இப்படியும் மூடர்கள் இருப்பார்களோ உலகில? இந்தததலையில் மூளையென்பதிருக்கவேயிராது. பாருங்கள்!

குணநிதி:—அப்பா! என்னகாரியஞ்செய்தனை! என்னகாரியஞ்செயதனை!!

வீரசேனன்:—என்னகாரியஞ்செய்தேன்! அவன்சிரத்தைக்கண்டிததேன். அவன் வாய்க்குவந்தபடி நம்மைவைது கொல்வேனென்று சூளுரைத்தமையினகோபமிகுந்து அவனை எமபுரத்திற்கனுப்பினேன!

குணநிதி:—நாமென்னசெய்வது இப்பொழுது?

வீரசேனன்:—அவன் ராணிதம்பியென் றெண்ணுகிறீர்களோ? யாரவனைத்தொடர்ந்துவந்தார்கள்! ஒருவருமேயில்லை! நம்மைக்கண்டுபிடிக்க யாராலாகும்! அவன் நம்மைக் கொல்வேனென்ற படியால் யான் அவனைக்கொன்றேன். வேறென்ன?

துணநிதி:—அவன்மூடன் என்பது நிஜமேயாயினும் தனியே ஆவேசங் கொண்டு ஓடிவந்திருப்பானென்பது சந்தேகமே! ஆதலால் யாராவது அவனுக்குத் துணைவந்திருக்கலாம்!

விக்கிரமன்:—என்ன நீங்கள் இப்படி அதை நினைத்து நினைத்து யோசித்துக்கொண்டிருக்கிறீர்களே! தம்பி நல்லகாரியமே செய்தான்!

துணநிதி:—நான் இன்று வேட்டைக்குவரேன். நம்மிடம் வந்திருக்கும் சிறுவனுக்குடம்பெப்படி யிருக்கின்றதோ என்று என்மனம் வருந்துகின்றது!

வீரசேனன்.—என்னைவெல்லவும் கொல்லவும் கையோங்கியவாளே அவனைக் கொன்றது. யானென்செய்வேன்? இந்தத்தலையை மலைச்சாரலில் ஒருபுறமெறிந்துவிட்டு வந்துசேருகிறேன்.

(வீரசேனன்போதல்.)

துணநிதி:—அப்பா! நின்தம்பி சிறிதும்யோசியாது இக்காரியஞ் செய்தனன்!

விக்கிரமன்:—என்தம்பிசெய்தது குற்றமோ? யான் அவனைக் கொல்லவில்லையெனறல்லவோ வருததமுறுகின்றேன்! ராணி தம்பியாயிருந்தாலென்ன? தாறுமாறுமாய வார்த்தைபேசியதால் இறந்தான். தகுந்ததண்டனை!

துணநிதி:—இளங்காளை பயமறியுமா? நல்லது! நாம் இன்று வேட்டையாடவேண்டாம்! நாளைக்குப் பார்த்துக்கொள்வோம்! நீ குகைக்குட்சென்று சுந்தரனுக்குதவியாயிருந்து சமையல் செயவாய். யானிங்கு வீரசேனன் வரும்வரையி லிருந்து அவனை யழைதது வருகின்றேன். பிறகுபோசனஞ் செய்வோம்.

விக்கிரமன்:—ஐயோ! சுந்தரா! நீபிணியால் வருந்துகின்றாயோ? இம்முகுந்தனைப் போன்றவர்கள் பதினாயிரம்பேரைக் கொல்வதனால் நீ தேகசௌக்கியமடைவையாயின அதையும் இந்நிமிஷமே செய்து முடிப்பேன்.

(போதல்.)

துணநிதி:—நீங்கள் அரசத்தன்மை வாய்நதவர்களே! வணங்கினாரை யாதரிப்பதும் பிணங்கினாரைக்கொலைபுரிவதும் உங்களிடத்திலேயே யிருக்கின்றன! மித்திரர்களுக் கடைக்கலமா யிருக்கின்றீர்கள்! சத்துருக்களுக்குப் படைக்கலமாயிருக்கின்றீர்கள்! இங்குவந்த சுந்தரச்சிறுவனுக்குயிராக் கொடுக்கவுந் துணிந்தார்களே! அவனுக்கு என்ன உபசாரஞ் செய்கிறார்கள்! என்ன உபசாரஞ் செய்கிறார்கள்!! கோபத்தைமூட்டிய முகுந்தனைக் கொன்றுவிட்டான் வீரசேனன்! பார்த்தாற் பசு பாய்ந்தாற் புலியாயிருக்கின்றார்கள்!

இவர்களையரசன் தன்மக்களெனக் கண்டனனாகில் அங்கம் பூரித்து ஆனந்தக்கடலிற்குளியானோ?

(வீரசேனன்வருதல்.)

**வீரசேனன்:**—அண்ணன் எங்கே! முகுந்தனதலைதாழ்வாரத்தில் ஒளித்தது. (புள்ளாங்குழலொலி கேட்டல்.)

**துணநிதி:**—இஃதென்ன ஒலி? (உற்றுக்கேட்டல்.) புள்ளாங்குழற்சப்தம்! நமவிக்கிரமன் ஊதுகின்றான! உற்றுக்கேள்!

**வீரசேனன்:**—குகைக்கா சென்றனன் எனது தமையன்?

**துணநிதி:**—இப்பொழுதுதான சென்றனன்!

**வீரசேனன்**—வருத்தமும் துக்கமும் அதிகரித்தவிடத்தன்றோ இதை யொலிக்கவேண்டும்? இப்போதென்னதுனபம் நேரிட்டிருக்கும்? ஒன்றுமிராதே! ஒருவேளைமுகுந்தன பின் வந்தவர்கள் நம்மை வளைந்தனரோ?

**துணநிதி**—ஈதோ பார் நின்தமையன் சுந்தரனைத் தோளிற் சுமந்து வருவதை!

(விக்கிரமன சரசாங்கியைத் தோளிற்சுமந்து வருதல்.)

**விக்கிரமன்:**—பஞ்சவர்ணக்கிளி பஞ்சரத்தைவிட்டுப்பறந்தகன்றது! இள வயதில் இவ்வண்ணம் உயிர்துறக்கவேண்டுமா?

**வீரசேனன்:**—கண்ணே! மருக்கொழுந்தே! நீ இறந்தும் உன் முகம் வாடவில்லையே!

**துணநிதி:**—அப்பா! நீங்கள் ஏன் துக்கிக்கின்றீர்கள்? விதியின்படி முடிந்தது!—

"கேள்விக டுறைபோய்
வடிகொள் கண்ணியர் மனங்குழைந் தநங்கனென் றிரங்க
கொடையுங் கோலமுங் குழுநதம் மழகுங்கண் டேதத
விடையிற செல்வுழி விளியினும விளியுமற றறிநீ." என்று

பெரியோர் சொல்லியிருப்பதற்கொப்ப முடிந்தது.—நீ சென்ற பொழுது என்னஸ்திதியி லிருந்தான சுந்தரன?

**விக்கிரமன்:**—நீங்கள் பார்க்கின்ற இளநகையரும்பிய முகத்துடன் சயனித்திருக்கக் கண்டேன்! சந்தடிசெய்யாதருகிற சென்றேன! சென்றபோது இறந்திருக்கக்கண்டேன்!

**வீரசேனன்:**—நித்திரையிலிருக்கின்றானேயன்றி இறந்தான் அல்லன்!

**விக்கிரமன்:**—ஐயோ! உயிர்துறந்தான்! என்னருமைத் தம்பி! நீ பேரி யோகநித்திரையி லமர்ந்தாயெனவெண்ணி, நிதநிதமும் உன்னை

மலைமல்லிகையாலும் காந்தள்மலராலும் சுனைக்குவளையாலுமருச சிப்பேன்! நீயுறையுமிடத்தைத் தினந்தினமும் பிரதட்சிணஞ் செய து வருவேன்!

**வீரசேனன்:**—என்றும் உன்தேகம் அழியாதிவ்வண்ணமேயிருக்க! துக்கப்பட்டென் செய்வது? "ஆண்டாண்டுதோறுமழுதுபுரண்டாலு மாண்டார்வருவரோ?" அண்ணா! இனித்தாமதியாது இங்கோரிடத்திற்கிடத்திப் புஷ்பங்களாலும் தழைகளாலும் மூடிச் செல்வோம்!

**விக்கிரமன்:**—எங்குவளர்த்துவது! இடம் பார்!

**வீரசேனன்:**—இந்தவிடம் மிகத்தகுதியானவிடம்! இதனினுஞ்சிறந்ததிங்கில்லை! நாமும் ஒரு காலத்து இறகக்வேண்டியதுதானே! தேகம் நீர்மேலெழுத்தாயிருக்கிறது! உலகமாந்தர்கள் இஃதறியாது ஒருவரையொருவர்கொல்வதும், வஞ்சிப்பதும்அறியாமையன்றோ?

**குணநிதி:**—மயான வைராக்கிய மென்பது இதுதான்! இது ஞான பூமி போலாகின்றது! அப்பா! மிகவும் மறந்தீர்கள்! முகுந்தன் மூடனாயிருப்பினும் ராஜகுலத்திலுதிததவனானபடியால் அவனுடம்பையும் ஒருபக்கம் வாயுசமாதிசெய்வோம்!

**வீரசேனன்:**—நீங்கள் மிகவும் அவனுக்கிரங்குகின்றீர்கள்! எடுத்து வந்தால் ஒருபக்கம் கிடக்குமபடிசெய்கின்றோம்!

**விக்கிரமன்:**—இறந்தபிறகு இராஜாவாயினென்ன? ஏழையாயினென்ன? வித்தியாசமென்னவிருக்கின்றது? ஒன்றுமில்லை. இவனருகிலந்த முண்டத்தைக் காவலவைததுச் செல்வோம்! நம் தந்தைதான சென்று முகுந்தனைக் கொண்டுவரவேண்டும்! (குணநிதிபோதல.)

**வீரசேனன்:**—சர்வேசா! இச்சுந்தரன் உனதுதிருவடி நீழலடையவும் இககாயத்தைக் கழுகுமுதலிய பட்சிகளும் புலி, நரிமுதலிய மிருகங்களும் தீங்குபுரியாதிருககவுங் கிருபைசெய்யவேண்டும்!—

(பாடுதல்.)

விலையில்லா வெண்முத்தே விளஙகுமெழிற் சுந்தரனே
கலையெல்லாம் பொருந்துகிற்குங் கட்டழகார் பெருமானே
சிலையெலலா முருகநறுந் தீம்பாட லிசைப்பானே [யோ.
கொலையெலலா நிகழ்த்துகின்ற கொடுங்கூற்றிற் குடைந்தா

**விக்கிரமன்:**—

நடுவனெனப் பேர்கொண்டு நட்டாரைப் பிரித்திடுவாய்
படுதொழிலைக் கைக்கொண்ட பாதகனே கொடுங்கூற்றே

யடுதொழிலைக் கைக்கொள்ளா வருமைபெறுஞ் சுந்தரனுக்
கிடர்செய்தாய் நன்றோவீ தியம்பிடுவா யியம்பிடுவாய.

வீரசேனன்.—

பொறுமைமிக வுடையவனே பூவுலகிற் கற்பகமே
பெறவரிய சுந்தரனே பேருருகொண் மன்மதனே
தறுகண்ணு னீயிந்தத் தரைநிற்ற றகாதென்றோ
சிறியேமிற் பிரிதநுன்னைத் தென்புலத்தான் கவர்ந்தனனே.

விக்கிரமன்:—

அழகுமிகுந் திருப்பானே யாதரஞ்சேர் மனத்தானே
பொழியமுத வின்சொலலாய் பொற்பமைந்த திருமுகத்தா
வெழுதரிய வடிவினனே யிங்கிதஞ்சேர் குணத்தானே
மழகளிறே யெங்குற்றாய மறந்தனையோ வெங்களையே.

(குணநிதி முகுந்தன முண்டத்தைத் தாங்கிவருதல்.)

வீரசேனன்:—காரியமுடிந்தது ! அவனை அப்படிக்கிடத்துங்கள் !

குணநிதி —சரி, மண்ணுலமைந்தபிண்டம் மண்ணாய்ப்போகின்றது ! நாம் போவோம் !—கண்களினின்றும் மாரிபோல நீர்வடிப்பினும் சென்றவர்களைக் காணக்கூடுமோ ? அஃதில்லை !—

பூங்கா வனத்துப் புகழ்சசுந் தரன்மகிழுந்
தீங்கனிசேர் மாவிற் றிகழ்ந்துறாஉம் பொற்குயிலே
பூங்கிளியே வேடன்கைப் பொன்றும் வலையினுட்பட்
டீங்கினிநீ வந்திலையா லென்செய்கேன் மாயமே.

(குணநிதி விக்கிரமன் வீரசேனன் இவர்கள் போதல்.)

சரசாங்கி —ஓ ! என்னருமைத் தோழர்களே ! நீங்கள் வரும்வழிபார்த்து வரும்வழிபாாதது வருந்தியிருக்கின்றேனே !நீங்கள் எங்குச்சென றீரகளோ ! எப்பொழுதுவருவீர்கள் ?—இருண்ட நிசிப்பொழுதாயும் வந்தீர்களில்லை !—(கண்ணைத்திறந்து) இஃதென்ன மரங்களும் புதருமா யிருக்கின்றனவே! ஜில்லென்று குளிர்ந்ததழை என்மீது பரப்பப்பட்டு மலர்தூவபபட்டிருக்கின்றதே ! ஐயையோ ! காட்டிற்படுத்திருக்கின்றேனே !—என்புத்தி தடுமாறுகின்றதே ! என்னவோ என்கண்ணை மறைக்கின்றதே ! இஃதென்னகாரணம் ? இங்குப்புலிமுதலியமிருகங்கள் ஏதாவதுவந்து என்னைக்கொல்லுமே ! ஐயோ யான்ஏன் இங்குவந்தேன் ? சுகுணன் கொடுத்த மருந்து சாப்பிட்டுப்படுத்தவள்தானே ! * அடா ! பாவி! என்னை நயவஞ்சக

மாக முகுந்தனோடு சேர்ந்து கொல்ல எண்ணி இம்மருந்தைக்கொடுத்தாயோ! அவனைச் செருப்படியிற் பொடியென்றே னென்று வெருட்டிச்சென்றானே! பணத்திற் காசைப்பட்டு நடுக்காட்டிற் புத்தி தடுமாறிப் போகும்படி மருந்தை அமிர்த சஞ்சீவி யென்று கொடுத்தாயே! யான் வேண்டி வேண்டிக்கேட்டுக்கொண்டபோது அவன் மனங் குளிர ஒரே வெட்டாய் வெட்டியிருக்கலாமே! பொய்க்கடிதங்காட்டி என்னைமோசஞ்செய்தழைத்துவந்தாயே!—தெய்வமும் உங்களுக்கே சகாயஞ்செய்கின்றதே! என்னை யன்னை போலாதரித்தகுகைவாசிகள் யானிறந்தேனென்று நினைத்து என் மீது மலர்களைச் சொரிந்து தூக்கித்துச் சென்றார்களோ? இந்தக் காட்டில் அவர்கள் இருக்குமிடத்திற்கு எந்தவழிபிடித்துச் செல்வேன். ஐயோ! இந்துவதனே! என்கண்ணே! நீகூறியவார்த்தையையும் தடுத்துவந்தேன்! நீ என்ன துன்பப்பட்டுக்கொண் டிருக்கின்றாயோ? உன்னை எப்பொழுது பார்ப்பேன்?—

(பாடுதல்.)

திக்கும் வழியுந் தெரிகிலேன்! ஐயகோ!
இக்கொடுங் கானத் தெங்குயான் செல்வேன்?
வலலியங் கண்ட மானென மருண்டேன்!
இல்லந் துறந்தே னுலலையிற காண
ஆசைக் கனியே! நேசக் கொழுந்தே!
சுகுணனை நம்பியான் தொடர்ந்துடன் வந்தேன்.
பகழி தைத்த பசிள மானைப்போல
இக்காட் டகத்தி லெளியேன னுயருழந்
தன்றிலம் பெடையென வலறினை கின்றேன்!
கன்னிகைப் பிடித்துக் கடுந்துய ருழந்தனே!
பெண்ணெனப் பிறந்து பெற்றதென யானே?
அந்தோ விதியே! அந்தோ விதியே!!
எந்தையைத் துறந்தும் இனியை யுன்னைக்
காணக் கிடைத்திலேன்! கண்ணுண் மணியே!
பூணக கிடையாப் பொன்னி னாரமே!
என்னுயிர் நாதா! யானென் செய்வன்!
எனைப்பிறப் பித்தன னேழை மதியிலி!
காணும் வகையிலை கடிதி லிறப்பேன்!
ஐயோ! நாதவென் னாருயிர்த் துணையே!—

(மௌனம்)

பெண்ணென்ப தோர்ந்திலையே போலும் பெருமானே
யண்ணலிங் குறற தறிதியேல வாராயோ!
வண்ணக் கருங்கானில வாடி மிகவுருகி
யெண்ணத்தைத் தூதாக வேகவிட்டும் வாரலையே.

நின்னையலா லென்சோக நீக்க வலாருளரோ
பின்னற பெருங்கானிற பேய்போற திரிவேனோ
தன்னந் தனியாய்த தமியே னுழலவேனோ
வென்னெஞ சுறைவோனே யிஙகிருகக வஞசுகின்றேன்.

(மௌனம்)

ஈச்சுரனதுகிருபை யிப்படியிருநதது! ஒற்றையடிப்பாதையையா வதுகண்டு—(தனனுயகனுடையைததரிததிருநதமுகுந்தனதுடலைக் கணடு) உயிர்துறநதீரோ! பிராணநாதா!—(அவனமேல்விழநினைத் தவள்தவறி வேறு பசசத்தில் விழுகின்றுள.)

(வசசிரவாகுதேவனும் படைவீரனொருவனும் வருதல்.)

படைவீரன்.—ஐயா! நாம்போர்புரியும்போது நமது சேனசமுத்திரத்தை எனன வியூசமாகவருபபது?

வச்சிரவாதுதேவன் —சகடவியூகமாக வகுக்கவேண்டும்! நம்மரையன் எண்ணம் எப்படியிருக்குமோ? (கீழ்நோக்கிப்பார்த்துச்செல்ல) ஆ! இதென்ன தலையுற்ற முண்டமொன்றிருக்கின்றதே! அருகில் ஒருசிறுவன் இறநது கிடககின்றனே!

படைவீரன் —நன்றுய்ப்பாருமையா! உயிருடனிருக்கிறன். இறக்கவில்லை.

வச்சிரவாதுதேவன்:—அவனை எழுப்பு. யாவுந்தெரிநது கொள்ளலாம். இறநதவனுக்கிவன்தோழனே? அல்லதுஉறவினனே? அன்றிவேலைககாரனே? எவ்வண்ணமோ! (படைவீரன் எழுப்பச் சரசாங்கி எழுந்திருக்க அவனைநோக்கி) எந்தவூர்? எங்குப்போகின்றுய்? யாது உனபெயர்? யாரிங்கு இறந்திருப்பது?—விளக்கமாய்க் கூறுவாய்!

சரசாங்கி.—ஐயா! என்பெயர் சுந்தரன்! என் எசமானனுகிய இம்மகாப் பிரபு மலைவாசிகளொருவரால் இறந்தனர்போலும்! பினதொடர்ந்து வந்தயான் இக்கோலங்கண்டு துக்கத்தினுற் சோகித்திருந்தேன்! இவரைப்போலும் அன்புடையவரையும் புண்ணிய புருஷரையும் எங்குக்காணப்போகின்றேன். வீணுக இறந்தனர்! வேறு யாரைத்தேடியவர்க்கூழியஞ்செய்து பிழைப்பேன்!இல்லை! இல்லை!!

வச்சிரவாதுதேவன்:—அப்பா! ஏன்துக்கிக்கின்றுய்? சென்றவர்வரார்! யானவரைவிடப் பதின்மடங்குப்பட்சத்துடன் நின்னைக்காப்பாற்று

வேன்! எனக்குவேலைக்காரனுயமர்ந்துவிடு! உனக்குநன்மையுண்டு! இனி அவனைமறந்துவிடு! என்னைத் தொடர்ந்துவா!

சரசாங்கி.—ஐயனே! தங்களுத்தரவின்படியே! என்னைக்காப்பாற்றவேண்டும்! பிள்ளைபோற் காப்பாற்றுவதாக வாக்களிக்கவேண்டும்!

வச்சிரவாததேவன்:—அங்ஙனே வாக்களித்தோம். எழுந்திரு! சூரியன் மேற்கடலிற் குளிக்கும் நாழிகையாய் விட்டது! போவோம்! தாமதிக்கிற காரியங்கெடும்!

சரசாங்கி:—(தனக்குள்) இவ்விதியும் நேர்ந்ததோ எனக்கு?—

(யாவரும் போதல்.)

---

## இரண்டாங்களம்.

இடம்:--காஞ்சியரண்மனையத்தாணிமண்டபம்.காலம்:-நண்பகல்.

நடர்:—சச்சந்தன், மந்திரி.

சச்சந்தன்:—சேவகா! நீ சென்று கனகாம்புஜத்திற்கு உடம்பெப்படியிருக்கிறதென்று விசாரித்துவா! உகிர்ச்சுற்றின்மேலம்மி விழுந்ததுபோலாயிற்று என்கதி! எனக்கு ஒரேகுழந்தையாயிருந்த சரசாங்கியைத்தான் காணேமே! இவளாவது சுகமாயிருக்கக் கூடாதா? கலியாணமும் நின்றுவிட்டது! முகுந்தனையுங் காணேமே! சரசாங்கியைக் கொடுக்கமாட்டோமென்றதற்குச் சந்திரசேகரன படையெடுத்து வரலாமென்றும் முன்னரே கூறினுளே! இந்தத் துக்கத்தினு லுண்டான மனேவியாதிதான் இவள் நோய். வேறென்ன? என் சுகங்களெல்லாம் வெய்யில் முன்பனிபோலாயின.—

(ஒரு சேவகன் சுகுணனை அழைத்துவருதல்.)

சுகுண! சரசாங்கி அரண்மனையைவிட்டு வெளியேசென்றது நினனுலென நிச்சயமாய்த்தோன்றுகிறது!இரண்டாமுறையாகஉன்னை விசாரிக்கின்றேன். என்மனைவி கனகாம்புஜம் நின்பேரிற் குற்றஞ்சாட்டுகின்றனள். யாதுகூறுகின்றனை?—நீ ஏன் கூறுவாய்? சுறுக்கென்று கொடுக்கிறுற் கொட்டவேண்டும். உன்னைச் சித்திரவதைசெய்து உன்னிடமிருந்து நிஜமறியவேண்டியதன்றிக் கொடுமையிலேயிறகென்றால் நீ எங்கேகொடுக்கப்போகின்றாய்?

சுகுணன்:—மகராஜப்பிரபு! என்னுயிரை உங்களிடமே ஒப்புவைத்து விட்டேன். நீங்கள் எதுவாயினுஞ் செய்துகொள்ளலாம். தங்கள் குமாரத்தியவர்கள் சென்றவிடமும் இருக்கின்றவிடமும் திரும்பி வருஞ்சமயமும் எனக்குத் தெரியா. யான் அபராதமற்றவனே!

மந்திரி.—மகாராஜா! தமதுகுமாரத்தி சென்ற அன்று இவர் இங்குத்தான் இருந்தார்! ராஜசபைக்கும்வந்திருந்தார்! இவர்இதுகாறும்பொய் பேசியதை யான்கேட்டதில்லை. ஆதலால் இவர் கூறுவதுஉண்மை யென்றே தோன்றுகின்றது! பாவம்! இவருக்கொன்றுந் தெரியாது! இவர் நிரபராதிதான்! முகுந்தப்பிரபு சாமீனவந்து சேருவார்! அவரைப்பற்றிநாம் கவலைப்படவேண்டியதில்லை!

சச்சந்தன்—ஆயினும் எமக்குச்சந்தேகமிருக்கின்றது! சிறிதுகாலம்பொறுத்துனை மறுபடியும் விசாரிப்போம! இப்போது மனதுக்கொன்றுஞ்சரியாயில்லை!

மந்திரி—மகாராஜா! சந்திரசேகரனுடைய சேனாதிபதிநமதுதேசத்தைப் படையுடன்வந்து கைக்கொள்ளும்படியாகத் தருசையைவிட்டுப் புறப்பட்டுவிட்டதாகத் தெரிகிறது! அரசனும் பெரும்படையுடன் புறப்பட்டு வருகின்றானாம்.

சச்சந்தன்—எனக்கொன்றுந் தோன்றவில்லையே! (தனக்குள்) பதினாயிரம் மந்திரிகளிருந்தாலும் கனகாமபுஜத்தைப்போலச் சந்தர்ப்பத்திற்குத் தருந்த யோசனைசொல்பவர்களுண்டோ!

மந்திரி—மகாராஜா! நாம் ஆலசியஞ்செய்யாமல் நமதுபடைகளைச் சித்தஞ்செய்யவேண்டும்! சாக்கிரதையா யிருந்தால் என்னபயமிருக்கின்றது?

சச்சந்தன்—அதைப்பற்றியா யான்கூறுகின்றேன்? சந்திரசேகரனுக்கா யான்பயப்படவேண்டும்? இங்கு நமது கனகாமபுஜத்திற்கு என்னசம்பவிக்குமோ வென்று என்மனந்தத்தளிக்கின்றது! சென்ற சேவகன் இன்னுமவரவில்லையே! யானேபோய்ப்பார்ப்பேன்!— நீரும் என்னோடு வாரும், போகும்போது யுத்தத்தில் நாம நடந்து கொள்ளும் விஷயத்தைப்பற்றிக் கூறுகின்றேன்.

(சச்சந்தனும் மந்திரியும் போதல்.)

சுதனன்—அழகானநகருக்குச் சரசாங்கி இறந்தாளென்று தெரிவித்தது முதல் அவர் யாதொரு உத்தரமும் எழுதவேயில்லை. சரசாங்கி போய்ச் சேர்ந்ததும் தெரியவில்லை. முகுந்தன் எனபொய்வார்த்தைகேட்டுச் சென்றவன், எங்குளனோ? ஒன்றும் அறியாது திகைக்கின்றேன்! நல்ல எண்ணமுடையவர்கள் எதுபுரியினும் நன்மையாக முடியுமன்றோ?

(போதல்.)

## மூன்றாங்களம்.

இடம்:—மலைக்குகைக்கு எதிரிருக்கும் இடம். காலம்:—காலை.

நடர்.—குணநிதி, விக்கிரமன், வீரசேனன்.

விக்கிரமன்.—சுந்தரா! சுந்தரா!! நீ தோன்றிமறையும் மின்னலைப் போல் எமமுன்னர்வந்து சேர்ந்து எங்கட்குச்சிலநாட்கள் விருந்தினனாயிருந்து சிவப்பேற்றை யடைந்தாயே! நின்னைப்போலும நண்பனை இக்காட்டகத்தெங்குக்காணப்போகின்றோம? கொண்டு வந்து கூட்டிவைத்த தெய்வம நீட்டித்திருக்கவொட்டாது விட்டி விட்டதே! உனபாடலொன்றைக்கேட்டால், எங்கள மனோதுக்கமும் நேகவருத்தமுமாறிச சஞ்சீவியுண்ட சமர்த்தர்களபோலப பேரானந்தமடைவோமே! இப்பொழுது என்னையும் எனதமபியையும் துக்கத்துக்காட்படுத்திப் பறந்துசென்றாயே!

வீரசேனன்.—அண்ணா! ஈசுரன கருணை அப்படியிருந்தது? நீ இன்னமும துக்கப்படாதே! எனக்குந் துக்க மெழுகின்றது!—சுந்தரா! எனதமபி! எப்பொழுதடா உன்னைப் பார்க்கப் போகினறேன்! கண்ணே! என் அமிர்தமே! சஞ்சீவியே!

(பாடுதல்.)

இராகம் - இந்துஸ்தான்காபி. தாளம - ரூபகம.

பல்லவி.

சுந்தரனே - என்று காண்போம
  சோருமேமனம - துயா
  மீறுமே தினம ஓ (சுந்தரனே)

சரணங்கள்.

சந்ததமுநா மொன்று கூடிச
சமைத்தருந்து வமே - ஐயோ
இந்த வேளை யெந்த நண்பனோ
டினிப பொருந்துவமே - எஙகள
தனியருந் தவமே ஓ (சுந்தரனே)

பட்டமரமும் விட்டுத் தளிாக்கும
பாடலிற் சிறந்தாய - உன
இஷ்டத்தின்படி நட்ட வெங்களை
யிப்படி மறந்தாய் - உயிர்
எப்படித் துறந்தாய் ஓ (சுந்தரனே)

பங்கஜ முகந்தன்னைக் காணப்
பசித்துயா நீரும் - திவ்ய
மங்கள குணந்தங்கு மிங்கித
வார்த்தையை யாரும் - செவி
சேர்த்திடச் சாரும் ஓ (சுந்தரனே)

துணநிதி.—நீங்கள் தினந்தினம் திடீரென அவனை நினைத்துக்கொண்டு துக்கப்படுகின்றீர்கள்! வீரசேனா! அண்ணனுக்குப் புத்திகூறிப் பின் நீயேன் வருந்துகின்றனை? அவனை நினைத்தலை மறந்து மேல் ஆகவேண்டிய முக்கியமான விஷயங்களைக்குறித்து யோசிக்கவேண்டியதை நோக்குவதில்லையே!

(இருவருங்கண்ணைத்துடைத்துக்கொண்டு)

விக்கிரமவீரசேனர்கள்.—முக்கியமாகப் பார்க்கவேண்டிய விஷயங்களைக் கூறுங்கள்! இப்பொழுதே செய்துமுடிக்கின்றோம்!

துணநிதி.—பிள்ளைகாள்! இப்பொழுது சோழநாட்டரசன் நம்மரசன்மீது படையெடுத்து வந்திருக்கின்றானே! இதைப்பற்றி நாம் ஆலோசனை செய்யவேண்டுமே!

விக்கிரமன்.—நமக்கென்ன அதைப்பற்றி? வீண்விஷயங்களை நாமேன் தலையிலே போட்டுக்கொள்ள வேண்டும்? கொடுத்தவர்களுக்கு நாட்டுவளப்பமேன்? இராமனை ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன? நமக்கொன்றுதான்! மலைவாசிகளாகிய நமக்கிந்த யோசனையேன்?

துணநிதி.—எப்படியிருந்தாலும் நாமிருக்கும்நாட்டை யாண்டுவரும்நமது ராஜாவுக்கு நாம நன்மைபுரியவேண்டாமோ?

வீரசேனன்.—அவனதான் வீணாக உங்களை இங்குத் துரத்திவிட்டானே! அவனுக்கு நன்மைநினைக்கின் அது பாவமே!

துணநிதி.—பயித்தியக்காரப் பிள்ளைகளே? ஒருவன் தெரியாமற் கெடுதி செய்தால் அதற்குக்குரோதம் பாராட்டாமல் அவனுக்கு நன்மை செய்வதன்றோ நம்மைப்போலொத்தவர்களுக்குக் கடமை?

"இன்னாசெய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ்செய்து விடல்"

என்ற வள்ளுவர் குறட்பாவை மறந்தீர்களே!

வீரசேனன்.—ஆம். யான் முகுந்தனைக் கொன்றுவிட்டேனே! அவர்களுக்கு நன்மைசெய்யச்சென்றால் நாம்கொன்றதற்கு நம்மைக்கொல்லாமல் விடுவார்களோ? நாமே வலியவிலங்கு போட்டுக்கொள்ள வேண்டுமா?

துணநிதி —அவனிறந்ததயாருமறியார்கள் ! இதன்றியும்நாம் ராஜாவுமகு அதிகநெருக்க முடையவர்கள் ! ஆதலின் நாம தடையினறி நனமைபுரியவே வேண்டுமென றெண்ணுகினறேன.—(சபதங்கேட்டல.) இதேதோ பெருஞ்சப்தம் ! மலேமேலேறி அஃதுளமூநதவிதங் காணபோம் ! பிறகுயோசித்துததகுந்தபடி நடநதுகொளவோம!

விக்கிரமன்:—தங்கள் இஷ்ட விரோதமாய் இதுவரையில் நடநததில்லே. இனி அவ்வண்ணம் நடப்போமா? சைநநியங்களின ஆரவாரமன்றி வேறில்லே ! எதற்கும மலேமீதேறிப பார்ப்போம !

(யாவருமபோதல.)

நான்காமங்கம் முற்றிற்று.

# அங்கம்-V.

## முதற்களம்.

இடம்:—போர்க்களம். காலம்:—காலை.

**நடன்.—அழகானந்தன்.**

அழகானந்தன்—(செவ்வரத்தம் தோய்ந்தகிழியொன்றைக் கையிலேந்தி நின்று) ஏ! நடந்துதிரியும் பொற்கொடியே! உன்னையன்றியானெவ் வாறுய்வேன்? நம்மிருவருக்கும் நடந்த விஷயங்களெல்லாம் ஒன் றின்பின் ஒன்றாய் முளைத்து என்னை அலைக்கழிக்கின்றனவே!—

இளமரக்கா புக்கு மினிதோ ரிடத்தில்
வளம்படவே யாறு மறைந்தே - யொளிந்திருப்ப

வாண்டுவந்து நோக்கி யடியேனைக் காணாது
மீண்டுமெனைத் தேடி மிகவருந்திக் - காண்டகைய

வென்றுநிலை நீயிங்கு வேறொருவ ரில்லையென்று
மன்று நகைக்குறிப்பின் மாண்டதெனக் - சண்டு

பிறையணிந்த பிங்க வடிவத்துப் பெம்மா
னுறைதருங் கண்களகங் கையாலே - மறைய

வனைத்தவெம தாடபிகைபோ லாகத் துதித்துப்
பனைத்த தவமாம பறமைத - துணைக்கைகொடு

சந்தோடங் கொள்ளுங்கால் சாங்கேதனைக் கண்டுவெளி
மந்தநகை செய்துமலை மங்கைபோல் - சந்தநறுங்

கொங்கைக் குவடாற் குறிப்படுத்தி மார்பகத்தை
யங்கைத் தலத்தா லணைத்தென்னைப் - பொங்குமுத்த

முத்தங் கொடுத்து முகத்தின் முகமணைத்து
மெத்தத்தன் டிகரு மின்றகொடியே - யொத்த

குறியிடத்துச் சென்றியான் குயிலேயென் றேத்த
வறிவிலா குயிலவேட்டை யாட - வறியேன்முன்

னுற்று வந்தீர் நகையாடா தோவுலகம்
டேறுந்து நின்றீர் பெரியரென்றே - வீணாக்க

கண்சிவந்து காதிற் கதிர்முத்த மாணிக்க
வண்சிவப்பைக் காட்டவுமே வாகாயிம - மண்ணுலகின்

"ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்" என்னும்

வள்ளுவர் குறட்பாவை மெய்யென்று காட்டவல்லாய்! நீ எங்குச் சென்றாய்?—

வெண்டரளச் செம்பவள மென்கமுகச் சங்கமெனு
மொண்மிடற்றி னுதிர்த்தவைபோ லொளிபரப்பி யதைச்சூழ்ந்
கண்கவற்று மாமினிடங் காலபரப்பித் தவழ்ந்தேறி [து
வண்சிகரச் செப்பகளை வளைத்திழுத்தல் பார்ப்பேனே.

சந்தமொடு விலவுமிழுந் தரளவட விமிறபூட்டிப்
பந்துதனைச் சிலிமுகமாஞ் சிலீமுகத்தைப் பலகாலென்
சிந்தையொடு நயனத்தைச் சிலைகளாக் கொண்டெறிந்து
யிந்தகந்தின் முத்துதிப்ப தென்கண்ணிற் காட்டுவையே.

நித்திலநற் கச்சணியு நீலகச் சுண்டனத்தை
யாதிரியென் றேகாட்டி யபிநயட மாக்காட்டிச்
சித்தசன்றன் றுதைமுடி சோகத்தைத் துளிகாட்டிச்
சுததியெனக் களங்காட்டித் தோளையமை யாய்க்காட்டும்.

கண்ணூடிக் கதுப்புடையாய் கடிமுரசச் சிலம்பொலியா
யுண்ணூடுந் தோட்டியிணைக் கயலவிழியா யொண்டொடியே
விண்ணூடும் விளக்கொளியாய வியன்றனமா நிறைகுடத்தாய
தண்ணூடுங் கொடியிடையாய் சாமளைமான் மானத்தாய.

நின்னைப்பிரிக்கக் காணுமன் நீசென்ற வழிதேடி
யின்னேயான் வருகின்றே னினியிணடு வாழ்கிலேன்
பன்னியென்று பாராமற் பாவத்திற் காளாகிக்
கொன்னனேநிற் கொன்றேனே கொடியரினுங் கொடியேனே.

ஏ! சரசாங்கி! என்கண்ணே! இதோ வந்துவிட்டேன். தாமதிக்கவில்லை! பஞ்சிதோய்ந்த பவளக்காலடிவழியே யிதோ வருகின்றேன! என்னுயிர்க்காதலி! மூர்ச்சித்துக் கிடந்த வுன்னைப் பிராணனை யொருபொருட்டாக மதித்து நந்தனவனத்தில் விடுத்துச் சென்ற யான் சிறிதும் அன்பில்லாதவன! கல்விப பெருஞ்செலவியே! எங்குச்சென்றனை? என்று வருவை? வருவையோ? வருவையோ? எவ்வண்ணம் வருவாய்? இப்பூவுலகில் நின்னை யுயி

ரோடு காண்பேனே? அன்றிச சுவர்க்கத்திறுரன காண்பேனே? (மௌனம்) கறபிறகரசியாகிய வுணேைத திரவிசாரியாமல அவசர பபட்டுககொனற எனககும சுவாககலோகமா? தீராததுயருககும மீளாநரகிறகும ஆளானேன! இவறறினின றுடி எனனை மீட்கும உபாயமுமுளதோ? ஒன்றுமிலலை! சத்தியம்! சத்தியம!! மெல் லிளநதோகாய! நினனை என்று காணபேன! எங்குககாணபேன? எவவிதஙகாணபேன? ஐயோ! இனபரசவனஜமே! சரசரூபி! சர சாங்கி! சரசாஙகி!! சணபகககோதாய்! தரியேன்! ஒருகணமுந தரியேன! சணணிரவிட்டுக கதறுகினறேன! எனசெயவேன! பாவியுயிரே! ஏனிருககினறாய? நினதுகாதலியைத் தேடிச் செல லாயோ! ஏனதாமசபபடுகின்றாய? ஆகதோ! புனமுறுவல பூதத திருமுகததையும, செவவரிக கண்களையும தேன்மொழியையும் நினைககும்போதே நைநது நைநது மனமுருகுகினறேனே! குணம நிறைநத மணப்பூஙகொடியே! நினசெவவரததந தோய்நதகிழி யிதுவோ! இதுவா நினனரததக்கறை? ஈதோ நினனுதிரந தோய நதது? (அழுகினருன.) பாவியேன! பாவியேன!! நினனை நினைக கும்போதே எனஆண்மையகனறதே! வீரமறறனனே! தீரமொழி நததே! பராககிரமம பறநததே! ஏழைமனமே! இனியென? இனியென? ஆறுதலடைவாய! இறநதாரஉயிாபெறறெழுவரோ? மறநதனையோ?—ஏ! சுகுணா! எனனினைபிரியாததோழா! தோழ னென்றால நீயேதோழன! எனகட்டளையைமீறி நடநதாயில்லை! மீறிநடபபின இவவணணம வருந்துவேனே! ஏன்வருந்துவேன்? நீ வாளால் அவளஉயிரை மாயககும்போது எனனினைநதாளோ? எவவிதமவருநதினளோ? என கூறினளோ? அலறியழுதாளோ? ஏஙகித்திகைததாளோ? கெஞ்சியிரநதாளோ? மிஞசித துடிததா ளோ? (மீட்டும அழுகினறான.) ஏ! கட்டிககனியே! தனமதியே நின கருப பெருஞ்சனியனாய வநதனன! எளளும எணணெயும, கரும புமரசமும, உடலுமுயிருமபோலினைபிரியாநமககுசசெசகும ஆலை யும எமனுமாயினன! அவனதான நினனை விவாகம்புரியத தூதனு பபும்படி சநதிரசேகரனைத தூணடியதாக ஜெயவீரா கூறினார்! அவன எதுதான் செயயத துணியான? கொடுநதுனமாாககன! பரமசண்டாளன! அப்பொழுதே நினது பாஙகிமாரால நினகை லேயைக்கவர்ந்தனன என்றேதாமானிததேன்! தாதியர்கள பண ததிற காசைகொணடு நினதேக அடையாளங்களையுங் கூறிவிட்ட னரோ! பாழும பணமே! நல்லவர்களையும கெட்டவாக ளாககு வாய! கொடியை! பெணடீர் பணவாசை பிடிததவ ராயினரே! ஐயோ! ஜெயவீரரே! நுமதுவார்த்தைகளையும் தட்டிவிட்டேனே! பான அநுபவிககினறேன! அநுபவிககின்றேன் கொடுந தண் டனை! பிரிதலினும் கொடுநதண்டனையுமுண்டோ? ஆ! என்மன

த்திலுதித்தவண்ணமே நீ நிரபராதியென் றுணர்வேனுகிற கட லும் ஒரு சிறுதிவலையேயாம் என் கண்ணீர்ச் சமுத்திரத்திற்கு! (அழுதல்.) எவ்வண்ணம் ஆற்றுகிறபேன்? ஏ! மெல்லிய வல்லிக கொடியே! யான் கோபவெறியா லிழைத்ததீங்கைப் பொறுத்த ருள்! நீ உத்தமி யென்றே எண்ணினேனை! நின்பழி தீர்த்திதோ நினனைக்காண வருகின்றேன! நின்னைப் பழிகூறிய அக்கொடிய சண்டாளவன்னெஞ்சத் துன்மதியைப் பிளந்து நின்னலங் கவா வான்வந்த சோழநாட்டுச் சந்திரசேகரனைக் கண்டித்து அவன படையைத் துண்டித்து வாளுங் கையுமாய்ப போர்க்களத் துயிா நீத்துநின்னை யடைகின்றேன! யானும் யுத்தசந்நத்தனுய்விட்டேன! உயிரைத் துரும்பென்று எண்ணின எனக்கு யார் நிகர்? முன்னுன மதி யுயிருண்ண இதோ விரைந்துசெல்கின்றேன.

(பாடுதல்.)

இராகம் - தர்பார். தாளம் - ரூபகம்.

**பல்லவி.**

இதோ செலகின்றேன் - சமர்க்களம
இதோ செலகின்றேன்.

**அநுபல்லவி.**

அதோகதிககாளாகப் பகைஞரை
அஞ்சாமல ஓடடவே-எஞ்சாமலவாட்டவே (இதோ)

**சரணங்கள்.**

நன்மதி யென்பதை நாடாம லெந்நாளும
நாடடிற் சனியனுய நண்ணு மந்தபபாழ்ந
துன்மதி யாருந துரோகியைக கைவாளால
துண்டமாய்ச சாயததிட-முண்டமாய மாயத்திட (இதோ)

நந்திர நாதன்சொற சஙகதி கேடடநதத
தையலையே கொள்ளச சண்டைக கிங்குவந்த
சந்திர சேகரச சண்டாளனைக கண்டு
தபபாமலவெலலவே-யிபபோதேகொல்லவே (இதோ)

முன்னும் பின்னு மறியாமலே யானபாவி
மொயகுழலை வதைததிவ் வுலகி லாவி
தன்னோடு வாழ்த றவிரா திருக்கின்றேன
இக்கணம் நீஙகவே - இக்கண மோஙகவே (இதோ)

(போதல்)

[ஒருபக்கத்திற் சந்திரசேகரன், வச்சிரவாகுதேவன், துன்மதி சோழநாட்டுப்படைகள் வருதல், வாத்தியகோஷம்.]

படைப்பாணர்கள்:— (பாடுதல்.)

தஞ்சை மன்னன் றக்கதோர்
வஞ்சி சூடி வந்தனன்
மிஞ்சி யூன்றி வெல்வது
பஞ்சி நீயிற பறறலே.

வென்றி வேற்கை வேந்தற்கு
வென்றி யோரும் வீரரே
கொன்று வேலலுங் கொள்கையிா
நன்று போரை நாடுவீர்.

உற்று வாழவ தொன்றுகேள்
பறறி லாபப கைவனே
செற்ற மின்றிச சேருவாய்
வெறறி வீர னடியினே.

கூற்றின் முன்னங் கோபமோ
டாறறு மாற தெனனேயோ
வேறறு நாட்டு வீரரே
சாறறு வீரக டன்மமாய்.

வாகை சூடி வருவஞ்
லோகை கொண்டெ மோஙகலுரு
சாகஞ் சேர்ந்த சாதமே
பாக வுண்டி பகைவரே.

[மறறொருபக்கத்தில் தொண்டை நாட்டார் அழகானநதன முதலி யோர்வருதல். வாததிய கோஷம்.]

படைப்பாணர்கள்:— (பாடுதல்.)

காஞ்சி மன்னன் காண்டருங்
காஞ்சி சூடிக் காணுவன்
மூஞ்சி மூடி முதுகிட
வாஞ்சை சேரும் வஞ்சகன்.

தரும மின்றித் தாழ்ந்தவன்
கரும மென்ன கருமமே
அருமை யின்றி யவனியின்
மருமம் போழின் மாயுமே.

வென்றி வென்றி வீரரே
யன்றி வேறெ னறைதிரே
நன்று வேறு நாவல
ரென்று மோதி யேற்றவே.

வஞ்சக கொண்டு வந்தனன்
நெஞ்சி லொன்று நேர்ந்தில
னஞ்சப போரு மாறறுவீர
பஞ்சை யாகப பாதகன.

போரின் மாண்டு போனவர்
வீர சொர்க்க மேவியே
வீர வேற்கண் மாதரார்
வாரம பூண்டு வாழகுவார்.

[பிறகுயாவரும்போதல். மறுபடியும் துன்மதியும் அழகானந்தனும் சண்டையிட்டுக்கொண்டு வருதல்.]

அழகானந்தன்:—தெவ்வீர்! ஓடன்மின்! இவனைக்கொன்று இதோ வருகின்றேன்!

(துன்மதி அழகானந்தனால் நிராயுதனாய்க் கீழேவிழுந்து சோர்வடைதல்.)

அழகானந்தன்:—கீழேவீழ்ந் துயிர்நீத்த உன்னை வாளால் வெட்டியெறிவது தருமமன்று! (போதல்.)

துன்மதி.—(எழுந்து) பதிவிரதா சிரோமணியைப் பழிபகர்ந்த எனது பலமெல்லாம் பறந்துவிட்டதே! காலிற்பெருங்காயமு மடைந்தேன். தப்பிப்போகவும் வழியில்லை. நொண்டிச்சென்றுவது உயிர்பிழைப்பேன். (போதல்.)

[போர்நடக்கின்றது; தொண்டைநாட்டார் வெங்கிட்டோடல். சச்சந்தன் சோழநாட்டாராற் பிடிபடுதல். பிறகு அவனை மீட்கும்பொருட்டு குணநிதி விக்கிரமன் வீரசேனன் இவர்கள்வருதல்.]

குணநிதி:—ஜெயமடைந்தோம். ஜெயமடைந்தோம். தொண்டைநாட்டீர்!

பயந்து சென்றீர்
வியந்து நிற்பீர்
நயந்து காண்மின்
னயர்ந்து நோக்கீர்.

நின்மின்! நின்மின!! ஓடன்மின! ஏன்செலி கொண்டோடுகின்றீர்கள்?

விக்கிரமவீரசேனர்கள்:—

பாரப படையிர்
வீரத் தொடையிர்
சாரம் மிடைவீர
நேரம் மடைவீர்.

குருதம் பகழி
நநதும படையாற்
கொநதும முடலைச
சிந்துங குருதி.

நின்மின்! நின்மின்!! போர்புரிமின்! போர்புரிமின்!! வமமின! வமமின்!!

(அழகானந்தன் இவர்களுக்கு உபயலமாய் வருதல்.)

அழகானந்தன்:—

எடுபபோங கொடுவா
ளடிபபோரு சிதறக்
குடிப்போ முயிரைக்
கொடுப்போம விடையே.

[சச்சந்தனைமீட்டு யாவரும்போதல்.]

(வச்சிரவாகுதேவனும் துன்மதியும் சரசாங்கியோடு வருதல்.)

வச்சிரவாகுதேவன்:—சுந்தரா! இக்கணமே யோடியுயிர்பிழை! இபபெரும்போர்க்குழபபத்தில் உன்னைத தப்பவிடார்கள! நில்லாதே! ஓடிப்போ! ஓடிப்போ!!

(சரசாங்கிபோதல்.

துன்மதி:—நம் அரசன் சந்திரசேகரனும் யுத்தத்தில்மாண்டனன்! சச்சநதனே ஜெயமடைநதான்! இது மகாஆச்சரியமாயிருக்கின்றது!

வச்சிரவாகுதேவன்:—பக்கபலமாய் வாளேந்திவந்த ஒருவீரனால் மாணடனன! இனி நாம்எதிர்த்துப்போரிடமுயல்வது வீணேயாம!)

**துன்மதி**:—ஓடி யுயிர்பிழைப்போம்! ஓடியுயிர்பிழைப்போம்!!

**வச்சிரவாதுதேவன்**:—போர்முனையில் ஓடி யுயிர்பிழைத்தலினும் போர் புரிந்து யுத்தகளத்திலேயே யிறப்பேன்!

"மிக்கவெஞ் சமத்திடை வெருவி யோடின
ரொக்கறுன புறத்தனி யுலகில வாழுநர்
புக்கவேட டகத்தினி லுண்ணும் புன்மையோா
மக்களுட் பதடியென் றுரைக்கும் வையமே."

ஆதலால் ஆறினுஞ்சாவு நூறினுஞ்சாவு! நின்னுயிர் எனனகரு ம்பா? நீயிறந்தாற காடெல்லாம் எலும்பாமா? பிழைத்துப்போ!

(போதல.)

**துன்மதி**:—யானும் போர்புரிவேன்! யானும்போர்புரிவேன்!!

(போதல்.)

---

## இரண்டாங்களம்.

இடம்:—போர்க்களத்தின் மறறொருசார். காலம்:—அந்திமாலை.

**நடர்**:—அழகானந்தன், போர்வீரன்.

**போர்வீரன்**.—ஐயா! நீர்யார்?

**அழகானந்தன்**.—யான் ஒருமனிதன்!

**போர்வீரன்**:—நுமது பெயரென்ன?

**அழகானந்தன்**.—அதை ஏன் கேட்கின்றீர்? யான் ஏன் நுமக்குக் கூற வேண்டும்?

**போர்வீரன்**:—ஐயா! கோபித்துக்கொள்ளாதீர்கள்? நீர் தொண்டை நாட்டரசனைவிடுவித்துச் சோழநாட்டரசனைக் கொன்றவரல்லரா? ஆகையால் நும்மைத்தெரிந்துகொண்டு போகலாமென்று எண்ணி வந்தேன். வேறொன்றுமில்லை. இதன்றி மூன்றுபேர்களாலேயே நமது தொண்டை நாட்டார் ஜெயம் பெற்றார்களாமே! இது மகா ஆச்சரியம்! மகா ஆச்சரியம்!! தெய்வந்தான் வந்து உதவியதோ என்னவோ தெரியவில்லை!

**அழகானந்தன்**:—ஏன்! ஐயா! நீர் போர்க்களத்தி லில்லையோ? என்னை விசாரிக்கவந்தீர்! நன்று! நன்று!!

**போர்வீரன்**:—இருந்திருந்தால்விசாரிப்பேனோ? தூரநின்றுபார்த்தேன்! என்கண்களுக்கு நன்றாய்ப் புலப்படவில்லை!

அழகானந்தன்:—புறமுதுகுகாட்டி ஓடியவர்களில் நீரொருவரோ? வெட்கமில்லையாவுமக்கு? என்னிடஞ் சங்கதிவிசாரித்துப்போய்ப் பெருமைபாராட்டிக்கொள்ளப் போகின்றீரா? என்முன் நில்லாதீர்! போம்! போம்!!

போர்வீரன்:—எவற்றிலும் வீராவேசங்கொண்டவராயிருக்கின்றீர்! யானபோகின்றேன்! ஐயா! மன்னியும், ஐயா!

(போர்வீரன்போதல்.)

அழகானந்தன்:—போர்முனையிற் றோற்றோடிய நாயக்கும்முகத்தில்மீசையா? இப்போப்பட்ட புரட்டர்களிடம் வார்த்தையுங் கூடுமோ? யான் அரசனாயிருப்பின் இன்னமும் இவன் உயிரோடிருப்பானோ? யான் ஏன் கொல்லவேண்டும்? யான் ஏன் கொல்லவேண்டும்? ஒருத்தியைக் கொன்றுதான் யான் படாதபாடு படுகின்றேனே! ஆ! என்கண்மணி! நீயுயிர்பிழைத்திருந்தால் இப்பொழுது யான் எவ்வளவு சந்தோஷமாயிருப்பேன்? அரசனும் என்னைக் கோபித்துக்கொள்ளாது அங்கீகரிப்பானே! எவ்வளவுசுகமாய் வாழ்ந்துகொண்டிருக்கலாம்! மனமே! ஏன் வீணையோசனையிற் காலம் போக்குகின்றாய்?—என்கண்ணே! பழிவாங்கிவிட்டேன்! பழிவாங்கிவிட்டேன!! மேலாடையைக் கழற்றி யெறிந்து யானும் என்னைக் கொல்கின்றேன். (மேல் ஆடையைக் கழற்றி வீசி யெறிதல்.) அதற்கு ஈட்டியொன்றைத்தேடி யெடுப்பேன். நின்னை—

(ஈட்டியொன்றைத் தேடுதல்.)

[இரண்டு சேனைத்தலைவர்கள் வருதல்.]

முதற்சேனைத்தலைவன்:—தெய்வசங்கற்பமே சங்கற்பம்! வச்சிரவாகு தேவன் பிடிபட்டான்! சந்திரசேகரன் இறந்தான்!

இரண்டாவதுசேனைத்தலைவன்:—நமது குலதேவதைபோலவே வந்து உதவினர்கள் நான்குபுருஷர்கள். அவர்கள் வராவிட்டால்—

முதற்சேனைத்தலைவன்:—நாம் ஏன்இங்கு இவ்வண்ணம் பேசிநிற்போம்! அவர்களே பெருந்தீரர்கள்! (அழகானந்தன் ஈட்டியைத் தேடிக் கையிலெடுத்து எழுந்து நின்று 'ஆயினுந் தற்கொலை புரிவதோ?' என்கின்றனன். அப்பொழுது அவனைப்பார்த்து) யார்நீ? நில்! ஓடாதே! தப்பித்துக்கொண்டோடப்பார்க்கின்றாயா?

இரண்டாவதுசேனைத்தலைவன்:—ஈட்டி யொன்று கையில்! குற்றுயிராயிருப்பவர்களைக் கொன்று அவர் ஆடைமுதலியவற்றை உரிந்துகொள்வதற்கா?

முதற்சேனைத்தலைவன்:—இந்நேரம் இவன் கீழே தடவிக்கொண்டிருந்தான்! யார்நீ? என்னவார்த்தை பேசாமலிருக்கின்றனை!

அழகானந்தன்:—யான் யாருமில்லை.

முதற்சேனைத்தலைவன்:—யாருமில்லையா? திருட்டுப் பயலிவன்? பிடித்து அரசனிடங் கொண்டுபோவோம்!

[சச்சந்தனும் யாளைட்படையும் சிறைகாவலாளர்களுமவருதல். சேனைத்தலைவர்கள் அழகானந்தனை அரசனிடம் ஒப்பித்தல். அரசனசிறைகாவலாளர்களிடம் அவனை ஒபபித்தல். பிறகு யாவரும் போதல.]

---

## மூன்றுங்களம்.

இடம்:—சிறைசசாலே. காலம:—காலே.

நடன்—௨

அழகானந்தன்:—(திடுககிட்டெழுந்து) எனன கனவுசண்டேன? என்ன கனவுகண்டேன்? ஒன்றுநதோறறவில்லை! நனவிலுள்ளனகனவிற் காண்போமென்கிறார்களே! விநதையா யிருக்கின்றது! யான்சிறிதும் நினைக்காதகாரியங்களைக கனவிற்சண்டேனே! யானஅழகானநதனோ? அல்லனோ? சிறிதுகாலததில் உயிர்துறப்பது நிச்சயமாயிருக்க யான்என கொடுமையாலிறந்த சரசாங்கியைக்கணடு அவளைச சச்சநதமகாராஜன எதிரில மணம் புரிநது இளமைப் பருவததிற குரிய சகலவித இன்பதுன்பங்களை யநுபவித்துக்கொண்டு ஒரு தேசத்தை அரசாளவநதாசக் கனவுகண்டேனே! ஆச்சரியம்! ஆச்சரியம்!! என்னைப்போன்றமுழுமூடர்களும் உலகில்உண்டா? இதை நிஜமென்றே எணணிக் கனவில் எனன ஆநந்தங்கொண்டேன! பெருநதுனபம் அநுபவிப்பதின்மத்தியிற் சிறிது சநதோஷமா? அறபசநதோஷம! அறபசந்தோஷம்!! மானுடஜன்மத்தின தன்மையிபபடியேயிருககினறது! ஜனனமுதல் மரணம்வரை துன்பமநுபவிப்பதே பெருங்காரியமா யிருபபதைக் கண்டிருகக, நடுவிலவரும் சிறிது சந்தோஷத்தைககருதி எனனென்னசெயயத துணிகின்றார்கள்? அச்சந்தோஷம் மனத்தினலநுபவிப்பதோ? அனறித தேசததினற் றனநுபவிப்பதோ? இவை யெல்லாம் இனபமாகுமோ? சுசங்காட்டுவது போலவே நின்று தூககமிசப் பின் காட்டுமெனபதை யறிவதில்லை! யானும் ஒருமானுட னல்லனோ? இஃதென் ஆச்சரியம்? சரசாங்கியைக்கண்டு மணம்புரிந்தேன! சூரிய சந்திரர்கள் தெற்குவடக்காக முறைபிறழ்ந் தோடினபோதிலும் எனதுகாதறகினியளாகியசரசாங்கியையினியிப்பூமியிற் கண்ணுறக் காணவுங் கூடுமோ? இல்லை! இஃதன்றி மற்றவைகளைக் கனவிற்

கண்டிருப்பேனாயின் ஒருவாறு நம்புதலுங் கூடும்! இஃதென் வீண் எண்ணம? எனனை அரசன அழகானந்தன் என்று கண்டு பிடித்தனனாயின பிழைப்பது கூடவா? ஒருவேளை என்னை மன்னித்தாலும் அரசனுவதா? முடியாதகாரியம்! அதுவுங் கூடுமானாலும் யான் சரசாங்கி யில்லாமல் ஒருகணமும் உயிர்தாங்கியிருப்பேனோ? எனனைககொலலத் தாமதஞ்செய்கிற ஒவ்வொரு கணத்தையுங் கடுநரகிற கறபகாலம துனபமநுபவிப்பதுபோ லல்லவா நினைக்கினறேன? எனது சரசாங்கி கனவினகண்ணுவது எனனை வன்னெஞ்சனெனறெணணுது ஒருபொருட்டாய் மதித்துத தனது முகததைக கவிழ்த்திக் காட்டினளே! அக்கனவு எனக்குச் சறறு நீட்டித்திருககலாகாதா? என ஆநந்தம் அளவில்லாமற பெருகியிருககுமே! யான எதிலுங்கொடுததுவைககாதவன்! போர்முனையிலிறநது வீரசுவாககமடைந்திருகக வொண்ணுதா! கொலையாளிகளாலே கழுவேற்றப்படவேண்டுமா? எனதுகண்ணுட்டியைபபின்றொடர்ந்து செலலுமபடி ஒரேகணததில் வாளாலவீசிக்கொன்றனராயின் அவர்களுககு எவ்வளவு நன்றிபாராட்டுவேன்! மனதே! ஏனவீணனஎண்ணததிற் காலங்கழிக்கினருய?

"பேதைமை யென்னும வித்திற் பிறநதுபின் வினைக ளென்னும்
வேதனை மரஙக ளுறி வேடைகைவோ வீழ்த்து முற்றிக்
காதலுங களிப்பு மெனனுங கவடுவிட டவலம பூத்து
மாதுய ரிடுமபை காய்தது மரணமே கனியு" மனறே

மறந்தனையே!—உனககுள்ள சொறபகாலத்தை ஈச்சுரனைத துதிததலிற் செலவழிததாற சிறிதுநனமையாவதடையலாமே! மாண்டவர்மீண்டுவருவரோ? அறிவிலாதாய! அவனைததுதிததுஅவனது சரணரவிநதங்களைச் சிநதிததாலுமநனமையுண்டு!

(பாடுதல்.)

இராகம - நாதநாமக்கிரியை. தாளம்-ஆதி.

பல்லவி.

மகாதேவசமபோ - ஹர ஹர சிவ சிவ
மகாதேவ சமபோ.

அநுபல்லவி.

தகாத மார்க்கந் தவிர்த் தெளியேனைக் காக்குந்
தருண மிதுவே நிதம் சமஸ்த புவன நோக்கும (மகா)

சரணங்கள்.

திரபுரா தியரை யெரியச் சிரித்தவா
தெவ்வரககர் கெட முருகனை யளித்தவா
கரியின தாண்மை யொடுங்க வுரித்தவா
காலனைப புவிதனின் வீழ வுதைத்தவா (மகா)

கருது மாலினிழன் மேவி யிருந்தவா
கமலனுதி சுரர்நுதிக்குப பரிந்தவா
சுருதிமுடியிற்றூய நடனம் புரிந்தவா
சுத்த ஜோதி மயமாக விரிந்தவா (மகா)

சர்வஜீவ ரக்ஷக சுகுணா
சந்த மிலகும்பரி மளமலர்த் தாளா
பர்வதராஜ குமாரி மணாளா
பனிமலர்க் கொன்றையணிந்தவெண்டோளா (மகா)

"அடுத்தானை யுரித்தானை யருச்சுனற்குப் பாசுபதங
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சினமல்கு கயிலாய
மெடுத்தானைத் தடுத்தானை யென்மனததே வைத்தேனே"

சரசாங்கி! உனனை யான் மறக்கவேண்டுமென்று எண்ணினுலும என்மனமுன்னை மறககவில்லையே!

(படுத்துக்கொள்கின்றான்.)

[சிறைகாப்பாளர் வருதல்.]

முதற்சிறைகாப்பாளன்:—இவன் மிகவும் ஆயர்ந்து நித்திரை புரிகிறான டா! முகம எவ்வளவுதிவ்யமாகவிளங்குகின்றது! பாாததனையா?

இரண்டாவதுசிறைகாப்பாளன்:—ஆம். தாமரை மலரினுந் திவ்யமுகமே! இவனையேனநம்மரசர் இச்சிறையிலிட்டனர்? உனககேதாவது தெரியுமா? சொல்லு!

முதற்சிறைகாப்பாளன்:—எனக்குத் தெரிந்தவரையில் யான்சொல்லுகின்றேன். இவன் போர்க்களத்தில் ஒன்றியாய் நின்றிருந்தனனும்! இவன பகைவனே யென்றெண்ணி நம்மரசர் இவனைச்சிறையிலிட்டிருக்கின்றார். ஒருகால்சிரசிழப்பானோ? என்னவோ?

இரண்டாவதுசிறைகாப்பாளன்.—சிரசிழக்கும்படியா நேரிடும்? எனக்குமனம் பொங்குகின்றது! மனம் பொங்குகின்றதப்பா! என்னையறியாமல் எனக்குக்கண்ணீர் பெருகுகின்றது! யான் கொடிய

வன்னெஞ்சுடையவனாயினும் இவன்மீது இரக்கந்தோன்றுகின்றது! இவன சாகக்கூடாது!

முதற்சிறைகாப்பாளன்:—பார்தனையா இவன் முகத்தை? கவனித்துப் பாரடா! இவனிடத்தில் அழகானந்தன் சாயையிருக்கிறதே!

இரண்டாவதுசிறைகாப்பாளன்:—ஆமாமடா! ஆம். அழகானந்தனைப் போலவேயிருக்கின்றான! இவன்சாக நாம்பார்த்திருக்கக்கூடாது! எனமனந்துணியாது! எனமனந்துணியாது!!

முதற்சிறைகாப்பாளன்.—அரசன் கொல்லும்படி ஆக்ஞாபித்தால்!—

இரண்டாவதுசிறைகாப்பாளன்:—சிறைச்சாலையினின்று தப்பிப்போகும்படி விடடுவிடுவோம!

முதற்சிறைகாப்பாளன்:—தப்பிப்பிழைத்தோடும்படி விட்டுவிடப்போகின்றாயா? நம்தலைபோயவிடுமே!

இரண்டாவதுசிறைகாப்பாளன்—யான் போனாலும் போகின்றேன! அவன பிழைத்திருக்கட்டும்! அவன் பிழைத்திருக்கவேண்டும! இவன் அழகானந்தனதானென்று என்புத்தியிற்படுகின்றது.

முதற்சிறைகாப்பாளன்—அழகானந்தனாயிருந்தால் அவன் பிழைக்கவே வேண்டும! நாமிறந்தாலுமிறப்போம்! அவனுயிருட னிருந்தால் நல்லது! எவ்வளவுநல்லவன்!

அழகானந்தன்:—(விழித்து) தோழர்களே! கொஞ்சம் ஜலம்வேண்டும்! மிகவுந் தாகமா யிருக்கின்றது!

சிறைகாப்பாளரிருவரும்—நீரேவெளியிற்போய் அருந்தலாமே!

முதற்சிறைகாப்பாளன்-(தனக்குள்)இவன் குரலால்அழகானந்தனதான்!

அழகானந்தன்.—யான் சிறையிலிடப்பட்டிருக்கிறபோது வெளியே சென்று நீரருந்திவருதல தக்கதன்று! அரசனுக்கு கடநதபழி நமமைச்சாரும. ஆதலால்—

இரண்டாவதுசிறைகாப்பாளன்:—நீங்களே போய்—(தூதன்வருதல்.)

தூதன்—யாரடா! காவற்காரர்களே! இங்கு நும்மிடம் ஒபபிததபகைஞனை என்னுடன் அனுப்புங்கள்!

முதற்சிறைகாப்பாளன்:—உன்னுடன் அனுப்புவதா? ஏன் உன்னுடன அனுப்பவேண்டும்?

தூதன்:—ஆம். ராஜா உத்தரவு!

இரண்டாவதுசிறைகாப்பாளன்:—ராஜா உத்தரவா?—என்ன அது?

தூதன்:—சபைக்கு அழைத்துவரும்படி அவர்கட்டளை!

சிறைகாப்பாளரிருவரும்:—அப்படியானாற் சரி! அழைத்துக்கொண்டு போ! (அழகானந்தனும் தூதனும் போதல்.)

**முதற்சிறைகாப்பாளன்:**—இவனை ராஜா இப்பொழுதுபார்த்தாற் கொல லுமபடி கட்டளையிடமாட்டார்! ஒருவேளை எனனவோ?

**இரண்டாவதுசிறைகாப்பாளன்:**—யார்க்கும் இவனைககொல்ல மனமே வராது. அவனைததப்பிப்போகும்படி யுக்திசொல்லிக் கொடுத்தும அவன்போகமாட்டேனெனறுனே!

**முதற்சிறைகாப்பாளன்:**—அழகானந்தன் அன்றி மற்றவர்களானல் ஓடி ப்போயிருபபாாகளடா!

**இரண்டாவதுசிறைகாப்பாளன்:**—ஆம். இவன அழகானந்தன் தான! இதென்னடா சத்தம்? (போதல.)

**முதற்சிறைகாப்பாளன்**—யானும் வருகின்றேன். (போதல்.)

---

## நான்காங்களம்.

இடம்:—காஞ்சியரண்மனைசசபாமண்டபம். காலம்:—நண்பகல.

**நடர்:**—சச்சந்தன், துணநிதி, விக்கிரமன், வீரசேனன், முதலியோர்.

**சச்சந்தன்:**—எனது பிரிய நேயர்காள்! உங்களாலே யான் எனதுராஜஜி யததைப் பெறறவனுனேன்! நீங்கள்செய்த பேருபகாரததிறகு யான் புரியுங் கைமமாறெதுவாகும்? எனது ராஜஜியததையே யான் பரிசாயளித்த போதிலும் அதுவும் குறைவே யாகும்!— போர்க்களத்தில் வெகுவிரைவாக நுழைந்து நமது படைகளை நிலைநிற்கச்செய்து, போர்புரிந்து, பகைவரைத் தலைகாட்டவொட டாமலோட்டிச் சந்திரசேகரனைககொன்ற இளங்காளை எங்குளன? அவ்வீரனையான் கண்ணுறல்வேணடும்! யான் கூறியபடி யவனைக கண்டுபிடித்தீர்களா?

**துணநிதி**—மகாராஜா! அச்சிறுவன் வேற்றுருவமைந்துவந்த அருச்சுன னிலும் பதினமடங்குவிரைவாகப்போர்புரிந்து பகைவர்களைப் புற ங்காட்டச் செயதனன்! அவனுலே தாங்கள் இச்சம்பத்தடைந தீர்களே யன்றி எங்களால் அன்று!

**சச்சந்தன்:**—அச்சிறுவனைப் பற்றிச் சபையோர்களே! உங்களுக்கேதே னுந் தெரியவராதா?

**சபையோர்கள்:**—யாங்கள் எங்குந்தேடியும் எங்கள் கண்களுக் ககப்பட வில்லை! அவர் எங்குற்றனரோ?

**சச்சந்தன்.**—எங்குங்காணீர்களோ? இருக்கட்டும். வைத்தியர் ஏன் இன்று சபைக்குவரவில்லை! சீக்கிரம் இந்துவதனையும் சுகுணனும் இங்கு வந்துசேரட்டும்.

**மந்திரி:**—சேவகா! சீக்கிரம் போய் அவர்களை யழைத்துவா.

**சச்சந்தன்** —(தனக்குள்) கனகாம்புஜம் மிகவும வஞ்சனைக்காரி யென்று சிஙகாரவல்லியாற்றெரிந்துகொண்டோம்! கனகாமபுஜமும் இறந தாள! சிங்காரவலலியணிநதுகொண்டிருந்த முத்திரைப் பதக்கத் தாலன்றோ யாவுநதெரிநதுகொண்டனம! நீங்காத சிறையி லிட் டனம' ஆராயந்துபாராமற் பெண்சாதிவார்த்தையை யுண்மையெ னறே நமபி மதிமோசமபோய்விட்டோம்! நமது அருமைக் குமா ரத்தி சரசாஙகி தவறிவிட்டதும கனகாமபுஜததின சூதினுற்ற ன்றோ? அன்றுமுதல் அவள் தமபியையுங் காணேம்! அழகானந் தனமேற்குறறஞ்சாட்டி யவனைத துரததிவிட்டனள்! நயவஞ்சகி! எனனகாரியஞ்செயதனள! எனனகாரியஞ்செய்தனள்!! அவள் மயககததில்மூழகி யாவறறையுமறநது அறிவழிநதேனே! சநதிர சேகரன போர்ககுவநதான்!யாவறறிறகும காரணம் இவளேயன்றி வேறிலலை! இறநததே நன்மையாயிறறு! சிங்காரவல்லியா லகப் பட்டுககொணடோமென்றல்லவோ உயிர்நீததனள்! இதன் உண் மையை வைத்தியனைக்கேட்டுத் தெரிநதுகொள்ளலாமென்று சிங் காரவல்லி கூறவிலலையா? (சபையோரைநோக்கி) வைத்தியர்ஏன் இனனும இனறுவரவிலலை? முகுந்தரைபபற்றி ஏதாவது உங்கட் குத தெரியுமா? (வைததியாவர) வைததியரே! வந்தீரா! யான் கேட்பதறகு உண்மையானவிடையை யளித்துவிடும்! தபபிப்பொ யபேசினீராயின தலைபோயவிடும!

**வைத்தியர்** —மகாராஜா! கோபம் வேண்டாம்! தடையில்லாமல் எனக குதெரிநதவறறைக கூறிவிடுகினறேன. மனனிககவேண்டும். மகா ராஜா!

**சச்சந்தன்** —இறநத கனகாம்புஜத்திறகுப பாஷாணததை முன்பு கொடுத் தாயாமே' நிஜநதானா? உண்மையையுரையும்.

(இநதுவதனையும் சுகுணனும் வருதல்.)

**வைத்தியர்.**—மகாராஜா! யான்உண்மையைக்கூறிவிடுகினறேன். எனக குயிர்ப்பிச்சை கொடுக்கவேண்டும்!•மகாராஜா! கொஞ்சநாளைககு முன்னே ராணியவர்கள் சிங்காரவலலியிடம் பாஷாணமருநது கொண்டுவநது தம்மிடமேகொடுக்கும்படியாயச் சொல்லியனுப்பி னார்கள! அபபடியே —

**இந்துவதனை:**—(கூக்குரலிட்டு) அம்மா! அம்மா!! நீஇறந்தாயோ? இறந் தாயோ!

**சச்சந்தன்:**—ஓ! இந்துவதனே! இஃதென்னை கூக்குரல்? என்ன சமாசா ரம்? என்னசமாசாரம்?

**இந்துவதனை:**—எனது பிராணேசுவரி சரசாங்கியம்மை யிறந்தாளே! யானென்ன செய்யப்போகின்றேன்? ஐயோ!

**சச்சந்தன்:**—சரசாங்கியா இறந்தாள்? என்ன பிதற்றுகின்றாய! பயித்தியமா?

**இந்துவதனை:**—மகாராஜா! எனக்கு நாவெழவில்லையே! யான் என்ன செய்வேன்! சுகுணரைக் கேட்டால் அவர்சொலவார!

**சச்சந்தன்:**—சுகுண! என்னசொல்லப்போகின்றாய்? இன்னமும் பொய பேசப்பார்க்கின்றாயோ? சரசாங்கி எங்கே? உனனையிதோ சித்திரவதைசெய்ய உத்தரவுகொடுக்கப்போகின்றேன்!--என்னருமைப் புதல்வியே!

**சுகுணன்:**—மகாராஜா! யான் இப்பொழுது உண்மையையே கூறப்போகின்றேன்! தாங்கள் என்னைக் கொல்லும்படி உததரவளிப்பினும் சரியே!

(வச்சிரவாகுதேவன், துன்மதி, அழகானந்தன், சரசாங்கி வருதல்.)

**சச்சந்தன்:**—வச்சிரவாகுதேவரே! வாரும்! நீரிப்பொழுது சிறையிலன்றோ விருக்கின்றீர? எமது நாட்டைக் காரணமின்றி வீணை குரோதம் பாராட்டிப் படையெடுத்து வநதமையாலனறோ வலிகுன்றி வெந்கிட்டோடினீர்கள்? திக்கற்றவர்க்குத தெய்வமேதுணையென்பதுபோல் நீங்கள் பெரும்போர்வீரராயினும் அறநெறிதப்பியொழுகியபடியா லன்றோ இம்மூவரும் மற்றொரு சிறுவனும் எமக்குப் பக்கத்துணைவரநீங்கள் தோற்றவர்களானீர்கள்? அன்றி நும மரசனும் இறந்தானே! இனி என்னசெய்யப்போகின்றீர்?

**வச்சிரவாகுதேவன்:**—என்ன செய்யப்போகின்றேன்? தெய்வசங்கற்பமொன்றிருக்கிறதென்பது தெரியாது எம்மரசன் படையெடுத்து வந்தனன்! யான எப்பொழுது தங்கள் கைவசததி லிருககின்றேனே அப்பொழுதே தங்கள ஆக்ஞைக்குட்பட்டவனதானே! ஆனால் ஒருவரமாததிரம்!—இதோ நிற்கினறானே இச்சிறுவ்ன்! இவனைமாத்திரம் காப்பாற்றுவதாக வாக்களிக்கவேண்டும்! இப்பிள்ளையைப் போலும் நற்குணநறசெய்கை யுடையவர்களை யான் எங்குங்கண்டதேயில்லை!

**சச்சந்தன்:**—இச்சிறுவனை யாம் காப்பாற்றவேண்டும்! அங்ஙனேயாக! அருகில்நிற்கும் இவரார்? நுமக்குத்தெரியுமே?

**வச்சிரவாகுதேவன்:**—இவர் எம்மரசரது பிராண நண்பராவார். இவர் துன்மதியென்று பெயருடையவர்!—

**அழகானந்தன்:**—அடே! துன்மதி! நீ இன்னும் பிழைத்திருக்கின்றாயோ!

எனகையில் வாள் இல்லையே உன்னைவெட்டிச்சாய்ப்பதற்கு !

(அழகானநதன் கையையோங்கித் துன்மதியைக் குத்தபபோதல்.)

சரசாங்கி —பிராணநாதா ! அவரை ஏன்கோபித்துக்கொள்ளவேண்டும் ?

அழகானந்தன் —ஆ ! என்னருமைக்கண்ணே ! சரசாங்கி ! சரசாங்கி !!

(அழகானநதன அவள கையைப பிடிக்கப்போதல்.)

[சரசாஙகியும இந்துவதனையும சபையினினறும நழுவிவிடுதல்.]

கணணே ! நீ உயிரோடுமிருககினறுயா? எனககெவெலலாம் மெய்யாகுமோ? நீ எமனகையினினறும எவ்வணநதவறினையோ ? என் கணணே ! எனகாதறகிளியே !

சச்சந்தன் —இவனெனன பித்தம்பிடிததவனைப்போல் என்னவோகுழறுகினறுன ! நீயார ?

அழகானந்தன்.—யான் இவ்வரண்மனையில் வளர்ந்துவந்தஅழகானந்தன் !

சச்சந்தன் —அழகானநதன ! இங்கு எப்படிவநதுசேர்நதாய் ? இவ்வூரை விடடுததூரததியிருக்க நீ ஏனஇங்குவரவேணடும் ? இவரை ஏன நீ அடிககசசெனறனை ?

அழகானந்தன்.—மகாராஜா ! நும்புதல்வியாகிய என்னுயிர்க்காதலி சரசாஙகியுயிர்ககும் என்னுயிர்க்கும் நுமமுயிர்க்கும் கேடுசூழ்நத பரமசணடாளனுகிய இவன் உயிரோடிருககலாமா ? போாககளத்திற்றங்களுக்குப படைததுணையாக வநதபோதிவனைக் கான்முறிய அடிததும் எபபடியோபிழைததுவந்தான ! அவன உயிரோடிருந்தால உலகமெல்லாம் ஒருங்கே கேடடையு மாதலால் அவனையிச் சபைமுனனரே கொலைபுரியத்துணிந்தேன். அதனுல் என்சரசாங்கியையுங் கணணுறறேன !—

சச்சந்தன்:—அப்பா ! அழகானந்தா ! நீயோ எமக்குப் படைத்துணையாக வநதனை ? நீ கூறியபடி இவன் நம்மையெலலாங் கொல்லுமபடி எனனசூழச்சிசெயதனன ? நீ சொலலுவது மகா ஆச்சரியகரமாயிருககினறதே !

அழகானந்தன்:—நான் ஏன் சொல்லவேண்டும் ! அவனுக்குக்கட்டளையிடு வீாகளானுற்றுனே சொல்லுகின்றுன்.

சச்சந்தன்:—அடே ! துன்மதி ! உண்மையை விளங்கக் கூறுகின்றுயா ? அலலது சிததிரவதைபுரியக் கட்டளையிடட்டுமா ?

துன்மதி:—மகாராஜா ! தாங்கள் எவ்விதங்கட்டளையிட்டபோதிலும் அவ்வண்ணமே நடக்கச் சித்தமாகக் காத்துக்கொண்டிருக்கின்றேனே ! என்காலோ முறிந்துபோய்விட்டது ! நான் இன்னும் இரண்டு நாட்பொழுதிலேயே யிறந்துவிடுவேன் ! யான் ஏன் ஒளித்துப்பேச வேண்டும் ? நடந்தது நடந்தபடியே கூறிவிடுகின்றேன் !

**சச்சந்தன்**:—என்னதாமசம்?

**துன்மதி**:—யான் சோழவளநாட்டிலே கும்பகோண நகரத்திற் பிறந்தவன்! விதிவசத்தாற் சோழநாட்டுமன்னருக்குச் சிநேகனாயினேன்! அப்படியிருக்குநாள்களில் இம்மோதிரம் எனக்குக்கிடைக்கும் வழி நேர்ந்தது!

**சச்சந்தன்**:—இம்மோதிரம் எனதருமைப்புதல்வியதன்றோ? இஃதெப்படி யுன்னிடம் வந்து சேர்ந்தது?

**துன்மதி**.—சோழநாட்டில் எனதுநண்பர் ஜெயவீரர்வீட்டில் வேடிக்கையாகப்பேசிக்கொண்டிருக்கும்போது அழகானந்தரிடம் பந்தயம் போட்டுச்செயித்தேன்!

**சச்சந்தன்**:—எதற்காகப் பந்தயம்போட்டிதைக்கொண்டாய்?

**துன்மதி**:—கற்புக்கரசியாகிய தமதுபெண்ணை!—எனக்குவாயுங் கூசுகின்றதே! யான் எப்படி யிச்சபையில் வெட்கமின்றி யுச்சரிப்பது!

**சச்சந்தன்**.—எமதுபெண்ணை? என்ன? என்ன? சொல். ஏன்தாமதிக்கின்றாய்?

**துன்மதி**:—ஒருநாள் உலகத்தில் பதிவிரதைகளுண்டோவென்பதைப்பற்றி வார்த்தை சொல்லும்படி நேர்ந்தபோது ஒவ்வொருவரும்ஒவ்வொருவிதமாகச்சொல்ல அழகானந்தர் பத்தினி யுலகில உண்டென்றும் தன்பத்தினியே பத்தினிகளுக்குத் திலகமென்றுங்கூறினர்!

**சச்சந்தன்**:—சீக்கிரம்சொல்!

**துன்மதி**.—அப்பொழுது யான் உலகிற்பத்தினியொருத்தியும் இல்லையென்று சாதித்து பிறகு, அழகானந்தர் சரசாங்கியம்மையின் அழகையும் கற்பின்றன்மையையும் புகழ்ந்துகூற யான் அவரை யநுபவிக்க வெண்ணங்கொண்டேன்.

**சச்சந்தன்**.—பிறகு!—

**துன்மதி**:—யான் கோபமூட்டி இந்தமோதிரத்தைப் பந்தயமாக வைக்கும்படிசெய்து இங்குவந்து அம்மங்கையைப் பரிசோதிக்க என் எண்ணம் நிறைவேறவில்லை! பிறகுபெட்டியில் ஒளித்துவந்து கைவளையைக்கழற்றிச்சென்று அழகானந்தரிடங் காண்பித்து—

**சச்சந்தன்**:—என்னசெய்தாய்?

**துன்மதி**:—அவளை யணைந்துவந்தேன் என்று பொய்கூறிஅவருக்கு அவளிடத்துக் கோபத்தை யெழுப்பி இம்மோதிரத்தைக் கவர்ந்து கொண்டனன்!

**சச்சந்தன்**:—இவ்வளவுதானா? இன்னமுமுண்டா?

**துன்மதி**:—இல்லை!

சச்சந்தன் —இல்லையா ! இப்பாதகனைச் சிறையிலடையுங்கள் ! கொல்லுங்கள் !

துன்மதி —இல்லை ! இல்லை '' என்றுண்டுரைலாலேயே 'சந்திரசேகரன்—

(துன்மதியைக் காவலாளிகள் பிடித்திழுத்துக்செல்கின்றனர்.)

வச்சிரவாகுதேவன் —இத்துஷ்டனைய சொடுந் துன்மார்க்கனது வார்த்தை கேட்டு எமமரசன படையெடுத்துவந் திறந்தனன ! போர்க்களத்தில் என்னைப்புறங்காட்டியோடும்படி துரத்தினன ! ஆ ! இவன காரியம் எப்படியிருக்கின்றது !

சச்சந்தன் —வச்சிரவாகுதேவரே ! நம்மிடங் குற்றேவல் புரிந்துவந்த சிறுவரை எங்குக்கண்டுபிடித்தீர் !

வச்சிரவாகுதேவன் —யான் காட்டுவழியாக வரும்போது அங்கு மூர்ச்சையாய்க்கிடந்ததைக் கண்ணுற்று எழுப்பிக்கேட்க அருகிற் சிரசினறியிருந்த முண்டமொன்றைக் காண்பித்து அவர் தம் எஜமானனென்று கூறினர். யான் தேற்றியெனனிடமே வேலைக்காரராயமரும்படிவேண்ட அவரும் அங்ஙனமே ஒத்துக்கொண்டனர் !

சச்சந்தன் —காட்டில் உயிர்சோர்ந்திருக்கக்கண்டீரோ? அருகிலொருதலையற்றமுண்டம ! தன்எஜமானன! இதென்ன ?

துணநிதி.—மகாராஜா ! யாம்கூறுவனவற்றிற்குச் சிறிதுசெவி சாய்க்கவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகின்றேம். இக்குழந்தையைப்பற்றி எங்களுக்கும் சிறிதுதெரியும். இவர் காட்டில் வழிதப்பி எங்கள் குகையில் வந்திருக்க நாங்களசிலதினங்களாக ஆதரித்துவந்தோம் ! ஒருநாட்காலையில் தேசஞ் சிறிதசௌக்கியமெனச் சொல்லக் குகைக்கண் இவரைநிறுத்தி நாங்கள் வேட்டையாடவிரும்பிவெளியே சென்று சீக்கிரத்திற்றுனே திரும்பினேம் !

விக்கிரமன் —மறந்துவிட்டீரோ ! நோயாக விருக்கிறதென்று ஏதோ கையிற்கொடுவந்தமருந்திற சிறிதருந்தவில்லையோ ?

துணநிதி·—யான அதைக் கவனிக்கவில்லை ! பிறகு நாங்கள் திரும்பிவருமுன்னரே இவரிறந்ததுபோலிருந்தமைகண்டு விக்கிரமனஎடுத்துவர மிகவுந்துக்கித்து இறந்தாரெனக்கருதி அக்காட்டிற்கிடத்திப புஷ்பமும் தழையும பரப்பிக் குகைக்குச்சென்று மிகவும் வருந்தி யிருந்தோம ! பிறகு—

சச்சந்தன்:—அங்கொருமுண்ட பிருந்ததாக நம் வச்சிரவாகுதேவர் கூறுகின்றரே ! அதைப்பற்றி நீவி ரேதாவ தறிவீரா?

வீரசேனன் —அஃதென்னுடன்போர்புரிந்திறந்தவர துதலையற்றமுண்டம் பிறகு தந்தையார் அவர் முகுந்தரென் றுரைத்தார்.

**சச்சந்தன்:**—முகுந்தனு நினகரததா லிறந்தனன்?

**வீரசேனன்**—ஆம்! என்னைக் கோபமூட்டியதன்றி என்னைக கொல்லும் பொருட்டு வாளையோச்சிவந்தமையின்யான்கொனறேன்!

**சச்சந்தன்:**—நீர் எனக்குப்பேருபகாரியாயிருப்பினும் தண்டனைகருட்படும்படி நேரிடுகின்றதே!

**சுதுணன்:**—மகாராஜா! முகுநதர் என்னைப் பயமுறுததி அழகானந்தருடைய உடைமையை எனனிடங்கொண்டு தமதுகுமாரததி சரசாங்கியம்மாளையும் அழகானந்தரையுங் கொனறு வருமபடியாக வலலவோ சொல்லாமலே புறபபட்டுபபோயினா!

**சச்சந்தன்.**—எமது குமாரததியைக் கொல்லவா வெழுநதனன முகுநதன!

**துணநிதி:**—மகாராஜா! இத்தகைய முகுநதனுக்காகவோ தம்மருமைப் புத்திரனைக் கோபிப்பது?

**சச்சந்தன்.**—இஃதென்ன ஒன்றினபின்னொன்று மூளைக்கின்றது! எனதருமைப்புத்திரன்! கனவுதானோ? அலலது நனவோ? அனறி இந்திரஜாலமோ? அவர்கள்குழந்தைப் பருவத்திலேயே தவறினவாகளாயினரே!

**துணநிதி**—மகாராஜா! யான் குணநிதியல்லனோ?

**சச்சந்தன்:**—குணநிதி! உம்மையிபபொழுதுதான்தெரிந்துகொண்டேன். எமது புததிரர்களை நீராகாப்பாறறினீர்? என்னருமை மக்காள்!—இழந்தபுததிராகளையும் புததிரியையுங் கண்டயானமிகவும் சநதோஷசாகரத்திலாழ்நதேன! ஆ! ஆ! திருவுளச்சம்மதம இப்படியா இருநதது! சுகுணா! சரசாஙகி இவ்விடததினின்றும சென்றமை நீயறியாததனரே!

**சுதுணன்:**—மகாராஜா! அழகானந்தர் துன்மதியின் கைப்பாவையாகி, அவன் கூறியபொய்யினைமெயயெனநம்பிச் சரசாங்கியை வஞ்சகமாயழைததுக கொண்டுபோய்க் கொன்றுவிடும்படி எனககுக் கடிதமெழுதியதன்றித தனது மனைவிகளும் எனனைப்பின்றொடாநதுதன்னைப்பார்க்கவரும்படியாகவும் கடிதம் எழுதினா். கடிதத்தைக் கண்ணுறறு என்னைமிகவும் வேண்டயான் அவருக்குத்துணைசென்றேன! வழியில் உண்மையுணர்நது தனனைககொல்லும்படி எனனைபபலவாறுவேண்டியும் யான் மறுத்துக் காஞ்சீபுரிக்கு வந்தருளும்படிபிரார்த்தித்தேன! ஒரேபிடிவாதமாக யான் காட்டேசெனறு கணவனைக்காண்பேனெனறுர்கள்! அப்பொழுது தங்கள் தாமபததினியவாகள் எனக்கு அமிாதசஞ்சீவியெனறு கொடுத்த மருந்தையவாகளிடங்கொடுததேன்!

**சச்சந்தன்:**—கதை வெகுநன்றுயிருக்கின்றது! நல்லது, வைத்தியரே! நீர் கொடுத்தமருந்துதானோ அது? ஏன்ஐயா வைத்தியர்களுக்கு ஜீவகாருண்யம்வேண்டாமா?

வைத்தியர் —மகாராஜா! என்மேற்கோபிக்கலாகாது! யான் உள்ளதை உள்ளவாறே சொல்லுகின்றேன்! என்னைப் பாஷாண மருந்துவேண்டுமென்று கேட்டார்கள். யான் அவர்கள் குணந்தெரிந்து மயக்கங்கொடுக்கும் மருந்துதான் கொடுத்தேன்! என்மேற் குற்றமொன்றுமில்லையே!

சச்சந்தன் —சரி! சுகுண! உனக்கெப்படி இம்மருந்து வந்துசேர்ந்தது!

சுகுணன் —சிங்காரவல்லியம்மை என்னையழைத்துக்கூப்பிட்டுப்போய் இராணியவர்களிடம் விட்டார்கள்! இராணியவர்கள் சரசாங்கியைத் தன் தம்பிக்கு இணங்கும்படி செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டு இம்மருந்தை அதற்கு முன் கூலியாகக் கொடுத்தார்கள்!

சச்சந்தன் —எல்லாம் நன்றாகவே நடந்தேறின! சரசாங்கியெங்கே சென்றனள்? சீக்கிரத்தில் அழைத்துவாருங்கள். சபையோர்களே! யான் (சேவகர்கள் போதல்.) சொல்வனவற்றை மிகக் கவனமாகக் கேட்கவேண்டும்! நடந்த சங்கதிகள் யாவும் உங்களுக்கும் நன்றாய் விளங்கியிருக்கும்! இறந்த ரத்தினங்களையெல்லாம் இன்று கண்டெடுத்தேன்!—எமது குமாரத்திக்கு மணாளன் அழகானந்தனேயாயினன்! நமது குமாரர் இருவர்களும் நம்மிடமேவந்து சேர்ந்தனர்கள்! யானும் முதிர்ந்தவயதுடையவனாகிவிட்டேன்! ஆதலின் சரசாங்கியின் புருஷனுவான எவனோ அவனுக்கே இந்நாட்டரசாளுகையைக் கொடுக்கும்படி முன்னே நிச்சயஞ் செய்துவிட்டபடியால் இனி அதனின்றும் எப்படி மாறுவேன்? பிள்ளைகளிருக்க மருமகனுக்களித்தல் நீதியோ?

விக்கிரமன் —தந்தையே! நாங்கள் இன்றுகாறும் இவரையே தந்தையென்று கருதி வேடர்போல வசித்திருந்தோம்! இப்பொழுதன்றோ தமது மக்களியாமென்று தெரிந்துகொண்டனம்! தாங்கள் இவ்வழகானந்தருக்கே பட்டங்கட்டிவிடலாம்! மனத்திலுதித்தவண்ணமே செய்தல் கடன்! சந்திரசேகரனைக்கொன்று இவ்விராச்சியத்தை நிலைநிறுத்தினவரிவரேயாகலின் அவருக்கே இந்நாடுரித்து! இவ்வண்ணம் நடத்தலே நீதி! எமது தங்கையை எம்முயிரினும் பதின்மடங்கதிகமாகவே நேசிக்கின்றோம். அத்தகைய தங்கையினது பிராணநாயகரல்லரோ இவர்?

குணநிதி —மகாராஜா! தமது புத்திரர் அவ்வெண்ணமுடையராயினும், அவ்விதமே புத்திரர்களிருப்ப மருகற்குப்பட்டங்கட்டுதல் ராஜநீதியாகாதே! ஆயினும் தமதுமனோரதம் ஈடேறும்படியான விஷயமொன்று கூறுகின்றேன்! இப்பொழுது சோழநாடும் நமதேயாகிய தன்றோ? அந்நாட்டரசனைக்கொன்று வெற்றிகொண்டார் அழகானந்தரேயாக அந்நாடவற்குரித்தாகும்! அவ்விராஜ்ஜியத்தை

யவருக்குப் பட்டங்கட்டி மகளையும் மருமகனையும் அங்காட்டிற் குடியேற்றி விடுவோமே! இவ்வாறுசெய்தல் நலமெனவென் சிறு மதிக்கொருவாறு தோன்றுகின்றது!

**சச்சந்தன்:—** நீர்கூறியது சகலவிதத்திலும் நன்மையாகத் தோன்றுகிறது! அங்ஙனமே அழகானந்தருக்குச் சோழநாட்டைக்கொடுத்து விடுவோம்! (வச்சிரவாகுதேவனை நோக்கி) நீரும் சந்திரசேகரனிடமிருந்ததுபோலவே யிவரிடமும்சேனுபதியாயிருக்கவேண்டும்! சுகுணு! உனக்கு முதன் மந்திரிப்பட்டமளித்தனம்!

**வச்சிரவாகுதேவனும் சுகுணனும்:—** இக்ஷடப்படியே நடக்கக்காத்துக் கொண்டிருக்கின்றனம்!—(சரசாங்கியும் இந்துவதனையும்வருதல்.)

**சச்சந்தன்:—** சரசாங்கி! என்கண்மணியே! உன்னைக்காணவும்பெற்றேன்! நின் சிற்றன்னை சொற்கேட்டு நடந்தவென்னை மன்னிப்பாய்! நின்னை வேதவிதிப்படி அழகானந்தருக்கு மணம்புரிவித்துச் சோழநாட்டைச் சீதனமாயளிக்கின்றேன்! இந்துவதனே! நீயும் உன்னரசியோடுசென்று அவளுக்குச் சிறந்ததோழியாயிரு!......... குழந்தாய்! உனக்கேதாவது வரம்வேணுமா? கேள்.

(சரசாங்கி ஒன்றுங்கூருமல் இந்துவதனையுடன் திரும்பிப்போதல்.)

**சச்சந்தன்:—** குழந்தாய்! நில். போகாதே! கோபமாயிருக்கின்றாய்! நின்னைச் சாந்தப்படுத்த யானும் நின்னெடு வருகின்றேன்! (போதல்.)

**அழகானந்தன்:—**

(இறைவனைத் துதித்துப் பாடுதல்.)

கங்கையைத் தரித்த வெந்தை கழலிணை மனங்கொண் டார்க்குப்
பொங்கரு ளுருவத் தோடும் பொலிவுற வவர்முற் றோன்றிச
சங்கையி லன்மை யாவுந் தவிர்த்திடு வான வன்ற
னிங்கித விளையாட் டெல்லா மியாவரே யறிதற் பாலார்.

(யாவரும்போதல்.)

## ஐந்தாமங்கம் முற்றிற்று.

# சரசாங்கி நாடகம்

## முற்றிற்று.

---

# மங்களம்.

இராகம் - சுருட்டி. தாளம் - ஆதி

## பல்லவி.

மங்களம் மங்களமே - ஜெயமங்கள
மங்களம மங்களமே

## அநுபல்லவி.

ஐங்கரங்கொண்டேயன்பாககருணைபொங்குகணேசருக்கும்
செங்கையின வேலாயுதந் திகழ முருகேச குகருக்கும்(மங்களம்)

## சரணங்கள்.

தில்லைமன்று ளாடிடுபாதர்க்கும - உலகமீன்ற
சிவகாமி யம்மை யாருக்கும
சொலலின் கிழத்தியெனும் துங்கமார் வாணிக்கும்
மெலலியர் திருமகளச மேதன் சக்ர பாணிக்கும(மங்களம்)

அழகானந்த னென்பாற்கும - கருணையெனும்
அருமை நேசங் கொண்டோர்க்கும்
வழுவி லெயாடுடை யிந்துவதனையாம பாங்கிக்கும
பழுதில கற்புநிலையைப படைத்த சரசாங்கிக்கும்(மங்களம)

முத்தமிழ்ப பாவலோர்க்கும் - நற்குணரென
மொழியு மெல்லுலகோர்க்கும
சித்திவிக்டோரியாட்கும ஷேக்ஸ்பியா கணனுக்கும
சதயநெறிகைக்கொள்ளும சலசலோசனனுக்கும(மங்களம)

# வாழ்த்து.

## கோச்சகக் கலிப்பா.

துங்கவழ கானந்தத் தூயநறகற பகததருவும
நஙகைசர சாஙகியெனு நறுஙகாம வலலியுஞசீ॥
பொங்குறுநந் நாடகமாம் புகழபொருநது மெழிலியுமே
மங்களமா நிலவுலகின் மன்னியென்றும வாழியவே.